# வஸந்தோத்யானம்

அல்லது

## நான்கு பக்கிரிகள் கதை.

(டில்லி கவி மீர் அம்மான் இந்துஸ்தானியி லியற்றியது).

பண்டிட் S. M. நடேச சாஸ்திரியாரால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

முதல் பாகம்.

# முகவுரை.

தமிழில் அழகான பல கதைப்புத்தகங்களை இயற்றிய மிகக் கீர்த்திபெற்ற காலஞ்சென்ற பண்டிட் S. M. நடேச சாஸ்திரியார் எழுதிய நூல்களில் இது ஒன்று. "வஸந்தோத்யானம்" அல்லது நான்கு பக்கிரிகளின் கதையானது டெல்லிமா நகரில் இருந்த மீர் அம்மான் என்ற கவியால் உருது பாஷையில் எழுதப்பட்டுள்ளது. உருது அல்லது ஹிந்துஸ்தானி பாஷையில் எழுதிய அந்நூலின் கர்த்தாவாகிய மீர் அம்மான் தன் கதையின் வரலாற்றை ஆரம்பிப்பதன்முன் தெய்வஸ்தோத்ரமான பல வாக்கியங்களைச் சொல்லி, உருது பாஷையின் உற்பத்தியைக் குறித்தும் தனது வம்ச சரித்திரத்தைக் குறித்தும் இந்தக் கதை ஆதியில் இயற்றப்பட்ட காரணத்தைக் குறித்தும் சுருக்கமாய் வரைந்திருக்கிறார். இத்தேசம் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரின் கீழ் ஆங்கிலேயரால் ஆளப்பட்டு வந்த காலத்தில் இக்கதையை மீர் அம்மான் எழுதினார். இத்தேசத்தின் வடபாக முழுவதும் உருது பாஷையே வழங்கப்பட்டதால், தேசத்தை ஆண்டுவந்த ஆங்கிலேயர் அந்த பாஷையை நன்றாய் கற்றறிந்து இந்துஸ்தானத்திலுள்ள ஜனங்களுடன் நேரில் சம்பாஷித்து ஆட்சி புரியுந் தொழிலை செவ்வையாய் நடத்த வேண்டுமென்ற கருத்துடன் இக்கதை ஹிந்துஸ்தானி பாஷையில் எழுதப்பட்டதாகும். ஹிந்து, முஸ்லிமான், பெரியவர்கள், சிறியவர்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் எளிய ஹிந்துஸ்தானி நடையில் எழுதப் பட்டது. அம்மாதிரியாகவே, பண்டிட் நடேச சாஸ்திரியாரும் ஆண் பெண் சிறுவர்கள் முதலிய எல்லா தமிழர்களும் இக்கதையை நன்கறியும்பொருட்டு எளிய தமிழ் நடையில் எழுதியிருக்கிறார் என்பதை நாம் குறிப்பிடவேண்டும். இந்த இனிய கதையை வாசித்தறியும் பொருட்டாகிலும் ஹிந்துஸ்தானி பாஷையை கற்பார்களென்று மீர் அம்மான் நினைத்தார் என்பதை நாம் கவனிக்கும்போது, இக்கதை எல்லோருடைய

மனதையும் கவர்ந்துகொள்வதில் நிகரற்றதென்று நன்கு விளங்கும். டில்லியிலிருந்த அமீர் குஸ்ரு என்பவர் தமது குரு தேக அசௌக்கியமாயிருந்தால் குருவின் மனதைக்களிக்கச் செய்ய முதன் முதலில் இக்கதையை இயற்றி தினந்தோறும் சொல்லிவந்தாராம். அன்று முதல் இக்கதை பார்ஸி பாஷையில் எழுதப்பட்டு பிறகு மீர் அம்மானால் உருது பாஷையில் எழுதப்பட்டது. இக்கதை ஆதியில் எவ்விதம் ஒரு நோயாளியின் மனதைக்களிக்கச் செய்ததோ அவ்விதமே இதனை இனிபடிப்போருடைய மனதையும் ஆனந்தக்கடலில் இருக்கச்செய்யுமென்று நினைக்கிறோம்.



# வஸந்தோத்யானம்

## அல்லது

# நான்கு பக்கிரிகள் கதை.

—∘∘◇∘∘—

உவில்லியம் கோட்டை (அதாவது கல்கத்தா) கலாசாலையின் காரியத்தை நிர்வகிப்பவர்களாகிய பிரபுக்களுக்கு மீர் அம்மான் என்ற டில்லி கவி எழுதிக்கொண்ட மனு:—

குணத்தை ஆராய்ந்தறிந்து அதற்கேற்றபடி மரியாதை செய்ய வல்ல பிரபுக்களை ஈசன் என்றென்றைக்கும் காப்பாற்றுவாராக. பிரபுக்களிட்ட கட்டளைப்படியே நான்கு பக்கிரிகள் கதையைப் படாத பாடுகள் ஆயிரம் பட்டு "உர்து எமி அல்லா" என்ற பாஷையில் "பாக் ஓ பஹார்" அல்லது 'வஸந்தோத்யானம்' என்ற பெயரிட்டு இவ்வெற்றுடம்பு செய்யலாயிற்று. ஈசனருளால் இவ்வுத்தியானம் எல்லாப் பிரபுக்களும் உலாவப்பெற்ற பெருமையால், அதாவது, இப்புத்தகத்தை அரங்கேற்றி எல்லாரும் ஒப்புக்கொண்டதால், [illegible] பெறலாயிற்று. அதனால் நானும் இதன் பயனை இனி மேன்மேலும் அனுபவிக்கலாம் என்ற நம்பிக்கை எனக்கும் இப்பொழுதுதான் உதிக்கலாயிற்று. மொட்டு போல் அரும்பியிருந்த என் உள்ளமும் ரோஜாமலர்போல் மலரலாயிற்று. ஷேகிம் பரதேசி என்ற கவி தாம் எழுதிய ஹாதமநாமாவில் தம்மைப்பற்றி சொல்லிக்கொண்டதாவது:—"எவ்வளவோ துக்கங்களை முப்பது வருஷகாலம் அனுபவித்தேன் என்றாலும், இப்பாரஸீக சரித்திரத்தை பாரஸீக [illegible] உயிராக் கொடுத்தேன்." அவ்வண் [illegible] பாஷையை ஏற்படுத்திய காரணத்தால் [illegible] செய்தேன்.

பிரபுக்களே! நீங்கள் குறைகளை அறிந்தவர்களன்றோ! ஆகையால் என்னைப்பற்றி விண்ணப்பஞ் செய்துகொள்ள அவசியமே இல்லையன்றோ. தெய்வமே! க்ஷேமம் என்ற உன் நக்ஷத்திரம் என்றென்றைக்கும் பிரகாசிக்கக்கடவதாக. கருணாகரக் கடவுளே! பரிபூரணானந்தமே! நின் திருநாமமே சரணம்.

நிஷ்கள ரூபியே! படைப்பதில் உன் சக்தி என்ன சக்தி. ஒரு கைப்பிடி மண்ணால் எத்தனைவிதங்களான முகங்கள், எத்தனை விதங்களான உருவங்கள் நீ செய்துவிட்டாய்! கருப்பு, வெளுப்பு என்ற இரண்டு வர்ணங்கள் நிச்சயமாக ஏற்பட்டபோதிலும் ஒரே விதமான மூக்கு, காது, ஒரே விதமான கைகால்கள் எல்லாருக்கும் நீ கொடுத்திருக்கின்றாய். அப்படியிருந்தபோதிலும், ஒருவனுடைய உருவம் மற்றொருவனுடைய உருவத்தை ஒத்திருக்க ஒருபொழுதும் எங்கும் கண்டதேயில்லை. ஒரு கோடி ஜனங்களுக்குள் நாம் யாரைத் தேடுகின்றோமோ அவனை அங்க அடையாளத்தால் கண்டு பிடிக்கின்றோம். நாம் காணும் ஆகாயம் என்பது உனது சத்தியம் என்ற சமுத்திரத்தின் ஓர் குமிழியன்றோ! பூமியோ அந்தச் சமுத்திரத்தின் ஓர் அணு. ஆனால் இதல்லவோ வித்தை! இப்பூமியின் மேல் சமுத்திரம் ஆயிரக்கணக்காய் எவ்வளவோ அலைகளடிக்கின்றதென்றாலும், இப்பூமிக்கு அது ஒருவிதத் தீங்கும் செய்ய முடிவதில்லை. எவனொருவனுக்கு இவ்வித அபார சக்தியும் மகிமையும் இருக்கின்றனவோ அவனைப்பற்றிப் புகழவும் துதிக்கவும் மானிட வாக்குக்குச் சக்தி சொற்பமேனுமுண்டோ? வாயை மூடிக்கொண்டு மௌனமாயிருத்தலன்றோ மரியாதை? மானிட வாக்குக்கு எதைத்தான் சொல்லவேண்டுமென்றாலும் சொல்லுதல் எளிது. ஒன்றும் சொல்லாமல் மூச்சே விடாமல் வாயை மூடிக்கொண்டு இருப்பதன்றோ மேன்மை? ஆகாசமுதல் பூமிவரையில் உள்ள எல்லாப் படைப்புகளும் எவன் கைவேலையாயிருக்கின்றனவோ அவன் புகழைப்பற்றி நான் எழுதுவதற்காக ஏற்பட்டால் எனக்கு சக்தி எவ்வாறு உண்டாகும்? "நான் அவனை அறிய முடியவில்லையே" என்று [illegible] சொல்லியிருக்க அதன்பிறகு எவனுவது ஒருவன் [illegible] அறிந்ததாய்ப் பாசாங்கு [illegible]

பெரும் மூடனன்றோ! இரவும் பகலுமாகிய சந்திரனும் சூரியனும் அவன் சிருஷ்டித்த சிருஷ்டிகளைப் பார்த்து வியப்போடு திரிந்து கொண்டிருக்கிறார்களன்றோ! எவனொருவனுக்கு இரண்டாவன் என்றாவது அல்லது ஒப்பானவன் என்றாவது மற்றொருவனில்லை யோ அவ்வாறு ஒருவனாயிருப்பவனுக்கு ஈசன் என்ற திருநாமம் எல்லாவிதத்திலும் ஒத்திருக்கின்றதன்றோ! ஆனால் இம்மட்டும் நான் அறிவேன். எல்லாவற்றையும் படைத்துக் காப்பாற்று கின்றவன் அவனே, அவனது கருணையும் கடாக்ஷமும் ஒவ்வொரு விதத்தாலும் என்னிடம் இருக்கின்றது என்பது மட்டும் திண்ணம்.

அவன் அருள் அவன் நண்பனான பயமபர்மேலும் இருக்கின்ற தென்பது திண்ணம். அந்நண்பனுக்கென்றே ஆகாயத்தையும் பூமி யையும் அவன் படைத்தான். பயமபர் என்ற பட்டத்தையும் கௌரவத்தையும் அளித்தான்.

முஸ்தபாவின் நிர்மலமான தேகம் ஈசன் தேகத்தின் ஓர் ஒளி; ஆகையால் அது தன்னிழல் நிலத்தில் சாயாமல் இருந்ததென்று எல்லோரும் சொல்லுகின்றார்கள். அப்பெயர் பெற்றவருடைய புகழைக்கூடிய மட்டும் எடுத்துச் சொல்ல எனக்கு வல்லமை ஏது? ஆனால் பேச்சில் தேர்ந்த வல்லவர்கள் தாங்கள் ஏதோ சொல்லுவ தாய் எண்ணிக்கொள்ளுவது ஒரு பெரும் வழக்கம்.

அவருக்குப்பின் பட்டம் பெற்ற 12 இமாம்களுக்கும் ஈசனருள் இருக்கக்கடவதாக. அவர்கள் நற்பதம் பெறுவார்களாக.

ஈசன் தோத்திரமும் பயமபர் புகழும் இவ்வளவுடன் நிறுத்தப் பெற்றன. இனி நான் ஆரம்பித்திருக்கும் காரியத்தைப்பற்றிப் பேசுகின்றேன். ஜகதீசா, நீ அனுப்பிய நபியின் ஸந்ததிகளுக்காக நானிப்பொழுது எழுதப்புகும் இக்கதை பெரியோர் சிறியோர் முதலான எல்லோருடைய உள்ளத்துக்கும் ஏற்றதாகவிருக்கும்படி அருள்புரிவாயாக.

---

[illegible]

## கதையின் வரலாறு.

இந்தக் கிரந்தம் எழுதுவதற்குக் காரணம் என்னவெனில்:— ஹிஜ்ரி 1215—6 ஆண்டுக்குச் சரியான இங்கிலீஷ் 1801, பசலி 1207 வருஷம், பிரபுக்களுக்கெல்லாம் பிரபுவாகிய மார்க்விஸ் வெல்லெஸ்லி லார்ட் மார்னிங்டன் கவர்னர் ஜெனரலாக விருந்தார். அவரைப்பற்றிப் புகழவேண்டுமென்றால் புத்தியே திகைக்கின்றது. ஏனெனில் அவரிடம் ஈசன் பெரியவர்களுக்கிருக்கவேண்டிய எல்லா *நற்குணங்களையும் தொகுத்து அமைத்திருந்தார். ஏதோ இத்தேசம் பண்ணியிருந்த புண்ணியத்தால் அத்தன்மையான பிரபு இதை ஆளவந்தார்.

அவர் அவ்வாறு வந்ததாலன்றோ எல்லா ஜனங்களும் இவ்வளவு க்ஷேமத்தையும் சந்தோஷத்தையும் அனுபவிக்கின்றார்கள். இப்பொழுது ஒருவன் மற்றொருவனைக் கெடுக்கவாவது தீங்குசெய்யவாவது மனத்தாலாவது துணியமுடியுமா? புலியும் ஆடும் இவர் காலத்தில் ஒரே துறையிலன்றோ நீர் அருந்துகின்றன. அவரை வாழ்த்திக்கொண்டன்றோ எல்லா ஏழைகளும் பிழைக்கின்றார்கள். அவர் காலத்தில் எல்லாச் சாஸ்திரங்களுடைய பரிசோதனையும் இந்நாட்டிலுண்டாயிற்று. புத்திமான்களான பிரபுக்களுக்கும் ஒருவித அவா பிறந்தது. அது யாதெனில் உருது பாஷையை நாம் நன்றாகக் கற்றறிய வேண்டும், இந்துஸ்தானத்தி லிருக்கும் ஜனங்களுடன் நாம் நேரில் பேசி சம்பாஷிக்க வேண்டும், தேசத்தை ஆளும் வேலையை நாம் சரியாய்ச் செய்ய வேண்டும் என்பதுவரம். இக்காரணத்தால் இதே வருஷத்தில் எத்தனையோ புஸ்தகங்கள் அவர்களுடைய உத்தரவுப்படி அப்பாஷையில் இயற்றப்பட்டு வெளிக்கிளம்பின.

புத்திமான்களாயும், ஹிந்துஸ்தானி பாஷையைப் பேசுகின்றவர்களாயு மிருக்கிற பிரபுக்களுக்கெல்லாம் வந்தனம் செய்து கொள்ளுகின்றேன். இந்த நான்கு பக்கிரிகளின் கதை முதல் முதல் டில்லியிலிருந்த அமீர் குஸ்ரு என்பவர் (பின் சொல்லப் போகிற காரணத்துக்காக) செய்தார். [illegible]

தீன் ஒளலியா என்றொருவரிருந்தார். அவருக்கு மற்றொரு பட்டப் பெயர் ஸுலீலர்பக்கடி என்பார்கள்: அவருடைய திருமாளிகை டில்லிக் கோட்டையிலிருந்து மூன்று குரோச தூரத்தில் சிவப்பு வாசலுக்கப்பால் மட்டியா வாசலுக்கு எதிராகவிருந்த சிவப்பு வாசலுக்குச் சமீபத்திலிருந்தது. அந்தக் குரு ஒரு சமயத்தில் தேக அசௌக்கியப்பட்டு வியாதியால் வருந்தலானார். அப்பொழுது தமது குருவின் மனத்தைக் களிப்பிக்க அமீர் குஸ்ரு தினந்தோறும் இக்கதையைச் சொல்லி வந்தார். அவர் நோயால் வருந்திய காலமெல்லாம் அவருடனே இருந்து பணிவிடை செய்து வந்தார். ஈசனும் சொற்ப காலத்தில் அவர் தேகத்தைச் சௌக்கியம் பண்ணினார். அவர் தாம் தலைக்கு ஜலம் விட்டுக்கொண்ட தினத்தில் இக்கதைக்குப் பல சுருதி மாதிரி ஓர் சாற்றுக்கவி கூறினார்:—"எவனொருவன் இக்கதையைக் கேட்கின்றானோ அவன் ஈசனருளால் நோயற்ற வாழ்வுள்ள தேகம் பெறுவானாக." அன்று முதல் இக்கதை பார்ஸி பாஷையில் இயற்றப்பட்டு எல்லாராலும் படிக்கப்பட்டு வந்தது.

இப்பொழுது நான் ஹிந்துஸ்தானியில் இதைச் செய்த காரணம் சொல்லுகின்றேன். ஈசன் அருள் பெற்றவர்களுள் முதல்வராய், எல்லா உத்தமர்களுக்குள்ளும் சிரேஷ்டரான ஜான்கில்க்ரிஸ்ட் (அவர் பாக்கியம் கங்கையும் யமுனையும் எக்காலம் வரையில் ஓடுகின்றனவோ அக்காலம் வரை பொங்கக் கடவதாக!) என்பவர் என்னைப் பார்த்து இவ்வாறு கட்டளையிட்டார். நீர் இக்கதையை ஹிந்துஸ்தானியில் எழுதும்; ஹிந்து, முஸல்மான், பெரியவர்கள், சிறியவர்கள், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகிய எல்லா ஜனங்களும் எவ்வண்ணமாய்த் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுவார்களோ அந்த நடையில் மொழிபெயர்த்தெழுதும். அவர் எனக்கிட்ட கட்டளைப்படியே எப்படி ஒருவன் மற்றொருவனோடு ஸம்பாஷிப்பானோ அப்படித் தெளிவான நடையில் எழுத ஆரம்பித்தேன்.

நீர் அம்மானுமிய நான் டில்லியில் வெகு அடாசதி யாகையால் முதல் முதல் எனது கதையை வெளியிடுகிறேன். என் முன்னோர்கள் [illegible] அரசாண்ட காலம் முதல் தலைமுறை தலை

முறையாய் ஒவ்வொரு அரசனிடமும் வெகு அபிமானத்துடனும் அன்புடனும் சேவித்து வந்தார்கள். அவ்வரசர்களும் காப்பாற்றும் அபிமானத்தை எப்பொழுதும் மேற்கொண்டவர்களாய் எங்களுடைய சேவையை அபிமானித்து எங்களை எப்பொழுதும் ஆதரித்து வந்தார்கள். பல ஜாகீர்கள், பல பிருதுகள், வெகுமதிகள் இவைகளை எங்களுக்கு ஏராளமாகக் கொடுத்தார்கள். எங்களை ராஜாங்கத்து உத்தியோகஸ்தர்களென்றும் பரம்பரையாய் ராஜவிசுவாசிகள் என்றும் ஒப்புக்கொண்டு, ராஜ சாஸனங்களில் எழுதி அச்சாஸனங்களை அரண்மனை தஸ்தரத்தில் வைத்துக் கட்டினார்கள். எந்த வம்சத்தைக்கொண்டு பல வம்சங்கள் வெகு க்ஷேமமாக வாழ்ந்தனவோ அவ்வம்சம் இப்போது ஒன்றுமில்லாமல் அழிந்துபோகவே, மற்ற விஷயங்களைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? நன்றாகத் தெரிந்த விஷயத்தை வெளியிடுவானேன்? அதன் பிறகு ஜாட்காட்டை பிலிருந்திய நூர்ஜமாஹல் என்பவர் எங்கள் முன்னோர்களுடைய ஜாகிரை ஐப்தி செய்தார். ஆப்கன் தேசத்தாராகிய அஹ்மதுஷா எங்கள் வீட்டையே கொள்ளையிட்டார். இவ்வண்ணம் பலவிதமான துக்கங்கள் அனுபவித்த பிறகு நான் பிறந்து வளர்ந்த என்னுடைய ஜன்ம பூமியாகிய அந்நகரத்தை விடும்படியாயிற்று. எந்தக் கப்பலுக்கு மாலுமி இல்லையோ அது எப்படி மூழ்காமலிருக்கும்? நானும் நாசம் என்ற கடலில் மூழ்கலானேன். சிந்தை என்ற கடலில் ஆழ்ந்தேன். மூழ்குகின்றவனுக்குப் பிடிப்புக்கு ஒரு திரணம் (துரும்பு) கிட்டினாலும் அது வெகு பெரிதல்லவா? ஏதோ சில வருஷங்கள் அவ்விடத்தில் என்னும் நகரத்தில் சுகமோ கஷ்டமோ காலத்துக்கு ஏற்றபடி அனுபவித்துக்கொண்டு கழித்தேன். கடைசியாய் அவ்வூரையும் விட்டுக் கால் மண்ணைத் தட்டிக் கொண்டு புறப்படும்படியாயிற்று. சித்தமும் படியளப்பவன் எனக்கு ஏற்றபடி அவ்விடத்திலொன்றும் கொடுக்கவில்லை. என் ஸம்சாரத்தை அவ்விடத்திலேயே விட்டுவிட்டுப் பிழைக்க வழி தேடுகின்றவனாய்த் தனியாகப் பயணித்து நகரங்களுக்குள் பிரதான நகரமாகிய கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தேன். சில காலம் ஒரு வேலையுமின்றி இருந்தேன். அதன் பிறகு [illegible] பிள்ளைக்கு என்னை [illegible] அவருடைய [illegible]

[illegible]ய மீர் முகம்மது காஸிம்கானுக்கு உபாத்யாயராக நியமித்தார்.
ஏறக்குறைய இரண்டு வருடகாலம் அவ்விடத்திலேயே இருந்தேன்.
எனக்கு அதில் ஒருவித நன்மையும் விளங்கவில்லை. அதன் பிறகு
முன்ஷி மீர்பகதூர் ஆலி என்பவர் தயவால் நான் ஜான் கில்க்ரைட்ஸ்
ஸாஹிப் ஸமூகத்தில் கொண்டுபோய் விடப்பட்டேன். அம்மகானது
மேன்மை என்றென்றைக்கும் ஓங்குவதாக! ஏதோ என் நல்ல திருஷ்
டத்தால் அவ்வண்ணமான பெரியவருடைய ஸம்ரக்ஷணை எனக்குக்
கிட்டியது, அப்பொழுதுதான் இனிமேலாவது நமக்கு நல்ல
காலம் நெருங்கிற்றென்று நான் கருதலானேன். அதுவே வேண்
டாம்; இனி ஒரு கவளம் சோறுவது நிச்சிந்தையாய்ப் புசித்துவிட்
டுக் காலை நீட்டிக்கொண்டு தூங்கலாமல்லவா; இதுவே பெரும்
லாபம்; இதுவே போதும், என்று நினைத்தேன். ஏதோ இளையவர்
களும் முதியோர்களுமாய் பத்துப் பெயர்கள் என் வீட்டில் என்னால்
உணவு பெற்று என் யஜமானை வாழ்த்துகின்றார்களே! ஈசன் அவ்
வண்ணமான வாழ்த்துக்களை அங்கீகரிப்பாராக.

இது நிற்க, உருது பாஷை உற்பத்தியான விதத்தை நான்
என் முன்னோர்கள் முகமாய்க் கேட்டபடி சொல்லப்புகுகின்றேன்.
டில்லியென்னும் பட்டணம் பழைய காலம் தொடங்கி ஹிந்துக்களு
டைய ஆளுகையில் இருந்துகொண்டேயிருந்தது. ஹிந்து
ராஜாக்களும் குடிகளும் அந்நகரத்தில் எந்நாளும் வாழ்ந்து வந்திருக்
கின்றார்கள். தங்களுடைய பாஷையையே பேசிக்கொண்டிருக்கிறார்
கள். சற்றேறக் குறைய ஓராயிரம் வருஷங்களுக்கு முன்பு அந்
நகரத்தில் முஸல்மான்களுடைய ஆளுகை தொடங்கிற்று. முதல்
முதல் சுல்தான் முகம்மது கஜினி அவ்விடம் வந்தார்; அதன் பிறகு
கோரியும் லோடியும் அவ்வூரில் பாத்ஷாக்களானார்கள். இவ்வண்ணம்
ஜனங்களில் கலப்பு உண்டாகிய காரணத்தால் ஹிந்துக்களும் முஸல்
மான்களும் தங்கள் தாங்கள் வழக்கமாகப் பேசி வந்த பாஷையிலும்
சிறிது கலப்பு உண்டாயிற்று. கடைசியாய் அமீர் தைமூர் என்ப
வன் ஹிந்துஸ்தானத்தையே கைப்பற்றினான். இன்றைக்கும் அவன்
வம்சத்தார் தாம் ஹிந்துஸ்தானத்து அரசர்களாகவிருக்கின்றார்கள்.
அவன் வந்த [illegible] காலம் தொட்டு அவன் சேனையைச் சேர்ந்த

னைடன் டில்லியிலேயே நிலைபெற்று நின்றன. அக்காரணத்தால் அங்காத்தின் கடைத் தெருவுக்கு உருது என்ற பெயர் வழங்கப் பெறலாயிற்று. அதன் பிறகு பட்டாண்களிடம் வெகு அவஸ்தைப் பட்ட ஹுமாயூன் வெறுப்புற்றவனாய் வேறு நாடு (பாரஸீகம்) போய்ச் சேர்ந்தான். கடைசியாய் அங்கிருந்து திரும்பி வந்து தன் னுடன் கலகம் செய்த பட்டாண்களை நிர்மூலமாக அழித்தான். மறு படியும் கலகம் செய்வாவது சண்டையிடவாவது ஒருவனாவது மிருந்து நிற்கவே யில்லை.

எப்பொழுது அக்பர் பாத்ஷா சிங்காதனமேறினாரோ அப் பொழுதே அவருடைய நற்குணத்தையும் ஒப்பற்ற உதாரகுணத்தை யும் கேட்டு எல்லா ஜாதியார்களும் பல தேசங்களிலிருந்தும் அவர் ராஜ்யத்துக்குள் விரைந்து வந்து குடியேறினார்கள். ஆனால் அப் பொழுது ஒவ்வொரு ஜாதியாருடைய பேச்சும் பாஷையும் வெவ் வேறாகவே யிருந்தது. ஒரேயிடத்தில் ஒருங்கு கூடி ஒருவருக் கொருவர் கொடுத்தல், வாங்கல், வியாபாரம், வர்த்தகம், கேள்வி உத்தரவு முதலிய வியவகாரங்கள் நடக்க ஆரம்பித்ததும், அவை களுடைய கலப்பு உருது என்ற ஓர் பாஷையாக ஏற்பட்டது. ராஜாதி ராஜன் ஷாஜஹான் மீர் என்பவர் டில்லியைச் சுற்றி அழ கான கோட்டையைக் கட்டி ஜம்மேமஸ்ஜித் என்ற கோரியைக் கட்டி, டில்லி நகரத்தின் சுவர்களையும் எழுப்பி, மயில் ஸிம்ஹாஸனத்தின் மேல் நவரத்தினங்களை இழைத்துப் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டு விளங்கிய தனது விதானத்தை விரித்தும், நவாப் அலி மாதான்கான் என்பவர் வாய்க்கால் வெட்டி டில்லிக்கு நீர் கொண்டு வந்து விட்டும், வெகு சந்தோஷமடைந்து அவ்வாறு கால் வாய் வெட்டப்பட்டதற்கு உற்சவம் கொண்டாடி அந்நகரத்தையே தமது ராஜ்யத்திற்குப் பிரதான நகரமாகச் செய்யலானார். அவரு டைய நகரத்துக்கு அன்றுமுதல் ஷாஜஹானாபாத் என்ற பெயர் வழக்கத்தில் வந்தது. டில்லி வேறு இது வேறு என்றாலும் அது பழைய பட்டினம்; இது புதியபட்டினம். இப்பட்டினத்தின் கடை வீதிக்கு "உருது எமு அல்லா" என்ற பெயர் இடப்பட்டது.

அமீர் [illegible] காலம் தொடங்கி முகம்மதுஷா காலம் வரை யிலும், இன்னும் பார்க்கப்போனால் [illegible]

ஆலம் கிர் காலம் வரையில் நல்ல முறை - நல்ல முறையாக இவ்வம்சத்திலேயே டில்லி சக்கிராதிபத்தியம் நிலைபெற்று இருந்தது. உருது பாஷையும் மேல் மேலும் நாகரீக மடைந்து, அதற்கொப்பான பாஷை இவ்வுலகத்திலேயே ஒரு காலத்திலும் இல்லவே இல்லை என்று சொல்லலாமாக அவ்வளவு அழகாக விளங்கிற்று. ஆனால் ஆராய்ந்தறிந்து இவ்விதம் தீர்ப்புச் சொல்ல நிஷ்பக்ஷபாதியான ஒரு நியாயாதிபதி வேண்டுமல்லவா. அதற்காக வென்றே ஈசன் இப்பொழுது எவ்வளவோ சிரமப்பட்டு வெகு நாளைக்குப் பிறகு வெகு புத்திமானும் பகுத்தறிவில் தேர்ந்தவருமான ஜான் கில்க் ரைஸ்ட் என்பவரைச் சிருஷ்டித்தார். இம்மகான் தமது சொந்த புத்தியாலும், அறிவாலும், முயற்சியாலும், சிரமத்தாலும், இப்பாஷையை அறிந்துகொள்ள வழிநூல்கள் இயற்றியிருக்கின்றார். இக்காரணத்தால் இந்துஸ்தானத்தின் பாஷையாகிய இந்த உருது எங்கும் விளங்குகின்றதாய், புதுவித சிறப்புப் பெறலாயிற்று. மற்ற பாஷைகள் பேசும் ஒருவனும் தனது பாஷை, பாகை, நடை உடை இவைகள் அழகற்றவைகள் என்று ஒருபொழுதும் எண்ணவேமாட்டான். கிராமத்தான் நகரத்துப் பேச்சைப் பழிப்பான். தன்னைச் சேர்ந்ததெல்லாம் மேன்மையுள்ளன என்றே எண்ணிக்கொள்ளுவான். எந்த அபிப்பிராயம் நியாயமான அபிப்பிராயம் என்பது படித்தவர்களுக்கல்லவா தெரியவேண்டும்?

அஹமத்ஷா அப்தாலி காபூலிலிருந்து வந்து டில்லி நகரத்தைக் கொள்ளையிட்டபொழுது ஷாஆலம் கீழ் நாட்டிலிருந்தார். இந்நகரத்தைக் காப்பாற்றுவன் ஒருவனுமில்லை. அரசில்லா ஊராயிற்று. எது வரையில் அரசாக்ஷியோ அது வரையிற்றான் நகரத்தின் க்ஷேமமும் என்பது உண்மையல்லவா? திடீரென்று ஆபத்து விளையவே இந்நகரத்துப் பிரதான ஜனங்கள் தங்கள் மனத்துக்குத் தோன்றிய இடங்களுக்கு ஓடிக் கலைந்து போனார்கள். அவர்கள் எந்தேசங்களுக்கு ஓடினார்களோ அத்தேசத்தார்களோடு கலந்த காரணத்தால் தாங்கள் முன் பேசி வந்த பாஷையில் மாறுதல்கள் ஏற்பட்டன. இவ்வாறு 5, 10 வருஷகாலம் வேறு நாட்டில் வசித்து மறுபடி திரும்பி வந்து இவர்கள் டில்லியிலேயே சேர்ந்து ஸ்திரமாக

வசிக்கலானார்கள். அப்பொழுது அவர்கள் எவ்விதமாய் டில்லி பூர்வ பாஷையைச் சரியாகப் பேசவல்லவர்ராவார்கள்? எங்கேயாவது ஓர் இடத்தில் அவர்கள் தவறித் தான் பேசியே தீரவேண்டும். ஆனால், கஷ்டமோ துக்கமோ எல்லாவித சங்கடங்களையும் முற்றிலு மனுபவித்துக்கொண்டு அந்த 10 வருஷமும் டில்லியை விட்டு ஓடாமல் அதிலேயே ஸ்திரமாக விருந்தவர்களும், தங்கள் முன்னோர் கள் 5 அல்லது 10, தலைமுறைகளாக டில்லியிலேயே வசித்து வரப் பெற்றவர்களும், டில்லியிலேயே பிரபுக்கள் சங்கத்தில் சக வாசம் செய் துவந்தவர்களும், ஜனஸமூகத்திலும் உற்சவத்திலும் கலந்து அடிபட்டிருந்தவர்களும், டில்லித் தெருவிலேயே அலைந்து கொண்டிருந்தவர்களும், அவ்விடம் விட்டு வெளிப்போயும் தம் பாஷையை மற்ற பாஷைகளுடன் கலக்கவிடாமல் காப்பாற்றி வைத் துக்கொண்டிருந்தவர்களும் பேசும் பேச்சு நிச்சயமாய் அழகான பேச்சாகத்தான் இருந்தே தீர வேண்டும்.” இந்தத் தாழ்ந்தவனும் (மீர் அம்மான்) எவ்வளவோ தேசங்கள் அலைந்து திரிந்து அவ்விடங் களிலுள்ள காட்சிகளை எல்லாம் பார்த்துக்கொண்டு கடைசியாய் இந்நகரம் வந்து சேர்ந்தவன்.

---

## II. கதையின் ஆரம்பம்

இப்பொழுது நான் கதையை ஆரம்பிக்கின்றேன், சற்றே காது கொடுத்துக் கேட்டு அதன் யோக்யதையைப் பற்றி உங்களுக் குள்ளேயே தீர்மானம் பண்ணிக்கொள்ளுங்கள். “நான்கு பக்கிரி கள்” என்ற கதையில் இவ்*வண்ணம் எழுதப்பட்டிருக்கின்றது. அக்கதையைச் சொன்னவரும் அவ்வாறே சொல்லியிருக்கின்றார்:— என்னவெனில், முற்காலத்தில் ரூம் என்னும் ராஜ்யத்தில் ஒரு பெரிய சக்கரவர்த்தி யிருந்தார். நௌஷிர்வான் என்பவருடைய நியாயமும் ஹாதின் என்பவருடைய தயையும் அச் சக்கரவர்த்தி யிடமியற்கையாகவே யமைந்திருந்தன வென்று சொல்லலாம்.

* அதாவது நான் கீழே சொல்லப்புகும் வண்ணம்.

அவர் பெயர் ஆஸாத்பஸ்த. அன்றியும் அவருடைய பிரதான நகரம் குஸ்தன் துனியா (Constantinople) அதற்கு மற்றொரு பெயர் இஸ்டம்பூல் என்றும் சொல்லுவார்கள். அவர் காலத்தில் குடிகள் வெகு சுகப்பட்டார்கள்; கஜானு (பணப்பெட்டிகள்) எப்பொழுதும் நிரம்பியிருக்கும். சேனை திருப்தி யடைந்திருக்கும். ஏழை அனுதைகள் எப்பொழுதும் நிச்சிந்தையா யிருப்பார்கள். அக்காலத்தில் எல்லாரும் வெகு சௌக்ய மடைந்து க்ஷேமமாய் வாழ்ந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் பகல் முழுமையும் உற்சவமேயாம். இரவு முற்றிலும் ஷபேபராத் (அதாவது இருத்தின தீபோற்சவம்) அதல்லாமல் நாட்டிலிருந்த அவ்வளவு திருடர்கள், கொள்ளைக்காரர்கள், முடிச்சவிழ்க்கிகள், மோசக்காரர்கள், துஷ்டர்கள் முதலிய எல்லாரையும் அவர் முற்றிலும் அழித்து, அவர்களுடைய வாசனை என்பதே தமது நாட்டிலில்லாமற் செய்யலானுர். இரவு முழுமையும் ஒரு வீட்டுக் கதவாவது மூடப்படுகிறதே யில்லை. கடைத் தெருவில் எல்லாக் கடைகளும் திறந்தே வைக்கப்பட்ட டிருக்கும். பிரயாணிகளும் வழிப்போக்கர்களும் காடுகளிலும் பொட்டல்களிலும் இரவு வழி நடக்கும் பொழுதெல்லாம் பொன் நாணயத்தை விரலால் சுண்டிக்கொண்டே வழி நடப்பார்கள். ஒருவனுவது அவர்கள் முன்னின்று "உனக்கு எத்தனை பல் முளைத்திருக்கின்றது. நீ எங்கு போகின்றுய்" என்று துணிந்து கேட்கமாட்டான்.

அச் சக்கரவர்த்தியின் ஆளுகைக் கீழ் ஆயிரம் நாடுகளிருந்தன. எத்தனையோ சுல்தான்கள் அவருக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். இவ்வளவு பெருத்த ராஜைசுவரிய மிருந்தபோதிலும், ஒரு விநாடியாவது தமது மனத்தினுள் ஈசுவர தியான மில்லாமலிருக்கமாட்டார். தாம் செய்யவேண்டிய பரிபாலனத் தொழிலை விட்டு வழுவமாட்டார். இவ்வுலக சுகங்கள் என்று எவைகள் சொல்லப் படுகின்றனவோ அவைகள் அவ்வளவும் அவரிடம் வித்தமாக விருந்தன; ஆனால் புத்திரன் என்ற இவ்வுயிரின் பலன் அவருடைய அதிர்ஷ்டம் என்னும் தோட்டத்தில் காணப்படவில்லை. அக் காரணத்தால் எப்பொழுதும் அச் சக்கரவர்த்தி ஏங்கி நிற்கலானுர். தினந்தோறும் ஐந்து தடவை நமாஸ்செய்து முடித்தபிறகு தமது கட

வுளை நினைத்து பின்வருமாறு சொல்லுவார்:—"ஈசா! இப் பேதைக்கு நீ உனது உதார குணத்தால் எல்லாவித ஸம்பத்தையும் அளித்துவிட்டாய். ஆனால் இவ்விருட்டு வீட்டுக்கு ஒரு தீபம் மட்டும் நீ கொடுக்கவில்லை. இந்த ஒருவித சுகந்தான் என் உள்ளத்தில் குறையாய் நிற்கின்றது. என் பெயரைச் சொல்லி எனக்குத் தண்ணீர் இறைப்பவன் ஒருவனை நீ யெனக்குக் கொடுத்தா யில்லையே. உனது மாயா கோசத்தில் எல்லா ஸம்பத்துக்களும் வித்தமா யிருக்கின்றனவே. அதிலிருந்து புத்திமானும் ஆயுள் அமைந்தவனுமான ஒரு ஆண் குழந்தை எனக்குக் கொடுக்கலாகாதா? அவ்வாறு கொடுப்பாயே யானல் என் பெயரும் இந்தச் சிங்காசனமும் நிலைநிற்கும்."

இதே சிந்தையில் சக்கரவர்த்திக்கு வயது நாற்பது வருஷங்கள் ஆயின. ஒருநாள் அவர் தமது கண்ணாடிப் பங்களாவில் நமாஸ்துதி முதலிய சடங்குகளை முடித்துவிட்டு, ஜெபமாலை யேந்தி ஜெபம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு கண்ணாடியில் தம்மையே அவர் பார்த்துக்கொண்ட பொழுது தமது மீசையில் ஒரு வெள்ளை மயிர் அவர் கண்ணில் தென்படலாயிற்று. அதுவோ ஸ்ருச்சமான வெள்ளிக்கம்பிபோல் மின்னிக்கொண்டிருந்தது. அதைக் கண்டதும் சக்கரவர்த்தி கண்களில் நீர் ததும்பலாயிற்று. வெகு துக்கத்துடன் ஒரு பெருமூச்சு விட்டார். தமது மனத்தினுள்ளேயே சொல்லிக் கொள்ளலானார்.— "ஐயோ! துக்கம்; அடா! உன் வயது முழுமையும் நீ வீணில் கழித்தாய்; இவ்வுலகத்தின் ஆசையால் இவ்வுலகத்தையே நீ தலைகீழாய்ப் புரட்டிவிட்டாய். இவ்வளவு நகரங்களைப் பற்றிக்கொண்டாயே, இவைகளால் உனக்குண்டான பிரயோஜனம் என்ன? கடைசியாய் இவ்வளவு சொத்துக்களையும் எவனோ இரண்டாவன் — உன் வம்சத்தானன்றி மற்றொருவன் — கட்டிக்கொள்ளப் போகிறான். உன்னை நாடி யமனுடைய தூதன் ஏற்கெனவே வந்துவிட்டான். இன்னும் சிறிது காலம் நீ பிழைத்திருக்கலாம் என்றாலும் தேகத்தின் பலன் குன்றிப் போய்விட்டது ஆகையால் இப்பொழுது நன்றாகத் தெரியவருகின்றது என்னவெனில், இந்தச் சிங்காதனத்

திற்கும் வெண் குடைக்கும் பாத்திய முள்ளவன் உன் அதிர்ஷ்டத்தில் எழுதப்படவில்லை. என்றைக்கோ ஒரு நாள் கடைசியாக மாண்டுபோக வேண்டியது திண்ணம். எல்லா ஸம்பத்தையும் விட்டு விட்டுத் தான் போகவேண்டும். இப்படிப் போவதைக் காட்டிலும் நீயே இப்பொழுது இவ்வளவு ஸம்பத்தையும் வேண்டாம் என்று விட்டுவிட்டால் அது எவ்வளவு அழகாக விருக்கும். இன்னும் மிகுந்திருக்கும் உன் வாழ்நாட்களை ஈசனுடைய நினைப்பில் கழித்தால் எவ்வளவு மேன்மை."

இவ்வண்ணம் தமது மனத்தினுள் நிச்சயித்துக்கொண்டு, அச்சக்கரவர்த்தி அம்மாளிகையை விட்டு இறங்கி, தோட்டத்தில் புகுந்து எல்லா மந்திரிமார்களுடனும் பேசிவிட்டுப் பின்வருமாறு கட்டளை யிட்டார்:—

"இனி இன்று முதல் ஒருவரும் என்னிடம் வரவேண்டாம். எல்லாரும் சபாமண்டபம் மட்டும் வந்து போய்க்கொண் டிருந்தால் போதும். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் காரியத்தில் கவனமாயிருங்கள்." இவ்வாறு சக்கிரவர்த்தி கட்டளை யிட்டு விட்டு தாம்மட்டில் ஓர் தனியான அறைக்குள் போய் உட்கார்ந்து ஜபப்பாய் விரித்து அதிலிருந்து ஜபஞ் செய்யலானார். எப்பொழுதும் கண்ணீர் வடிப்பதும் பெருமூச்சு விடுவதும் தவிர, வேறொன்றும் செய்வதாகக் காணப்படவில்லை. இவ்வாறு அஸாத்பஷ்த பல நாட்களிருந்தார். பொழுது மறையும் பொழுது ஒரு பேரீச்சங்காய் புசித்து மூன்று வாய் தண்ணீர் குடிப்பார். இரவும் பகலும் அந்த ஜபப்பாயின் மேலேயே படுத்திருப்பார். சக்கரவர்த்தியின் ஸமாசாரம் சிறிது சிறிதாக வெளிக் கிளம்பலாயிற்று. சில சிலவாய் நாடெங்கும் இந்த விஷயம் பரவிற்று. சக்கரவர்த்தி நாட்டை வகிக்கும் பாரத்திலிருந்து தன் கைகளை நீக்கிக்கொண்டு மூலையில் உட்கார்ந்தார் என்ற ஸமாசாரம் எல்லாருக்கும் தெரிந்தது. நான்கு திக்குகளிலேயும் சத்துருக்களும் கலகக்காரர்களும் தங்கள் தலைகளைத் தூக்கலானார்கள். தங்களுக்கு ஏற்பட்டிருந்த எல்லையைக் கடந்து அடிவைக்கலானார்கள். ஒவ்வொருவனும் தன்னிஷ்டப்படி நாட்டைக் கொள்ளை யடிக்கத் தலைப்பட்டான், கலகம் மூட்டிவைக்க

லூானன். ராஜ்ப் பிரதிநிதிகளிருந்த விடமெல்லாம் அவர்களிருப் பதே இலக்ஷியமில்லாமல் குழப்பம் சூழலாயிற்று. ஒவ்வொரு நாட்டிலிருந்தும் அங்கு நேரிட்டிருந்த ஆளுகைக் குறைவைப்பற்றி யும் அதனால் விளையும் துன்பங்களைப்பற்றியும் ராஜ ஸமூகத்துக்கு விண்ணப்பங்கள் வரத் தொடங்கின. ராஜ சபையிலிருந்த மந்திரி மார்களும், பிரபுக்களும் உடனே சபைகூடி என்ன செய்யலாம் என்று ஆலோசனை பண்ணலானார்கள்.

கடைசியாய் ஒரே யோசனைதான் அவர்களுக்குப் புலப்பட்டது. பெரிய மந்திரி ஒருவர் தான் புத்திமான், யுக்திமான். அரசனுக்கு வேண்டியவர்; நம்பிக்கையுள்ளவர். பதவியிலும் எல்லாருக்கும் மேலானவர். ஆகையால் அவரிடம் போவோம். அவர் எதைச் சொல்லுகின்றாரோ அதைக் கேட்போம். அவர் எதை நியாயம் என்று எடுத்துக் காட்டுகின்றாரோ அதைச் செய்வோம் என்று யோசித்து எல்லாப் பிரபுக்களும் பெரிய மந்திரியிடம் வந்து பின் வருமாறு சொல்லலுற்றார்கள். "அரசருக்கோ இக்கதி; நாட்டுக் கோ இக்கஷ்டம். இன்னும் நாம் சிறிது காலம் ஒன்றும் செய் யாமல் தாமதித்தால் இவ்வளவு சிரமப்பட்டுச் சம்பாதித்த இந்த இராஜ்யம் ஒரு நிமிஷத்தில் நம்மைவிட்டு வெகு சுலபமாய்ப் போய் விடும். பிறகு திரும்பக் கிடைப்பது கஷ்டம்."

பெரிய மந்திரியோ வெகு பழையகாலத்து மந்திரி. அரச னிடம் நன்றியுள்ளவர். அதி புத்திமான்: அவர் பெயர் *ஹிரத்மந்த். அப்பெயரும் அருத்தமமைந்ததா யிருந்தது. அவர் பின்வருமாறு மறுமொழி சொல்லலானார்:—"நாம் அவர் முன்பாக வரக்கூடாது என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருந்த போதிலும் நீங்கள் எல்லா ரும் புறப்பட்டுப் போங்கள். நானும் கூடவே வருகின்றேன். ஒருக்கால் என்னையாவது கூப்பிட்டு என்னுடன் பேசும்படி ஈசன் கருணை செய்வார்" என்று இவ்வாறு சொல்லி எல்லாரையும் தன் னுடன் கூட அழைத்துக்கொண்டு ஹிரத்மந்த் மந்திராலோசனை சபைக்கு வந்தார். அவர்களை எல்லாம் அவ்விடமே விட்டு தாம் மட்டும் ராஜ ஸமூகத்தை நாடிச் சென்றார். அவ்விடத்திலிருந்த

* ஹிரத்மந்த் என்னும் பதத்துக்கே புத்திமான் என்று அர்த்தம்.

சேவகனிடம் தம் வரவை அரசனிடம் தெரிவிக்கும்படி பின் வருமாறு சொன்னார்.—"தங்கள் பழைய ஊழியக்காரன் இதோ காத்திருக்கின்றான். வெகு நாளாய் ராஜா முகதரிசனம் அவனுக்குக் கிட்டவில்லை. ஏதோ தங்கள் பாதங்களை ஒரு தடவை முத்தமிட்டு தங்களை ஒரு தடவை தரிசித்தால் அவன் மனம் குளிரும் என்ற நம்பிக்கை யுடனிருக்கின்றான்." இவ்வாறு மந்திரி செய்து கொண்ட விண்ணப்பத்தைச் சக்கரவர்த்தி கேட்டார். ராஜ ஸமூகத்துக்கு அம்மந்திரியினுடைய பலநாள் ஊழியமும், அவர் பக்தியும் விசுவாஸமும் புத்தியும் நன்றாகத் தெரியுமாகையாலும், அம்மந்திரியின் ஆலோசனைகளைச் சக்கரவர்த்தி பலமுறை கேட்டு அவ்வாறே நடந்திருந்தபடியாலும், சொற்பம் யோசித்துவிட்டு "ஹிரத்மந்தை வரும்படி உத்தரவளித்தார். அப்படியே மந்திரி சக்கரவர்த்தியின் முன்னிலையில் போய் நின்று அவரை வழக்கம்போல் வணங்கிக் கண்ணுற்றார். சக்கரவர்த்தி அழுத கண்ணும் கண்ணீருமாய், சிவந்த முகத்துடனிருந்த கோலத்தைப் பார்க்க, மந்திரி ஸகிக்கமுடியாமல் அவர் காலடியில் விழுந்தபொழுது, அச்சக்கரவர்த்தி மந்திரியைப் பார்த்து, "என்னை இப்பொழுது பார்த்தாய் விட்டதல்லவா. இனி நீர் போய்விடலாம். என்னைத் தொந்தரவு செய்யவேண்டாம். ராஜ்யத்தை நீரே ஆண்டுவாரும்" என்றார்.

இப்படிப்பட்ட வியாகூல வார்த்தைகளை சக்கிரவர்த்தி சொல்லவும் ஹிரத்மந்த் மந்திரி அதைச் செவியுற்றதும், அவரும் தாங்காமல் கண்ணீர்விட்டழுது சக்கரவர்த்தியைப் பார்த்து பின்வருமாறு சொல்லலானார்:—"தங்கள் அடியேனுக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் அதிகாரமும் மேலான செல்வாக்கும் தங்களது மகிமையினாலல்லது வறில்லை. தாங்கள் ராஜாங்க வைபவத்தைத் துறந்து அதின் வாழ்க்கையை வெறுத்து விட்டதினால் இந்த ராஜ்ய முழுவதும் குழம்பி மிகவும் வருந்தி வாடி யிருக்கின்றது. இப்படிப்பட்ட நடவடிக்கையைத் தாங்கள் செய்து விட்டதற்குக் காரணம் யாது என்று அடியேனுக்குத் தெரிவித்தல் வேண்டும். இந்த அதிசயமான காரியத்தின் விஷயம் என்ன வென்று தாங்கள் உங்கள் ஊழியனுக்குச் சொல்லவேண்டும். இதைப்பற்றி என் சிற்றறிவுக் கெட்டினமட்டில் தெரிவிக்கிறேன். எங்களுக்கெல்லாம்

ஏற்பட்டிருக்கும் கௌரவமும் நாங்கள் பார்த்துவரும் வேலைகளும் தங்களால் ஏற்பட்டதே யொழிய வேறில்லை. அப்படிச் செய்து விட்டுத் தாங்கள் உல்லாஸத்துடனும் சுகத்துடனிருக்க வேண்டி நாங்கள் எங்கள் வேலைகளைப் பார்த்து வந்தோம். அந்தோ! இப் பொழுது இந்த எண்ணத்திற்கு நேர் விரோதமாய் அந்த ஏற்பாட் டினாலே தாங்கள் கவலையும், துக்கமும் விசனமும் உண்டாகும்படி யாய் விட்டதே? இந்த ஸ்திதியில் தங்கள் ராஜ்யத்தில் உள்ள ஒவ் வொரு ஊழியனும் தங்கள் மனக் கவலையைப் போக்கக் கடமைப் பட்டவன். அப்படிச் செய்யாதவரையில் அவன் பிரயோஜன மற்ற வன்". இவ்வார்த்தைகளை சக்கரவர்த்தி கேட்டு இவ்வாறு பதில் சொன்னார்: "மந்திரி! நீர் சொல்வதனைத்தும் நிஜந்தான். ஆனால் என் ஹிருதயத்தில் வேரூன்றிப் போயிருக்கும் கவலையையும் விச னத்தையும நீக்குவது அஸாத்தியமான 'காரியம். அதை யாவரா லும் தீர்க்க முடியாது."

"ஓ, ஹிரத்மந்த்! நான் சொல்லுகின்றேன் கேள். என் ஆயுள் முழுமையும் இந்நாடாளுகை என்ற தலைவலியிற் கழித்தேன். இப் பொழுது இத்தனை வருஷங்கள் எனக்கு ஆய்விட்டன. என் முன் மிகுந்து நிற்பதெல்லாம் மரணம் ஒன்றே. அதற்கும் தூதன் வந்து விட்டான். எப்படியெனில் என் கருப்புமயிர் வெள்ளை மயிராக மாறி விட்டது. உலகத்தார் ஒரு பழமொழி சொல்லுவார்கள். "இரவு முழுமையும் தூங்கினால் பொழுது விடிந்துகூட எழுந்திருந் தானில்லை" என்பார்கள். இதுவரையில் எனக்கு ஒரு ஆண் குழந் தைப் பாக்யம் உண்டாகவில்லை. அப்படி யிருந்தாலல்லவோ என் உள்ளம் குளிரும். இக்காரணத்தால் என் உள்ளம் முற்றிலும் வெறுப்படைந் திருக்கின்றது. நானும் எல்லாவற்றையும் விட்டு நீங்கி உட்கார்ந்து விட்டேன். எவனுக்கு எது இஷ்டமோ அவன் அதை எடுத்துக்கொள்ளட்டும். நாட்டை வேண்டுகிறவன் நாட் டைப் பிடித்துக் கொள்ளட்டும். பணம் வேண்டுகிறவன் பணத்தை எடுத்துக் கொள்ளட்டும். எனக்கு இவைகளாலினி ஒரு விதப் பிர யோஜனமுமில்லை; இது மட்டுமல்ல. நான் இன்னும் உத்தேசித்தி ருக்கிறது என்ன வெனில் ஏதாவது ஒரு நாள் இவைகள் யாவற் றையும் நான் விட்டு விட்டு ஏதாவது ஒரு அரண்யம் அல்லது பர்

வதம் இதற்கு ஓடிப்போகப்போகிறேன். அங்கிருந்துகொண்டு என் முகத்தை ஒருவருக்கும் காட்டாமலிருப்பேன். இவ்வண்ணம் இவ் வாழ்நாட்களின் சொற்ப காலத்தைக் கழிப்பேன். எந்த இடம் என் மனதிற்குப் பிடிக்கின்றதோ அங்கு உட்கார்ந்து கொண்டு என்னைப்படைத்த ஆண்டவர்பேரில் தியானமாக விருப்பேன். இனிமேல் வருங்காலமாவது எனக்கு ஆனந்தத்தை விளைவிக்காதா பார்ப்போம். இவ் வுலகத்திலோ நான் வேண்டிய மட்டும் அநுபவித்தாய் விட்டது. ஓர்வித ருசியும் கண்டேனில்லை." இவ்வளவு தூரம் சொல்லி விட்டு ஒரு பெரு மூச்சும் விட்டு அரசர் வாயை மூடிக்கொண்டார்.

ஹிரத்மந்த் என்பவர் அவ்வரசருடைய தகப்பனாரிடமும் மந்திரியா யிருந்தவர். இவர் இராஜகுமாரனாக விருந்த காலமுதல் இவரிடம் அபிமானம் வைத்திருந்தார். அன்றியும் பொறுப்புள்ளவரும் புத்திமானுமாயிருந்தார். அவர் மறுமொழி சொன்னதாவது: "ஈசனுடைய தயையில் நம்பிக்கை வைக்காம லிருப்பது நியாயமேயில்லை. எவனொருவன் ஒரு நொடியில் 18,000 வகை ஜீவராசிகளை உண்டாக்கினனோ அவனுக்கு உமக்கொரு குழந்தையளிப்பது ஒரு பெரிய (பேச்சா) காரியமா? ஆகையால் பிரபுவே உமது உள்ளத்தி லிருக்கும் விந்தையான கருத்துக்களை உம்மை விட்டு அகற்றிவிடுங்கள். இல்லாவிடில் உமது குடிகள் எல்லாம் குழப்பத்தில் மூழ்கி சுழன்று மடிந்து போவார்கள். அன்றியும் எவ்வளவோ சிரமப்பட்டு உங்கள் முன்னோர்களும் நீங்களும் சம்பாதித்த இந்த ராஜ்யம் ஒரு நொடியில் உமது கையை விட்டு அகன்று போய்விடும். உமது ஸம்ரக்ஷணைக் குறைவால் இந்நாடு முற்றிலும் பாழாய்விடும். இந்த கெட்ட பெயர் உமக்கு வராதவண்ணம் ஈசன் அனுக்கிரகிப்பாராக. இன்னும் ஈசன் உம்மை விசாரணை செய்யும் காலம் வரும்பொழுது அவன் உம்மைக் கூப்பிட்டு "நான் உன்னை அரசனாகப் படைத்து என் குடிகளை உன் கையில் ஒப்பி வைத்தேனே! நீயோ என் கருணையில் நம்பிக்கை யற்றவனாய் என் குடிகளைக் காப்பாற்றாமல் கைவிட்டு அவர்களை ஏன் நாசமாய்ப் போகும் படிச் செய்தாய்" என்று கேட்டால் இக் கேள்விக்கு என்ன மறு

மொழி சொல்லப்போகிறீர். போதும். நீங்கள் இப்பொழுது ஏதோ ஜெபம் செய்துகொண்டிருப்பதாகச் சொல்லுகின்றீர்களே அந்த ஜெபம் ஒன்றும் அச்சமயத்துக்கு ஒருவித பிரயோசனமும் படமாட்டாது. ஏனெனில் மானிடனுடைய உள்ளம் ஈசன் வீடு. அரசனுடைய கடமை எல்லாம் தாங்கள் செய்து வந்த் காரியும் நியாயமான காரியம் தானு என்று ஈசனுக்கு மறுமொழி சொல்ல வேண்டியதுதான். தங்கள் அடிமையாகிய நான் ஏதோ மரியாதை தப்பி பேசுவதற்காக மன்னிக்கவேண்டும். வீட்டை விட்டு வெளிக் கிளம்பி காடு காடாய் அலைந்து திரிவது யோகிகள் அல்லது பக்கிரிகள் செய்ய வேண்டிய காரியம். ஒருபொழுதும் அரசனுடைய வேலையேயல்ல. நீங்கள் உமது யோக்யதைப்படி உமக்கு ஈசனுர் கட்டளையிட்ட வேலையைச் செய்யுங்கள். ஈஸ்வரருடைய தியானம் அவனிடம் பக்தி இவைகள், காட்டிலும் மலையிலுமிருந்து கொண்டேதான் செய்யவேண்டும் என்பதல்ல. நீங்களும் இப்பாட்டு கேட்டிருப்பீர்கள். ஈசன் இதோ இருக்கிறுர். அவரைப் போய்த்தேடுகின்றவர்கள் காட்டுக்குப் போய்த் தேடவேண்டாம். அவ்வண்ணம் தேடுவது எதுபோல் என்றுல், இடுப்பில் குழந்தையை வைத்துக் கொண்டு ஊரெல்லாம் என் குழந்தையை யாராவது கண்டதுண்டா வென்று தமுக்குப் போடுவதற் கொப்பாகும்.

நியாயமாய் நடக்க உங்கள் உள்ளத்தில் எண்ணமும் இவ்வடிமை செய்துகொள்ளும் விண்ணப்பத்தை ஒப்பவேண்டும் என்ற ஆசையும் இவ்விடத்திற்கு இருக்கும் பட்சத்தில் ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு விநாடியும் ஈசனிடம் தியானம் வைத்து அவரை நினைத்துக்கொண்டு அவரை துதி செய்யுங்கள். ஏனெனில் ஈசனை துதிசெய்தவர்களுள் பயனடையாமற் போனவர்கள் ஒருவராவது இல்லை. பகல் முழுமையும் ராஜநீதி செலுத்தி நாட்டை ரட்சித்துக்கொண்டு ஏழைகளுக்கும் அனுதைகளுக்கும் நியாயம் கட்டளை யிடுங்கள். இரவில் துதி செய்யுங்கள். பயமாருடைய பரிசுத்தமான ஆத்மாவைத் தியானித்துக்கொண்டு அவ்வாத்மாவின் ஆசீர்வாதம் பெற்று பக்கிரிகளுடையவும் மகாத்துமாக்களுடையவும் உதவியை நாடுங்கள். தாய் தந்தையற்ற குழந்தைகள், கைதிகள், பல குழந்தைகளைப் பெற்ற

ஏழைகளான தாய் தந்தையர்கள், திக்கற்ற கைம்பெண்கள் இவர்களுக்கு நாடோறும் அன்ன மளியுங்கள். இவ்வித தர்மகாரியங்களுடைய ஆசீர்வாதத்தாலும் இவ்வாறு உமக்குண்டாகும் நல்லெண்ணங்களின் பயனாலும் ஈசன் தயை கூர்ந்து உழதுள்ளத்தி லிருக்கும் எண்ணத்தை முடித்து வைப்பார். எதற்காக இந்த திவ்ய தேகம் இவ்வாறு வருந்திற்றோ அவ்வருத்தத்தை அவசியம் நீக்கிவைத்து உமது உள்ளத்தைக் குளிர வைப்பார். ஆகையால் நீங்களிப்பொழுது எதிர்பார்க்க வேண்டியதெல்லாம் ஈசன் கருணை ஒன்றே. அவரோ ஒரு நொடியில் உமக்கு என்ன செய்து வைக்க வேண்டுமோ அதைச் செய்து வைப்பார்.'' கடைசியாய் இவ்வண்ணம் மந்திரியாகிய ஹிரத்மந்த் சொல்லச் சொல்ல ஆஸாத்பக்த என்ற அரசருடைய மனதில் தைரியமுதிக்கலாயிற்று. உடனே அவர் மறுமொழி சொல்வதாவது: "நல்லது. நீ சொல்வதெல்லாம் நன்றாகத் தானிருக்கிறது. இதையும் செய்து பார்ப்போம்; இனிமேல் ஈசன் அபிப்பிராயம் என்னவோ அந்தப்படி நடக்கட்டும்.''

அரசன் உள்ளம் இவ்வாறு சொற்பம் ஆறுதலடைந்ததும் அவர் மற்ற பிரபுக்கள் எல்லாரும் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள். என்னவாயிருக்கிறார்கள் என்று கேட்கலானார். அப்பொழுது மந்திரி தெரிவித்துக்கொண்டதாவது "வேந்தே! இவ்விராச்சியத்தைப் பாதுகாக்கும் இப்பிரபுக்கள் இவ்விடத்தினுடைய நீடூழி ஆயுளுக்கும் க்ஷேமத்துக்கும் ஸதா ஈசனைப் பிரார்த்தித்துக்கொண்டே யிருக்கின்றார்கள். இவ்விடத்திய ஸ்திதியைக் கண்டு சிந்தையில் மூழ்கினவர்களாய் எல்லாரும் குழம்பி ஏங்கி நிற்கின்றார்கள். தாங்கள் தங்களுடைய கம்பீரமான முகத்தைச் சொற்பம் காட்டினால் எல்லாருக்கும் உள்ளங்குளிரும். இதை எதிர் பார்த்தவர்களாய் எல்லாரும் ஸபா மண்டபத்தில் காத்திருக்கின்றார்கள்.'' இதைக் கேட்டதும் அரசன், பின்வருமாறு கட்டளை யிடலானார்:— "ஈசனருள் என்னிடம் பரிபூர்ணமா யிருந்தால் நாளைய தினம் சபை கூடி கொலுவிருப்போம். அவ்வாறு எல்லாரிடமும் சொல்லும். அவர்கள் எல்லோரும் நாளையதினம் தப்பாமல் ஸபைக்கு வரும்படி சொல்லி யனுப்பும்.' அரசன் இவ்வாறு செய்த வாக்கு நிச்சயத்தைக்கேட்டு ஹிரத்மந்த் சந்தோஷமடைந்து தனது இருகரங்களையும் கூப்பிக்

கொண்டு வாழ்த்தலானன்:—"எது வரையில் இந்தப் பூமியும் ஆகாசமும் நிலை நிற்கின்றனவோ அதுவரையில் உமது சிம்ஹாசனமும் ஆளுகையும் ஓங்குக." பிறகு ராஜ ஸமுகத்தில் விடை பெற்றுக்கொண்டு களிப்பும் சிரிப்புமாய் வெளியே வந்தார். இச்சந்தோஷ சமாச்சாரத்தைப்பிரபுக்களிடம் சொன்னர். எல்லாப் பிரபுக்களும் வெகு ஆனந்தத்துடன் தங்கள் தங்கள் வீடு சென்றார்கள். நாளை மன்னவர் சபை கூட்டப்போகிறார் என்ற சமாசாரம் ஊரெங்கும் பரவிற்று. மறுநாள் எல்லாக் குடிகளும், ராஜாங்கத்து வேலைக்காரர்களும்சிறியோர், பெரியோர், பிரபுக்கள், சேவகர்கள் முதலான எல்லா உத்தியோகஸ்தர்களும் சபையில் வந்துசேர்ந்து தங்கள் தங்கள் அந்தஸ்துப்படி நிற்கலானார்கள். அரசன் வரவை வெகு ஆவலுடன் எதிர் பார்க்கலானார்கள்.

முதல் ஜாமப்பொழுது கழிந்ததும் சிம்ஹாசனத்தின் திரை ஒரு நொடியில் இழுக்கப்பட்டது. அரசரும் படியேறி சிங்காசனத்தில் உட்காரலானார். நௌபற்கா என்ற வாத்யகோஷ கிரஹத்தில் மங்கள வாத்யங்கள் ஒலிக்கப்பட்டன. சபைக்கு வந்திருந்த எல்லாரும் தங்கள் காணிக்கைகளாகிய க்ஷேமம் விசாரித்தலை, அரசனுக்கு அளித்து சபாமண்டபத்தில் அரசனைத் தங்களுக்கேற்ற மரியாதைப்படி வணங்கலானார்கள்.

ஒவ்வொருவருடைய பதவிப்படி அங்கு வந்திருந்தவர்களுக்கெல்லாம் அரசர் எதிர் மரியாதை செய்தார். எல்லார் உள்ளங்களும் களித்துக் குளிர்ந்தன. இரண்டாவது ஜாமமானவுடன் அரசர் சிங்காசனத்தை விட்டு எழுந்து தமது மாளிகைக்குள் சென்றார். அங்கு தமது மனத்துக்கேற்ற அறுசுவை உண்டி அருந்தி அரசன் சொற்பம் கவனித்துக்கொண்டு களைப்பை ஆற்றிக்கொள்ளலானார். அன்று முதல் அதையே ஒரு ஏற்பாடாகச் செய்துகொண்டார். என்னவெனில், தினந்தோறும் சபை கூட்டவேண்டும். அதில் கொலுவிருக்கவேண்டும். பகல் மூன்றும் ஜாமம் குரான் முதலிய வேத புஸ்தகங்கள் படிப்பதிலும் ஈசனைத் தியானம் பண்ணுவதிலும் காலங்கழிக்கவேண்டும். தாம் செய்துவிட்ட பாவங்களுக்காகப் புச்சாத்தாபப்பட்டு ஈசனைப் பிரார்த்தித்துத் தம்மை மன்னிக்கும்படி

கேட்டுக்கொண்டு தம்முள்ளத்திலிருக்கும் எண்ணங்கள் கைகூடும் படி வேண்ட வேண்டும் என்பதேயாம்.

ஒரு நாள் அரசன் தாம் படித்து வந்த புஸ்தகத்தில் பின்வருமாறு எழுதியிருந்ததைக் கண்ணுற்றார்:—எவனொருவன் மற்றொரு மனுஷ்யனால் ஒருபொழுதும் என்ன செய்தபோதிலும் அகற்றி வைக்க முடியாத துக்கத்தாலும் துயரத்தாலும் வருந்துகின்றானோ அவன் உடனே தனது துயரத்தை ஈசன் கையில் ஒப்புவைக்க வேண்டும். இறந்தவர்கள் புதைக்கப்பட்டிருக்கும் கோரிஸ்தானங்களை நாடிச்சென்று அவ்விடம் புதைக்கப்பட்டிருக்கின்றவர்களுடைய ஆத்துமாக்களுக்குப் பயாமரர் அருளால் நற்பதம் கிட்ட வேண்டும் என்று பிரார்த்திக்க வேண்டும். தன்னைப்பற்றி தான் ஒருவித காரியத்துக்கும் உதவாதவன் என்று கருதிக் கொண்டு மானிடர்கள் இயற்கையாக எண்ணிக்கொள்ளும் தப்பான அபிப்பிராயங்களில் விழாமல் தன்னுள்ளத்தை வெகு பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். மற்றவர்களை எச்சரிக்குமாறு தான் புலம்பவேண்டும். ஈசனிடமிருக்கும் அபார சக்தியைச் சிந்தித்து உருக்கத்தால் நடுங்கி நிற்கவேண்டும். எனக்கு முன்பு ராஜ்ஜியத்துக்கும் சம்பத்துக்கும் எஜமானர்களான எவ்வளவு மன்னவர்கள் இவ்வுலகத்தில் வாழ்ந்து மடிந்தார்கள். ஆகாச சக்கரம் அவர்கள் எல்லாரையும் தனது சுழலும் சக்கரத்தில் இழுத்து மண்ணில் மண்ணாய் மடியும்படி யாற்றிற்றே என்று நினைக்க வேண்டும். இச்செய்யுள் ஒன்று உண்டு.

ஒரு இயந்திரம் சுழன்றுகொண் டிருந்தபொழுது அதை ஒரு கவி கண்ணுற்று ஐயோ இந்த இயந்திரத்தின் மத்தியில் விழும் தான்யம் மேல்மூடி கீழ் அடி இவ்விரண்டு கற்கள் நடுவில் சிக்கிக் கொண்டு மாவாய்ப் போவதுபோல் ஆகாயம் பூமி என்ற இவ்விரண்டு கற்களாலாகிய இயந்திரத்தில் சிக்கிக்கொண்ட மானிடர்களும் மண்ணாய்ப் போகின்றார்களே யென்று கண்ணீர் விட்டு அழலானார்.

நமக்குமுன்னிருந்த பெரியவர்களுடைய ஸ்திதியை ஆலோசிக்குங்கால் ஒரு பிடி மண்ணைவிட அதிகமாய் அவர்களைப் பற்றி வேறொன்றும் அடையாளங் காணோம். அவர்கள் எல்லாரும் தங்களைச் சேர்ந்த ஆஸ்தி, பாஸ்தி, வேலைக்காரன், வீடு வாயல், பிள்ளை,

பெண்டுகள், பந்துக்கள், நண்பர்கள், குதிரைகள், யானைகள் எல்லா வற்றையும் விட்டுவிட்டுத் தனியே சென்றார்கள்.

இவ்வண்ணமான எவ்வளவோ பாக்கியங்கள் அவர்களுக் கிருந் தும் ஒருவித பிரயோஜனமும் அடையவில்லை. இப்பொழுது அவர் களுள் சிலருடைய பெயர்கூட மறைந்து விட்டது. கோரிக்குள் என்ன விருக்கின்றதென்பதுகூடத் தெரியாது. புழுக்கள் பூச்சி கள் பாம்புகள் அங்கிருக்கும் மாமிசத்தை இதற்குள் புசித்திருக்கும். அவர்கள் மாண்டபின்னர் என்னவானார்கள் என்பது யாருக்குத் தான் தெரியும். ஈசன் முறை அவர்கள் தங்கள் கணக்கை எவ் வாறு ஒப்பிவைத்தார்கள் என்பது யாருக்குத்தான் விளங்கும். இவ் வாறான எண்ணங்களைத் தன் மனத்தினுள் எண்ணி இவ்வுலக முழு மையும் கெட்ட நாடகம் என்று கருதவேண்டும். அப்பொழுது தான் மொட்டுப்போலிருக்கும் அவன் உள்ளம் நன்றாக மலர்ந்து ஒரு நாளும் வாடாம லிருக்கும்." இவ்வண்ணம் அப்புஸ்தகத்தில் எழுதப்பட் டிருந்ததை சக்கரவர்த்தி படித்தவுடன் ஹிரத்மந்து தனக்குப் போதித்த புத்திமதியை ஞாபகம் பண்ணிக்கொள்ள லானார். அவர் படித்ததும் அவன் சொல்லி யிருந்ததும் ஒத்திருந் தன. தான் எவ்வாறு அவ்வண்ணம் நடந்துகொள்ளுகிறதென்று சிந்திக்கலானார். குதிரைமேல் ஏறி சவாரி செய்து கொண்டு கூட் டங்களிலும் கும்பல்களிலும் புகுந்து அரசன் மாதிரி ஓடிப் பாடு வது நியாயமல்ல. அதைக் காட்டிலும் உடுப்பு மாற்றிக்கொண்டு ஏகாங்கியாய் வெளிக்கிளம்பி இரவில் கோரிகளிருக்கும் இடங்களி லும் ஈசன் அடியார்கள் தனிமையாயிருக்கும் இடங்களிலும் போய் சஞ்சரிப்பது மேன்மை. இம் மகாத்துமாக்கள் தவத்தின் மகிமையால் இவ்வுலகத்தில் என் ஆசைகளின் பரிபூரணமும் அடு த்த உலகத்தில் நற்பதமும் எனக்குக் கிட்டலாம்.

இவ்வுர்று உறுதி பண்ணிக்கொண்ட பிறகு அரசர் ஒரு இரவு சில முரட்டு அழுக்குத் துணிகள் கட்டிக்கொண்டு கையில் சிலரூபா யும் விராகனும் எடுத்துக்கொண்டு ஒருவரிடமும் சொல்லாமல் கோட்டையை விட்டு வெளியே வந்து கோட்டைக்குச் சமீபத்தி லிருந்த மைதானத்தில் சஞ்சரிக்கலானார். சொற்பதூரம் அவர்

நடந்ததும் அங்கு ஒரு கோரி ஸ்தானத்தைக் கண்டார். அதில் அவர் புகுந்தபொழுது மனப்பூர்வமாய் ஈசுவரபக்தி செய்துகொண் டே யிருந்தார். அச்சமயம் ஒரு பெருங்காற்று அடித்துக்கொண் டிருந்தது. பெரும் புசல் அடித்ததாகவும் சொல்லலாம். திடீர் என்று ஒருசுவாலை அரசன் கண்களைக்கவர்ந்தது. அச் சுவாலை வெகு பிரகாசமாய் விடியற்காலம் தோன்றும் சுக்கி ரன்போல் பிரகாசிக்கலாயிற்று. அதைக் கண்டு அரசன் தனக்குள்ளேயே யோசித்ததாவது:— இவ்விருளிலும் இவ்விர விலும் இப்பிரகாசம் ஸாதாரணமான விளக்கின் பிரகாசமல்ல. இதில் ஏதோ சமத்காரமிருக்கவேண்டும் அல்லது மந்திரமிருக்க வேண்டும். விளக்கில் குங்கிலியம் அல்லது கந்தகம் ஸம்பந்தப் பட்டிருந்தால் என்னதான் காற்றடித்தபோதிலும் அது அணையாது. அல்லது இது ஒரு மகானுடைய விளக்காக விருக்கவேண்டும். எந்த விளக்காயிருந்தாலென்ன, யாருடையதாகத்தா னிருந்தாலென்ன, நான் அவசியம் போய்ப் பார்க்க வேண்டும். ஒருக்கால் இவ்விளக்கின் ஒளியால் என் வீடு என்ற விளக்கும் ஒளிபெற்று என் உள்ளத்தி லுள்ள அபிப்பிராயம் நிறைவு பெறும் இந்த உறுதியைக் கைப்பற்றி அத்திசையை நோக்கி அரசன் சென்றான். அதின் அருகாமையில் சென்றதும் அச்சோதியைப் பார்க்கவே அவ்விடம் நான்கு பக்கிரி கள் கழுத்துமுதல் கபனி என்ற காஷாய உடுப்பு அணிந்து குந்தி உட்கார்ந்து முழங்கால் முட்டில் தலை வைத்தவர்களாய் மெய்மறந்த வர்களாய் ஒருவருடன் ஒருவர் பேசாமல் கண்மூடி மௌனிகளாய் உட்கார்ந்திருக்கக் கண்டார். அவர்கள் ஸ்திதி எவ்வண்ணம் காணப் பட்டதென்றால் ஏதோ தேசாடனம் எப்பொழுதும் செய்யப்பட்ட வர்களாய் தங்கள் தேசம் தங்கள் சாத்தியர்கள் இவைகளை விட்டு வெளிக்கிளம்பினவர்களாய் அக்காரணத்தாலோ எக்காரணத்தாலோ மிக மனவருத்தமுற்று ஏங்கித் தாங்கி பரிதவிப்பவர்களாய் இன்னது செய்யவேண்டும் என்ற வகை தெரியாதவர்களாய் காணலானார்கள். இவ்வண்ணம் இந்நான்கு பக்கிரிகளும் கல்லாலாகிய பதுமைபோல் உட்கார்ந்திருந்தார்கள். அவர் கண்முன்பாக ஒரு கல்லின்மேல் ஒரு சோதி விளக்குபோல் எரிந்து கொண்டிருந்தது. காற்று அவ் வொளியை ஒன்றும் செய்ய முடியவில்லை. அவ்விளக்கை காற்

றடிக்காமல் காப்பாற்றும்படி கண்ணுடியாக ஆகாயமே வைக்கப்பட்டிருந்ததென்று சொல்லலாம்.

அவர்களை அஸாத்பகத் கண்டதும் அவர் மனதுக்கும் ஒரு பெரும் நம்பிக்கை உண்டாயிற்று. தெய்வத்தின் அடியார்களாகிய இவர்களுடைய பாததூளியின் ஆசீர்வாதத்தால் "அடா உன் மனோரதம் அவசியமாய் நிறைவேறும்" என்று அவர் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டார். "ஆசை என்ற உன் மனோ விருக்ஷம் இப்பொழுது வாடியிருக்கின்றதே. அது அவர்களுடைய கருணுகடாக்ஷத்தால் பச்சை கட்டி தளிர்த்துக் காய்க்கும். நீ அவர்கள் ஸமுகத்திற் சென்று உன் மனோரதத்தைச் சொல்லிக் கொள்ளு. அவர்கள் சங்கத்தில் சேர். உனக்காக அவர்கள் மனமிரங்கி ஈசனைக் குறித்து தோத்திரம் பண்ணுவார்கள். அவர்கள் செய்யும் தோத்திரங்களை ஈசன் அவசியம் அங்கீகரிப்பான்" என்று அரசன் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டார். இவ்வாறு தீர்மானம் செய்து கொண்டவுடன்தான் அடி எடுத்து வைத்து அவர்களுடன் கலக்குமுன் அவர் புத்தி அவரைத் தடுக்கலாயிற்று. "அடா முட்டாள், அவசரப்படாதே. சொற்பம் யோசித்துப் பார்த்து ஒரு காரியம் செய். அவர்கள் யார், எங்கிருந்து வந்தவர்கள், எங்கு போகின்றவர்கள் என்பது உனக்கு என்னதெரியும். அவர்கள் ஏன் தேவதைகளாக வந்து பிசாசுக்களாகவாவது இருந்துகொண்டு இப்பொழுது மானிட உருவம் பூண்டு இவ்விடம் சேர்ந்து உட்கார்ந்திருக்கலாகாது. எப்படியிருந்த போதிலும் இப்படி அவசரப்பட்டு அவர்கள் மத்தியில் சென்று அவர்களைக் கலப்பது நியாயமன்று. நீ உன்னை ஒரு மூலையில் மறைத்துக்கொண்டு அவர்களுடைய சரித்திரத்தை அறிந்துகொள்ள வேண்டும்" என்று அஸாத்பகத்துக்குப் புத்தியிற் பட்டதும் அவரும் அப்படியே செய்தார். அவர் தன்னையே பதுக்கிக்கொண்டபொழுது வெகு ரகசியமாய் செய்தபடியால் அவர் அங்கு வந்த சப்தம் ஒருவருக்கும் கேட்கவே யில்லை. அரசன் தான் பதுங்கியிருந்தபடியே தமது கவனமுழுமையும் அப்பக்கிரிகள் விஷயமாய் செலுத்தி யிருந்தார். அவர்கள் தங்களுக்குள் என்ன பேசுகின்றார்கள் என்று கேட்பதிலேயே கருத்துள்ளவராக விருந்தார்.

கடைசியாய் அப்பக்கிரிகளுள் ஒருவருக்குத் தும்பல் வந்தது. அவர் தும்பி, ஈசனைத் துதிக்கலானார். இவர் தும்பின சப்தத்தால் மற்ற மூவர்களும் கண் விழித்துக்கொண்டு விளக்கைத் தூண்டி விடலானார்கள். விளக்கு வெகு பிரகாசமாக எரியலாயிற்று. ஒவ்வொருவனும் தனது படுக்கையைப் பரப்பி ஹூக்காவை நிரப்பிப் புகை குடிக்கலானார்கள். தாடி, புருவம், இமை மயிர் இவைகளைப் பும் வாங்கி யிருந்த அப்பக்கிரிகளுள் ஒருவன் பின்வருமாறு சொல்லலானான்:—

முதல் பக்கிரி மற்ற மூன்று பக்கிரிகளையும் நோக்கி பின்வருமாறு சொல்லத் தொடங்கினான்:—

"ஓ நண்பர்களே! என்னைப்போல் உலகம் முழுதும் அலையப்பட்டவர்களே! நாம் நால்வரும் வானம் சுழல்வது போல் இரவும் பகலுமாய் தலையில் தூசுபடிந்தவர்களாய் வீடு வீடாய் சொற்ப காலம் அலைந்தாய்விட்டது. ஈசனருளாலும், நமது நற்பாக்கியத்தாலும், நமது அதிர்ஷ்டம் அவ்வாறு இருந்தபடியாலும் நாம் இன்றிரவு இவ்விடத்தில் ஒருவரை யொருவர் பார்க்கும்படி ஸந்தித்தோம். நாளை ஸமாச்சாரம் நமக்கு இன்னதென்று ஒன்றும் தெரியாது. நாம் சேர்ந்தே யிருப்போமோ அல்லது ஒருவரை ஒருவர் காணாமல் பிரிந்து போகின்றோமோ அது ஈசனுக்குத்தான் தெரியும். இரவோ பெரும் பருவதம் போல் முன் நிற்கின்றது. இப்பொழுது முதல் படுத்துக்கொண்டு தூங்குவதும் நன்றாகத் தோன்றவில்லை. நாம் ஒவ்வொருவரும் நமது கதையை அதாவது இவ்வுலகத்தில் நாம் அனுபவித்துள்ள கஷ்டத்தை ஒரு அணுவாவது ஒளிக்காமலும் மறைக்காமலும் இப்பொழுது சொல்லிக்கொண்டால் நலமாயிருக்கும் என்று தோன்றுகிறது. அவ்வாறு நாம் செய்வோமே யானால் பேச்சிலேயே இரவு கழியும்; பொழுது விடிய சொற்ப காலமிருக்கும் பொழுது நாம் தூங்குவோம்" என்றான். அதைக் கேட்டதும் எல்லோரும்:—ஐயா பெரியவரே நீங்கள் இட்ட கட்டளையை நாங்கள் ஒப்புக் கொண்டோம். முதல் முதல் நீங்கள் உங்கள் கதையைச் சொல்லுங்கள். நீங்கள் இவ்வுலகில் கண்டதை வெளியிடுங்கள். அப்பொழுது அது ஓர் நல்ல உபதேசமாகும்.

## முதற்பக்கிரி கதை

முதற்பக்கிரி தனது இரு முழந்தாள்களையும் மடித்து, குந்தி உட்கார்ந்து தனது ஸஞ்சாரத்தின் கதையைப் பின்வருமாறு சொல்லலுற்றான்:—தெய்வத்தின் கண் நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கையால் இக்கதையைக் காது கொடுத்துக் கேளுங்கள். இக்கதைக்கோ தலையுமில்லை, காலுமில்லை. அப்படி யிருந்த போதிலும் என் கதையை நீங்கள் தயை செய்து காது கொடுத்துக் கேட்க வேண்டும். என்னை ஈசன் எவ்வாறு நற்பதத்தில் வைத்துக் கீழே யிறக்கி தலை கீழாக மாற்றினான் என்பதைக் கருணை கூர்ந்து கேளுங்கள். இந்த ஜனனத்தில் நான் என்னென்ன அவஸ்தைப் பட்டிருக்கின்றேனோ அவைகளவ்வளவையும் வெளிப்படுத்துகின்றேன். நீங்கள் ஆரம்ப முதல் கடைசி வரையில் கருணை கூர்ந்து கேளுங்கள்.

நண்பர்களே! நான் பிறந்தவிடம் அதாவது என் முன்னோர்களுடைய ஊர் யமன் என்னும் நகரம். இக்கேடு கெட்டவனுடைய தந்தை அவ்வூரில் வியாபாரிகளுக்கெல்லாம் தலைவர். அவர் பெயர் காஜாஅஹ்மத். அவர் ஓர் பெரிய வியாபாரி. அவர் காலத்தில் அவருக்கு நிகரான வியாபாரியாவது பணக்காரனாவது ஒருவனும் கிடையாது. ஒவ்வொரு பட்டணத்திலும் அவருக்கு சரக்கு வைக்க மளிகையுண்டு. சரக்கு வாங்கவும் விற்கவும் சிபபந்திகளுமிருந்தார்கள். ஒவ்வொரு ஊரிலுமவருக்கிருந்த மளிகைகளில் ரொக்கமாய் லட்சக் கணக்கான ரூபாய்களும் ஏராளமான சரக்குகளும் சித்தமா யிருந்தன. அவருக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. முதல் குழந்தை இதேபக்கிரி; எவனொருவன் இத்தேவ ரடியார்கள் முன்பு காஷாய வஸ்திரம் தரித்துட்கார்ந்து அவர்கள் முன் பேசுகின்றானோ அவன்தான் முதல் குமாரன். இரண்டாவது என் தங்கை. அவளை என் தந்தை அவர் உயிருட னிருந்தபொழுதே மற்றொரு தேசத்து வியாபாரியின் பிள்ளைக்குக் கலியாணம் செய்து கொடுத்திருந்தார். அவளும் தனது மாமனார் வீட்டில் வசித்துக்கொண்டிருந்தாள். கடைசியாய் எவனொருவருடைய வீட்டில் இவ்வளவு ஸம்பத்தும் ஒரே ஆண் குழந்தையுமுண்டோ அக்குழந்தையின் செல்வத்துக்கும் செல்வாக்குக்கும் சொல்லவும் வேண்டுமா? இப்பக்

கிரியாகிய நானும் என் தாய் தந்தையருடைய ஆதரவில் வெகு விமரிசையாய் வளர்ந்தேன். படிப்பு, எழுத்து, சிப்பாய்த் தொழிலைச்சேர்ந்த வியாபாரம், வியாபாரத்தொழிலைச் சார்ந்த கணக்கு எழுதிவைக்கும் முறை, எல்லாவற்றையும் கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். பதினைன்கு வயது வரையில் வெகு உற்சாகமாயும் சிந்தையே யில்லாமலும் என் காலத்தைக் கழித்தேன். உலகத்தின் கவலை என்பது சொற்பமாவது என் மனத்தைப் பற்றவே யில்லை. இப்படி யிருக்கும்பொழுது ஒரே தடவையில் ஒரே வருஷத்தில், என் தாய் தந்தையர்கள் மாண்டு போனார்கள்.

தாளமுடியாத்துயர மப்பொழுது எனக்கு உண்டாயிற்று. அதை எனக்கு வெளியிட வேண்டு மென்றால் முடியாது. ஒரு நொடியில் நான் தாயுந் தந்தையு மற்றவனானேன். எனக்கு மேல் ஒரு பெரியவனாவது அல்லது கிழவனாவது இருக்கவேயில்லை. இவ்வண்ணம் நான் ஒரு பொழுதும் எதிர் பார்க்காமலே எனக்குத் திடீரென்று வந்து விட்ட துக்கத்தால் நானிரவும் பகலும் கதறத் தலைப் பட்டேன். ஆகாரம் தீர்த்தம் எல்லாவற்றையும் முற்றிலும் விட்டேன். இப்படியே நாற்பது நாட்கள் கழிந்தன. நாற்பதாவது நாள் சடங்குக்காக என்னைச் சேர்ந்தவர்கள் சிறியோர்கள் பெரியோர்களாகிய எல்லாரும் ஒருங்கு சேர்ந்தார்கள். பாதிகாபடித்து முடிந்ததும் (குரானில் ஓர் மந்திரம் அதைப்படித்து செத்தவனை ஆசிர்வதிப்பது இச்சடங்குகளின் ஸமாப்தி.) எல்லாரும் இப்பக்கிரியின் தலையில் என் தகப்பனாருடைய தலைப்பாகையைக் கட்டி "உலகத்தில் எல்லாருக்கும் அவரவர்கள் தாய் தந்தையர் மரிப்பதென்பது ஸகஜம். நீயும் ஒருநாள் சாகவேண்டியதுதான் என்பது திண்ணம். போதும், இனி உன் துக்கத்தை விட்டுவிடு. உன் வீட்டை நீ பார். இப்பொழுது, நீ உன் தந்தையின் ஸ்தானத்தில் வியாபாரியாய் விட்டாய். உனது கொடுக்கல், வாங்கல், காரியம் கருமம் இவைகளில் வெகு ஜாக்கிரதையாக விரு" என்று எனக்கு ஆறுதல் சொல்லி விட்டு, அவர்கள் விடைபெற்றுக் கொண்டு சென்றார்கள். எனது குமாஸ்தாக்கள், காரியக்காரர்கள், வேலைக்காரர்கள், சிப்பந்திகள் எத்தனை பெயர்களிருந்தார்களோ

அவர்கள் எல்லாரும் வந்து என் முன்பு காத்திருக்கலானார்கள். காணிக்கை செலுத்தினார்கள். என்னைப் பார்த்து பின்வருமாறு சொல்லலானார்கள்:—"எஜமானே! தங்கள் மேலான கண்களால் பெட்டிகளில் கொட்டிக்கிடக்கும் ரொக்கங்களையும் மளிகைகளில் குவிக்கப்பட்டிருக்கும் சரக்குகளையும் பாருங்கள்" என்றார்கள். முடிவென்பதே யில்லாத அப்பெருஞ் சம்பத்தை நான் பார்த்த மாத்திரத்தில என் கண்களை மலர்ந்தன வென்கலாம். திவான் கானவில் ஸபை கூட்ட உத்தரவிட்டேன். ரத்தினக்கம்பளங்களை அழகாய் விரித்து தட்டிகளைத் தொங்க விட்டு திவான் கானைவை ஜோடித்து, படுதாக்களை நாற்புறங்களிலும் இழுத்துவிட்டார்கள். நானே வெகு அழகான வேலைக்காரர்களை நியமித்துக் கொள்ளலானேன். என் சொந்த செலவிலிருந்து பட்டும் சரிகையுமாய் அவர்களுக்கு உடுப்பு தைத்துக் கொடுக்கலானேன். அவர்களுடைய நடுவில் பக்கிரியாகிய நான் சாய்தலையணை சாத்தி உட்கார்ந்தேன். என்றைய தினம் அவ்வண்ணம் உட்கார்ந்தேனே டம்பாசாரிகள் டம்பர்கள், மற்றொருவன் செலவால் சாப்பிடும் அண்ணாத்தைகள், அதாவது சாப்பாட்டு ராமன்கள், பொய்யர்கள், பொய்துதி செய்வோர்கள் எல்லாரும் என்னுடன் நட்புக் கொண்டாடி என்னன்பின் தோழர்களானார்கள். அவர்கள் ஸகவாசத்தில் பகலிரவு எட்டு ஜாமங்களும் கழிக்கலானேன். ஒவ்வொரு இடத்துப்பேச்சு, ஒவ்வொரு வீட்டு பெண்டுகளைப்பற்றி கெட்ட பேச்சு, அரட்டை முதலிய துஷ்ட ஸம்பாஷணையில் காலங்கழிக்கலானேன். இது மட்டுமல்ல. அத்துஷ்டர்கள் ஒவ்வொரு ஸமயமும் என்னை நோக்கி "இந்த இளமைப் பருவத்தில் நன்றாகத் தாழம்பூ சாராயம் குடித்து அத்தர் பன்னீர் பூச்சு பூசிக்கொண்டு, மாதர்கள் கூட்டத்தில் சுகமனுபவிக்க வேண்டும்" என்பார்கள்.

கடைசியாய் நான் சொல்லுகிறது என்ன வெனில், மனிதனுக்கு சத்துரு மனிதனே. அக்கொடியவர்கள் ஒவ்வொரு நிமிஷமும் அவ்வாறு போதிக்கவே என் புத்தி மாறிற்று. குடி, கூத்து, சூது இவைகளில் புகுந்து என் காலத்தைக் கழிக்கலானேன். முடிவு என்னவெனில் என் துர்நடத்தை முற்றமுற்ற வியாபாரம் என்பதை

முற்றிலும் மறந்து முண்டைகள் ஸகவாசம், சூது, ஆகிய இப்பைத்தியம் என்னை முற்றிலும் மூடிக்கொண்டது. என் வேலைக்காரர்களும் நண்பர்களும் நான் இவ்வண்ணம் அஜாக்கிரதையாயிருப்பதை அறிந்ததும், அவரவர்கள் தங்கள் தங்கள் கைகளுக்குக்கிட்டினதை எடுத்துக்கொள்ளலானார்கள். கிரமமாய் எல்லாரும் சேர்ந்து என்னைக்கொள்ளை யடித்தார்கள் என்று சொன்னாலும் சொல்லலாம். ஒரு கணக்கும் வைக்கவேயில்லை. செலவு எவ்வளவு ரூபா. எங்கிருந்து ரூபா வருகிறது; எவ்வளவு செலவாகிறது என்று ஒரு சமாசாரமும் தெரியாமல் போயிற்று. அவிசாரியில் வந்த பொருள் பெருவாரியிற் போயிற்று என்ற பழமொழி உண்டல்லவா. நான் அப்பொழுது செய்த செலவுக்குக் குபேரன் (ஹாரூன்) கோசமே என்னிட மிருந்த போதிலும் அதுவும் போதாமலிருக்கும். சொற்ப வருஷங்களுள் என் கதி எவ்வாறாயிற்றென்றால், என் தலைமேல் நான் போட்டிருந்த குல்லா, அரையில் கட்டி யிருந்த கௌபீனம் இவ்விரண்டும் தான் என் பொருளாக மிருந்து நின்றன. இதற்கு முன் எந்த நண்பர்கள் நான் பல்லால் கடித்த ரொட்டியை வாங்கிப் புசித்தார்களோ, எந்த நண்பர்கள் எனக்காக தங்கள் தேகத்திலிருந்த ரத்தத்தையே முட்டை முட்டையாக ஏந்திச் செலவிடுவதாக ஒவ்வொரு பேச்சிலும் சொன்னார்களோ அவர்கள் அவ்வளவு பெயர்களும் மறைந்தார்கள். எப்பொழுதாவது நான் அவர்களை தற்செயலாய் நடு வழியில் சந்திக்கும்படி நேர்ந்திட்டால் அவர்கள் தங்கள் முகங்களைத் திருப்பிக்கொண்டு என் கண்களில் படாமல் மறைந்து விடுவார்கள். என்னைச் சேர்ந்த எல்லா வேலைக்காரர்களும் நான் ஏழையாகவே என்னை விட்டு ஓடிவிட்டார்கள். "என்னப்பா உன் கதி இவ்வாறாயிற்று" என்று கேட்கப்பட்டவன் எனக்கு ஒருவன் கூட இல்லை. என் துக்கம் என் ஏக்கம் இவ்விரண்டையும் விட வேறொன்றும் என்னிடம் மிருந்து நிற்கவேயில்லை.

வறுத்த மொச்சைக்கொட்டையாவது வாங்கி மென்று ஒரு வாய்த் தண்ணீர் குடிக்கலாம் என்றால், அதற்குக்கூட என்னிடம் ஒரு தம்படி கூட இல்லாம லிருந்தது. இரண்டு நாள் பட்டினியாகக் கிடந்து அவஸ்தைப்பட்டேன். அதன்மேல் அப்பட்டினியின்

உபத்திரவம் என்றால் தாளமுடியவில்லை. வெட்கமின்மை என்ற முட்டாக்கை என் முகத்தின்மேல் போட்டுக்கொண்டு என் தங்கையிடம்போகலாம் என்று யோசிக்கலானேன். இந்த அவமானம் மட்டும் என் மனதைச் சொற்பம் வருத்தலாயிற்று. என்ன வெனில்:—எனது பெரியவர் காலஞ் சென்ற பிறகு என் தங்கைக்கு நான் ஒரு கடிதமும் எழுதவே யில்லை. அவளைப்பற்றி விசாரிக்கவே யில்லை. அதுமட்டுமல்ல. அவ்வம்மணி எவ்வளவோ அன்பாய் எனக்கு இரண்டொரு கடிதம் துக்கம் விசாரித்து எழுதியிருந்தாள். நான் பணக்காரனாய் கண்மூடி நின்றகாலத்தில் அக்கடிதங்களுக்கு மறுமொழிகூட நானனுப்பவில்லை. இவைகளை யெல்லாம் நான் யோசிக்க, யோசிக்க வெட்கம் என்னை மூடிக்கொள்ளவே என் மனம் அவ்விடம் போக ஒப்பவில்லை. ஆனால் அவள் வீடு ஒன்றைத் தவிர வேறு ஓர் இடமாவது போக என் மனத்தில் தோன்றவில்லை. கடைசியாய் காலால் நடந்துகொண்டு கையில் ஒன்று மில்லாமல் எவ்வளவோ களைத்து ஆயிரம் அவஸ்தைப் பட்டுக்கொண்டு நடுவிலிருந்த மிஜிலிகளை எப்படியோ கடந்து, என் உடன் பிறந்தாளிருந்த ஊர் வந்து அவள் வீட்டினிடம் சேர்ந்தேன். என் தாயின் அடையாளமாகிய அத்தங்கை என்னைக் கண்டதும் ஆசீர்வதித்து என் கழுத்தில் கையைப் போட்டுக் கட்டிக்கொண்டு என்னைக் கண்டு "கோ" வென்று கதறலானாள்.

நான் வந்ததற்காக ஏழைகளுக்கு எண்ணெய், உளுந்து, தாம்பிர நாணயம் இவைகளைத் தானம் பண்ணி என்னை நோக்கி "அண்ணா! தங்களைப் பார்த்ததாலேயே என் மனம் எவ்வளவோ ஸந்தோஷமடைந்திருக்கின்றது. என்றாலும், இது என்ன ஆபத்து தங்களுக்கு வந்தது" என்றாள். அவ்வாறு அவள் கேட்ட கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை. கண்களினின்றும் தாரை தாரையாய் நீர் வடித்துக்கொண்டும் நான் வாயை மூடிக்கொண்டிருந்தேன். எனக்காக என் தங்கை அழகான உடுப்பு ஒன்று உடனே தைக்க ஏற்பாடு செய்து என்னை ஸ்நானம் பண்ணும்படி ஸ்நானம் செய்யும் அறைக்கனுப்பினாள். அவ்விடம் நான் சென்று நன்றாகத் தேய்த்துக் குளித்து அவ்வுடுப்பை அணிந்தேன். நான் இருப்பதற்காக

அவளுக்கருகாமையில் ஓர் அழகான அறை ஏற்படுத்தினாள். காலையில் என் உணவுக்கு ஸர்பத்து, வாதாம் பருப்பு கலந்த மிட்டாய், ஹல்வா, ஸோஹன் பிஸ்தா, இவைகளையும், பகல் போஜனத்துக்கு, காய்ந்ததும் காயாததுமான பழங்களையும், இரவு பகல் எல்லா வித உணவுகளுக்கும் புலாவு, நெய்யில் வறுத்த மாம்ஸம், ரொட்டி இவைகள் ஒவ்வொன்றும் வெகு அழகாய் சமைத்ததாய் வெகு ருசியுள்ளதாய் அவள் அனுப்பி தன் முன்பாகவே நான் அவைகளைப் புசிக்கப் பார்த்துப் போவாள். இவ்விதமாய் என் மேல் பலவண்ணமாய் அவள் கவலையுடனின்று என்னைக் காப்பாற்றலானாள். இந்தப் பிரகாரம் நான் எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்த பிறகு மறுபடி சுகப்பட்டதற்கு ஈசனுக்கு எவ்வளவோ ஆயிரம் தோத்திரம் பண்ணலானேன். எவ்வளவோ மாஸங்கள் இவ்வாறாக என் காலை அவ்வறையை விட்டு வெளியே வைக்காமல் கழித்தேன்.

இப்படி யிருக்க ஒரு நாள் என் நாயின் அடையாளமாகிய அத்தங்கை என்னிடம் வந்து பின் வருமாறு சொல்லலுற்றாள்:—"அண்ணா! நீங்கள் யார் எனில் என் கண்களிலிருக்கும் பதுமை; நமது தாய் தந்தையர்கள் மண்ணாக மாறினார்களே அம்மண்ணின் தேக உருவம். நீங்கள் என்றைய தினம் இவ்விடம் வந்தீர்களோ அன்று முதல் என் உள்ளம் குளிர்ந்தது. உங்களை நான் பார்க்கும்பொழுதெல்லாம் ஆனந்தக் கடலிலேயே மூழ்குகின்றேன். என்னை முற்றிலும் ஸந்தோஷத்திலிருக்கச் செய்தவர் நீங்களன்றோ. ஆனால் ஈசன் மனிதனை ஸம்பாதிக்கும் பொருட்டாகப் படைத்தானன்றோ, மனிதர்கள் வீட்டுக்குள் உட்கார்ந்திருப்பது மரியாதை யல்லவே. எவனொருவன் சோம்பேறியாய் வீட்டில் உட்காருகின்றானோ அவனை உலகத்தார்கள், பெரியோர்கள், சிறியோர்கள் எல்லாரும் அவர்களுக்கு அவ்விஷயத்தில் ஒருவித ஸம்பந்தமில்லாமற் போனாலும் நிந்தனை செய்வார்கள். தந்தை சம்பாதித்து வைத்திருந்த பொருளை யெல்லாம் பாழாக்கி கடைசியாய் மைத்துனன் எறியும் பிண்டத்துக்குக் காத்திருக்கின்றான்" என்பார்கள். இச்சொல் நமது கௌரவத்துக்கு வெகு குறைவு; உங்களையும் என்னையும் நோக்கி ஜனங்கள் சிரிக்கக் காரணம். நமது தாய் தந்தைகளுடைய

பெயருக்கு வெட்கமுமல்லவா? அப்படியில்லாவிடில் நான் என் தோலை உங்களுக்குச் செருப்பாகத் தைத்துப் போடுவேனல்லவா. உங்களை என் ஈரலுக்குள் வைத்துக் காப்பாற்றுவேன். நான் இப்பொழுது சொல்லப்போகும் புத்திமதியை நீங்கள் கேட்கவேண்டும். அது என்னவெனில், நீங்கள் மறுபடி வியாபாரத்துக்காக யாத்திரை செய்ய வேண்டும். ஈசனருளால் நமக்கு நல்ல காலம் திரும்பலாம். நீங்களிப்பொழுது படும் கஷ்டமும் வறுமையும் நீங்கி, க்ஷேமமும் ஸந்தோஷமும் மறுபடி உமக்கு விளையலாம்". இவ்வாறு என் தங்கை சொன்ன சொல்லைக் கேட்டதும் என் ரோசமும் என்னிடம் உதிக்கலாயிற்று. அவள் சொன்ன புத்திமதிகளை வெகு சிலாக்கியமாக ஒப்புக்கொண்டு மறுமொழி சொல்லலானேன்:—நல்லது நீயோ எனக்கு இப்பொழுது தாயின் ஸ்தானத்திலிருக்கின்றாய். நீ எவ்வாறு சொல்லுகின்றாயோ அவ்வாறு செய்கின்றேன். இப்படி நான் சொன்னதைக் கேட்டதும், என் தங்கை உடனே எழுந்து அவள் மாளிகைக்குள் சென்று வேலைக்காரிகளின் தலைமேல் 50-பைகள் பொன் வராகன் (ஒவ்வொரு பைகளிலும் ஆயிரம் எண்ணம் நிரம்பியது) ஏற்றி என் முன்பாக வைக்கச் செய்தாள். அவைகள் வைக்கப்பட்டவுடன் அவள் பின்வருமாறு சொல்லுற்றாள்:—"ஒரு வியாபாரிக் கூட்டம் சமீபத்தில் தமஷ்க் என்னும் பட்டணத்துக்குப் பிரயாணமாகின்றது. இப்பணத்தைக் கொண்டு நீங்கள் வியாபாரத்துக்கேற்ற சாக்குகள் வாங்கி நம்பிக்கையுள்ள ஒரு வியாபாரியிடம் ஒப்பிவைத்து, அவைகளுக்கு ஒரு ரசீது வாங்கிக்கொள்ளுங்கள். நீங்களும் தமஷ்க்குக்குப் புறப்படவேண்டும். அவ்விடம் க்ஷேமமாகப் போய்ச் சேர்ந்ததும் அச்சரக்குகளின் விலையை நீங்கள் லாபத்துடன் வாங்கிக் கொள்ளுங்கள். அல்லது நீங்களே அச்சரக்குகளைத் திரும்பப்பெற்று ஸ்வயமாக வியாபாரம் பண்ணி லாபம் கூட்டுங்கள்" என்றாள். நானும் அப்பணத்தை வாங்கிக்கொண்டு கடைக்குப்போய் சரக்குகள் பிடித்து வெகு நம்பிக்கையுள்ள ஒரு பெரிய வியாபாரியிடம் அவைகளை ஒப்பிவைத்து அவைகளுக்கு ரசீது பெற்று மனக்கவலை நீங்கினவனாக வீடு வந்தேன். அவ்வியாபாரக் கூட்டம் சரக்குகளைக் கப்பலிலேற்றி சமுத்திர மார்க்கமாய் புறப்படலாயிற்று. நானோ கரை மார்க்கமாய் பிரயாணஞ் செய்யத் தீர்மானித்தேன்.

"நான் என் தங்கையிடம் சொல்லிக்கொண்டு புறப்படும் காலமானுகவே, அவள் தலைமுதல் கால்வரையில் தொங்கும் ஒரு அழகான உடுப்பை எனக்காகச் சித்தப் படுத்திக் கொடுத்து ரத்தினங்களிழைத்த ஜேணம் கட்டிய ஓர் அழகான குதிரையைக் கொண்டு வந்து நிறுத்தினுள். வெகு ருசியான மிட்டாய்களை ஒரு தோல் பையில் நிரப்பி அதை என் ஜேணத்தின் பக்கத்தில் கட்டினுள். தீர்த்தத் தோல்பையை என் உடுப்பின்மேல் நான் போட்டிருந்த ஷிகார் பந்து என்னும் பட்டையில் கட்டினுள். அன்றியும் அவள் இமாம் ஸாமீன் என்பவருடைய ரூபாயாகிய தாழிற்றை என் புஜத்தில் கட்டி என் நெற்றியில் ஒரு தயிர் பொட்டு வைத்து கண்ணுங் கண்ணீருமாய் பின்வருமாறு சொல்லத் தொடங்கினுள்:—நீங்கள் இனி பிரயாணமாகலாம். நான் உங்களை ஈசன் கையில் ஒப்புவைத்து விட்டேன். இப்பொழுது எவ்வளவு ஸந்தோஷமாக உங்கள் முதுகை எனக்குக் காட்டிக் கொண்டு போகின்றீர்களோ அவ்வளவு ஸந்தோஷமாய் உங்கள் முகத்தைக் காட்டிக் கொண்டு நீங்கள் சடுதியில் திரும்பி என்னிடம் வந்து சேர வேண்டும்" என்றுள். நானும் அதற்கு "உன்னை ஈசன் என்றென்றைக்கும் காப்பாற்ற வேண்டும். உன் கட்டளைப்படி நான் கீழ்ப்படிந்தேன்" என்று சொல்லி அவ்விடம் விட்டுப் புறப்பட்டு குதிரை ஏறி சவாரி செய்துகொண்டு ஈசன் என்னைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையை முற்றிலும் கொண்டவனுக இரண்டு மிஜிலிகளை ஒரு மிஜிலியாகக் கடந்து தமஷ்க்குக் கருகாமையில் வந்து சேர்ந்தேன்.

"நான் கோட்டைவாயிற் கதவண்டை சேர்ந்த பொழுது இரவு வந்து வெகு நாழிகையாயிருந்தது. வாயிற் காப்போர்களும் காவற்காரர்களும் கதவை மூடியிருந்தார்கள். நான் எவ்வளவோ வருந்திக் கேட்டுக் கொண்டேன். நான் வழிப்போக்கன். வெகு தூர தேசத்திலிருந்து களைத்து வந்திருக்கின்றேன். கதவைத் திறந்து விட்டால் நான் பட்டினத்துக்குள் புகுந்து குதிரைக்கு கொள்ளு புல்லு வைத்து நானும் சிரம பரிகாரம் செய்து கொள்ளுவேன்" என்றேன். உள்ளிருந்து வெகு கோபத்துடன் சொற்பமாவது தயையேயின்றி பின்வருமாறு மறுமொழி வரலாயிற்று. "இத்

தனே நாழிகைக்குக் கதவு திறக்க எங்களுக்கு உத்திரவில்லை. ஏன் நீ இவ்வளவு நாழிகை சென்று வந்தாய்.'' இவ்வாறு அவர்கள் சொன்ன மறுமொழியை நான் கேட்டதும், இனி நாம் உட்புக வழியில்லை என்று அறிந்துகொண்டு, நான் கோட்டைச் சுவருக்கு வெளியிலேயே குதிரையை விட்டுக் கீழே யிறங்கி சேணத்தைக் கீழே பரப்பி அதன் மேலுட்கார்ந்து இளைப்பாற உத்தேசித்தேன். நான் விழித்திருக்க வேண்டி அங்கு மிங்கும் அலைந்து கொண்டிருந்தேன். எப்பொழுது இரவில் ஒருபாதி கழிந்து மற்றொரு பாதி மிருந்து நின்று நிச்சப்தமாய்ஒலியடங்கிற்றோ, அப்பொழுதுநான்கண்டகாட்சி யென்னவெனில், ஒரு பெட்டி கோட்டைச் சுவரின் மேலிருந்து கீழே வந்துகொண்டிருந்தது. அதைக்கண்டு நான் வெகு வியப்புற்று 'ஆ' இதென்ன மாயை. ஈசனே ஒருகால் என் கஷ்டங்களைப் பார்த்துக் கருணை கூர்ந்து தனது மாயா கோசத்தினின்று ஏதோ பாக்கியம் எனக்கு இப்பெட்டியின் வழியாக அனுப்பலானோரோ''என்று கருதலானேன். அப்பெட்டி பூமியின்மேல் உட்கார்ந்ததும் நான் வெகு பயத்துடன் அதை அணுகிப் பார்க்கையில் அது மரப்பெட்டியாக விருந்தது. வெகு ஆசையுடன் அதினுள்ளிருப்பது என்ன வென்பதை அறிய அதை நான் திறந்தேன். அதின் உள்ளே (எவரொருவரைப் பார்த்த மாத்திரத்தில் புத்தியே மயங்குமோ அவ்வளவு) அழகான பெண் ஒருவள் காயப்பட்டு ரத்தம் குழம்பிக் கொண்டு கண்கள் மூடி மரணவேதனையால் பரிதபித்துக் கிடக்கக் கண்டேன். அப்போதைக் கப்போது உதடுகள் மட்டும் சொற்பம் அசைந்துகொண் டிருந்தன. இச்சொற்களும் சொற்பம் அவள் மெதுவாய் சொல்லக் கேட்டேன். "ஓ நன்றியற்றவனே, கொடிய துஷ்டா? கொல் கொலைக் கஞ்சாதபாதகா, நானுன்னிட மிருந்த விசுவாஸத்துக்கும் உனக்குச் செய்த நன்மைக்கும் ஈடாகவா நீ இவ்வாறு என்னைச் செய்தாய்! நன்று நன்று; இன்னும் ஒரு வெட்டு வெட்டி உன் பாதகத் தொழிலை முற்றிலும் முடித்துக் கொள்ளுவாயாக. எனக்கும் உனக்கும் மத்தியிலிருந்து நியாயம் தீர்மானிக்க வேண்டிய கடமையை நான், ஈசனிடம் ஒப்பி வைத்தேன்.'' இவ்வளவு தூரம், அம்மாது சொல்லி விட்டு புத்தி மயங்கினவளாய்

தனது முந்தானை துணியை இழுத்து முகத்தை மூடிக்கொண்டாள். நானிருந்ததைப்பற்றி அவள் கவனிக்கவேயில்லை.

அவளைப்பார்த்த பின்னும் அவள் சொன்ன சொல்லைக் கேட்ட பின்னும் பக்கிரியாகிய நான் நடுநடுங்கலானேன். எனக்குள்ளேயே "யார், இவன், பாதகன், இவ்வழகான பெண்மணியை யிவ்வாறு காயப்படுத்தினான்; எப்பேய் அவனுள்ளத்தைப்பற்றி அவனை இவ்வாறு செய்ய ஏவிற்று, எவ்வாறு இவ்வழகான பெண்மணியை வெட்ட அவன் கை எழும்பிற்று. அப்பாதகனை இவ்வித மரணாவஸ்தையில்கூட இப்பெண்பிள்ளை நினைக்கின்றாளே" என்று நான் சொல்லிக்கொள்ளலானேன். இவ்விதமாய் நான் முணுமுணுத்ததை அவள் கேட்டு ஒருதடவை தன் முகத்திலிருந்த துணியை அகற்றி என்னைப் பார்த்தாள். அவள் பார்வை என்மேல் விழுந்ததும் நான் மோக மடைந்தவனானேன். என் மனம் துடித்தது. எவ்வளவோ சிரமத்துடன் என்மனத்தை நான் ஸ்திரப்படுத்திக்கொண்டு வெகு தைரியமாக "யார் நீ? உண்மையைச் சொல். இது என்ன கஷ்டம்! உனக்கு யாரால் விளைந்தது.' இச்சங்கதிகளை வெளியிட்டால் என் மனம் சொற்ப ஆறுதலடையும்" என்றேன். இதைக் கேட்டவுடன் மறுமொழி சொல்ல அவளுக்கு சக்தியே யில்லாமலிருந்தபோதிலும் வெகு மெதுவாக பின் வருமாறு சொல்லத் தொடங்கினாள்:—என் கதியோ நான் பட்டிருக்கும் காயத்தால் இன்னதென்று உமக்கே விளங்குகிறதல்லவா, நான் என்ன மண்ணுங்கட்டி சொல்லப்போகிறேன். ஏதோ சில விநாடிதான் நான் உமது ஆதரவி லிருக்கப்போகின்றேன். எப்பொழுது என் உயிர் போகின்றதோ அப்பொழுது தாங்கள் உங்கள் மானிடப் பிறப்புக்குத் தக்கபடி, ஈசனுக்கு ஒப்பாக அதிர்ஷ்டமற்ற என்னை இதே பெட்டியில் வைத்து ஏதாவது ஒரு குழி தோண்டிப் புதைத்து விடுங்கள். அப்படி நீங்கள் செய்வீர்களேயானால் நல்லோர்களும் தீயோர்களும் என்னைப்பற்றிச் சொல்லும் அபவாதத்திலிருந்து நான் விடுபட்டவளாவேன். நீங்களும் இவ்வுபகாரத்துக் கேற்ற பிரதிமரியாதையை ஈசனிடமிருந்து அடைவீர்." இவ்வளவு தூரம் சொல்லி விட்டு அம்மாது சிரோமணி வாய் மூடினாள்.

இரவாக விருந்தபடியால் எனக்கு ஒருவித யோசனையும் புலப்படவில்லை. அப்பெட்டியை எடுத்து என்னிடம் வைத்துக் கொண்டேன். நாழிகளை எண்ணலானேன். எவ்வாறு இவ்வளவு இரவு கழியும். எப்பொழுது பொழுது விடியும். நானும் ஊருக்குள் புகுந்து வைத்திய விஷயமாய் இவளுக்கு என்ன செய்யவேண்டுமோ அவ்வளவும் என் கையை விட்டுச் செலவு செய்து பார்ப்பேன் என்று ஏங்கலானேன். இரவு சொற்பந்தானிருந்ததென்றாலும் அது எனக்கு ஒரு மலையாக விருந்தது. மனம் நடுங்கிற்று. ஈசன் தான் கதி என்று அவன் மேல் பாரம் போட்டு நான் தயங்கி நிற்கையில் பொழுது விடியும் சமயம் அணுகிற்று. கோழி கூவிற்று. மனிதர்களுடைய சத்தம் கேட்கலாயிற்று. நானும் காலை நமாஸ் படித்து முடித்து அப்பெட்டியை ஜேணத்துக்குள் பதுக்கி வைத்தேன். கோட்டைக் கதவு எச்சமயம் திறக்கலாயிற்றோ அச்சமயம் நான் பட்டணத்திற்குள் புகுந்தேன். கடைத் தெருவில் ஒரு விடுதி குடிக்கூலிக்கு வாங்க முயன்று விசாரிக்கலானேன். தேடித் தேடி கடைசியாய் வெகு அழகாயும் எல்லாவித சௌகரியமும் அமைந்த ஒரு மாளிகையை குடிக்கூலிக்குப் பிடித்தேன். முதல் முதல் அவ் வழகான பெண்ணை பெட்டியிலிருந்து எடுத்து ஒரு மூலையில் ஒரு பஞ்சுக் குவியல் மேல் ஒரு படுக்கை விரித்து அதன் மேல் அவளை மெதுவாக படுக்க வைத்தேன். ஒரு நம்பிக்கையான மனிதனை அவளைப் பார்த்துக் கொண்டிருக்கச் செய்து அவ்விடம் விட்டு பக் கிரியாகிய நான் ஒரு ரணவைத்தியனைத் தேட வெளிக்கிளம்பினேன். ஒவ்வொருவனையும் நான் "இந்த ஊரில் கை தேர்ந்த ரணவைத் தியன் யார்? எங்கிருக்கின்றான்?" என்று கேட்டுக்கொண்டு திரியலானேன். அப்பொழுது ஒருவன் "இவ்வூரில் ரணவைத்தியத்திலும் மற்ற வைத்தியத்திலும் வெகு சமர்த்தனான ஒருவனிருக்கிறான் அவனுக்கு நிகரொருவருமில்லை. ஒரு சமயம் செத்த பிணத்தை அவனிடம்காம் கொண்டு போன போதிலும் ஈசனருள் மட்டுமிருக்கு மாகில் அவன் செய்யும் அழகான வைத்தியத்தால் அதற்கு உயிரு ண்டானாலும் உண்டாகும். அவன் இந்தப் பேட்டையில் இருக் கிறான். அவர் பெயர் ஈஸா" என்றான்.

நானிச்சமாச்சாரம் கேட்டதும் நான் உடனே அவனை நாடி ஓடி னேன். நான் கேட்டிருந்த அடையாளப்படி தேடி அவன் வீட்டைக் கண்டு பிடித்தேன். நானங்கு சேர்ந்த பொழுது ஒரு கிழவர் நடைத் திண்ணையில் முற்றிலும் நரைத்த தாடி தொங்க உட்கார்ந்திருந்ததை யும் அவருக்கருகாமையில் சிலர் பிளாஸ்திரி முதலிய மருந்துகளை கலுவத்தில் அரைத்துக் கொண்டிருந்ததையும் கண்டேன். பக்கிரி யாகிய நான் வெகு பயபக்தியுடன் வணக்கமாய் அவருக்கு ஸலாம் செய்து பின்வருமாறு சொல்லலுற்றேன்:—"ஐயா! நான் தங்க ளுடைய பெயரையும் தங்கள் நற்குணத்தையும் மிகக் கேள்வியுற்று தங்களை நாடி வந்திருக்கின்றேன். நான் வந்த காரியமோ? நான் வியா பார முறையில் என் ஊரை விட்டுப் புறப்பட்டவன். நான் என் மனைவியிடம் கொண்டிருந்த அதிகமான அன்பால் அவளையும் என்னு டனேயே அழைத்து வந்தேன். நானிப்பட்டணத்துக்கு அருகாமை யில் வந்து கொண்டிருந்தபொழுது பட்டணம் இன்னும் சொற்ப தூரமிருக்கையிலேயே பொழுது அஸ்தமித்து விட்டது. முன்பின் அறியாத நகரத்துக்குள் இரவில் நுழைவது நியாயமாக என் மன திற்படவில்லை. ஆகவே நான் இராப்பொழுதை கோட்டைக்கு வெளியில் ஒரு மரத்தினடியில் கழிக்கலானேன். இரவு கடைசியா மத்தில் திருடர்கள் வந்தார்கள். என்னிடமிருந்த பொருள் ஸாமான் இவைகளை எல்லாம் கொள்ளை யிட்டார்கள். நகையின் பேராசையால் என் ஸம்ஸாரத்தின் தேகத்தை முற்றிலும் காயம் செய்தார்கள். நான் ஒருவனாக ஒன்றும் செய்ய முடிய வில்லை. மிகுந்திருந்த இரவை எப்படியோ கழித்தேன். பொழுது விடிந்ததும் இந்நகரத்துக்குட் புகுந்து ஒரு வீட்டை வாடகைக்குப் பிடித்தேன். அவளை நானவ்விடத்தில் விட்டு உங்களிடம் ஓடி வந்திருக்கின்றேன். ஈசனே இந்த சாஸ்திரத்தில் முற்றிலும் உங் களிடம் அருள் காட்டியிருக்கின்றான். இந்தப் பிரயாணியாகிய என்னிடம் உள்ளங்குளிருங்கள். என் குடிசைக்கு வந்து சொற்பம் இளைப்பாருங்கள். அவளைச்சற்றுப் பாருங்கள். அவளுக்கு ஒரு கால் உயிர் வந்தால் உங்கள் புகழ் ஓங்கும். நானும் என் வாழ் நாட் கள் முழுமையும் உங்களுக்கு அடிமையாய் விடுவேன்" என்றேன். அந்த ஈஸா என்ற வைத்தியர் வெகு தயாளமான உள்ளமமைந்

தவர். ஈசன் பக்தி நிரம்ப உள்ளவர். ஏழையாகிய என் சொல்லைக் கேட்டு மனமிரங்கி என்னுடன் கூடவே நானிறங்கி யிருந்த வீட்டுக்கு வந்தார். காயத்தைக் கண்ணுற்றவுடன் எனக்கு ஆறுதலை சொன்னார்:—

"ஈசன் கடாக்ஷத்தால் இவ்வம்மணியின் காயங்கள் நாற்பது நாட்களுக்குள் ஆறிவிடும். நான் அப்பொழுது அவளுக்கு தலைக்கு ஜலம் விடும்படி செய்ய முடியும்" என்றார்.

உடனே அந்த நல் வைத்தியர் எல்லாக் காயங்களையும் வேப்பிலை போட்டு காய்ச்சின வெந்நீரால் வெகு அழகாக முதல் முதல் அலம்பினார். எக்காயங்களை அவர் தைக்க முடியும் என்று கருதினாரோ அவைகளைத் தைத்தார். மற்றகாயங்களுக்கு அவர் தனது பையிலிருந்து ஒரு சிமிழை எடுத்து அதிலிருந்து பிளாஸ்திரி பொறுக்கி சில காயங்களுக்குப் போட்டார். மற்ற சில காயங்களில் மருந்து பூசி பஞ்சு வைத்துக் கட்டினார். இவ்வாறு செய்து வெகு அன்பாய் என்னை நோக்கி "நான் காலைமாலை இரண்டு வேளையும் தப்பாமல் வந்து கொண்டிருப்பேன். அவள் மட்டும் அதிகமாய் அசையாமல் நீர் வெகு ஜாக்கிரதையாகப் பார்க்க வேண்டும். அப்படி அசைத்தால் கட்டுகள் உடைந்து போகும். அவளுக்கு ஆகாரம் கோழிக்குஞ்சு ஷோர்பா சொற்பம் சொற்பமாய் பல தடவை ஏற்ற வேண்டும். அதல்லாமல் அவள் தேகத்தில் பலம் குன்றாமலிருக்க கஸ்தூரி ஸாரத்தை அத்தரில் கலந்து அவளுக்கு அடிக்கடி கொடுத்து வாருங்கள்" என்றார். அவ்வாறு சொல்லி விட்டு அவர் விடை கேட்கலானார். நான் அவரை எவ்வளவோ வணங்கி கைகளைக் கூப்பிக்கொண்டு "ஐயா! நீங்கள் செய்த ஆறுதலையால் நானும் என் உயிரையே திரும்பப் பெற்றேன். அது மட்டு மில்லா விடில் நான் என் பிராணனை விடுவதைவிட எனக்கு வேறொன்றும் புலப்படாமலே யிருந்தது. ஈசன் உங்களை என்றென்றைக்கும் ஓர் விதக்குறை வில்லாமல் வைப்பாராக" என்று சொல்லி பாக்கு வெற்றிலை அத்தர் கொடுத்து அவருக்கு விடைகொடுத்தனுப்பினேன். இரவும் பகலும் நான் வெகு ஜாக்கிரதையாக அக்கட்டழகி முன் காத்துக்கிடந்தேன். என் தேக சௌக்கியம் என்பதை "சைய்" என்று நான்

முற்றிலும் கைவிட்டேன். ஒவ்வொரு நாளும் கடவுளுடைய ஸந்நிதானத்தில் எவ்வாறாவது அவள் உடம்பு அனுகூலமாய் அவள் எழுந்திருக்க வேண்டுமே என்று நான் பிரார்த்திக்கலானேன்.

இதற்குள் அவ்வியாபாரித் தலைவனும் வந்துசேர்ந்தான். என் சொத்துக்களையும் சரக்குகளையும் என் வசம் ஒப்பிவைத்தான். நானும் அவைகளை வீசம் அரைக்கால் கம்மியாக சமயத்துக்குத் தக்கபடி விற்று அப்பணத்தை மருந்து விஷயமாகவும் மற்ற சிகிச்சை விஷயமாகவும் செலவிடலானேன். அவ்வைத்தியரும் தினந்தோறும் வந்து போய்க்கொண்டிருந்தார்; சொற்ப காலத்தில் அக்காயங்களெல்லாம் கூடி ஆற ஆரம்பித்தன. இன்னும் சொற்ப நாளில் தலைக்கு ஜலம் விடப்பட்டது. அப்பொழுது என் உள்ளத்தில் ஓர்வித ஒப்பற்ற ஆனந்தம் உதிக்கலாயிற்று. பட்டு துப்பட்டாக்கள் பைசிரம்ப வராகன்கள் இவைகளை ஈஸா என்ற வைத்தியர் முன்பாக நான் வைக்கலானேன். அக்கட்டழகியை ஒரு ஆஸனத்தில் அழகான ரத்தினக் கம்பளம் பரப்பி உட்காரவைத்தேன். அவள் சௌக்கியமடைந்த அவ்வுற்சவ தினத்தில் பக்கிரியாகிய நான் ஏழைகளுக்கு எவ்வளவோ தக்ஷிணை கொடுத்தேன். அந்நாள் இப்பக்கிரிக்குண்டான ஸந்தோஷம் எவ்வாறென்றால், இவ்வேழு உலகங்களை யுடைய ஏகசக்ராதிபத்யமே எனக்குக் கிட்டியிருந்தாற் போலும் அக்கட்டழகியை ஸ்நானம் செய்து உட்கார்த்தினதும் அவள் மேனியில் தோன்றிய வண்ணம் (நிறம்) எவ்வாறாக தோன்றிற்றென்றால் அவள் முகம் சூரிய பிம்பம்போலும் அவள் தேகம் பத்தரை மாற்றுத் தங்கம் போலும் பளபளவென்று மின்னலாயின. கண்கள் அவளைப் பார்க்கவே முடியாமல் கூச்சமடைந்தன. பக்கிரியோ கவலையும் கருத்துமாய் அவள் காலாலிட்ட வேலையை தலையால் செய்ய அவள் முன்பாகக் காத்து நின்றேன். அவள் எவ்விதக் கட்டளையிடுவாளோ அதை உடனே நிறைவு பெற்றதாகப் பார்ப்பாள். அவளும் தனது அழகின கர்வத்தாலும் இளமையின் செறுக்காலும் எப்பொழுதாவது என் பக்கம் பார்த்தால் அப்பொழுது வெகு ஐம்பமாய் பின் வருமாறு கட்டளை யிடுவாள்:—"ஜாக்கிரதை. நீ என்னுடைய தயவை விரும்பும் பக்ஷத்தில் என் விஷய

மாய் மூச்சுக்கூடவிடாதே. நான் எப்படிச் சொல்லுவேனே அப்படி உடனே தடுக்காமல் செய்து முடிக்க வேண்டும். அதற்கு மேலாக என் பேச்சில் நீ ஒருவிதக் காரணமும் கேட்கலாகாது. நான் சொல்லுகிறபடி நீ நடக்காமற் போனால் பின்னால் பச்சாத்தாபப் படுவாய்.'' இப்படி அவள் சொன்னாள் என்றாலும் அவள் என்னிடம் நடந்து கொண்ட மாதிரியால் அவள் உள்ளத்தில் நானவளிடம் நடந்து கொண்ட அன்பும் நானவளுக்குச் செய்த உபகாரமும் பதிந்திருந்ததாகவும் அவைகளுக்குப் பதிலாக எனக்கு ஏதாவது திரும்பச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவளிடமிருந்ததாகவும் விளங்கின. நானோ அவள் அநுமதியின்றி ஒரு காரியமும் செய்யவேயில்லை. அவள் காலாலிடும் கட்டளையை தலையால் செய்து முடிக்கின்றவனாக நடந்து கொண்டு வந்தேன்.

இவ்வண்ணமாய் சொற்பகாலம் அவள் இரகஸியம் என்னவென்பது விளங்காமலும் அவள் கட்டளைப்படி நான் கீழ்ப்படிந்து நடப்பதுமாய் சென்றது. எந்த வேளையில் என்ன விஷயமாய் அவள் ஆக்ஞாபிப்பாளோ அப்படியே அவ்வேளையில் நான் முன் பின் கேட்காமலே செய்து முடிப்பேன். இப் பக்கிரியிடம் என்னென்ன முதல், லாபம் என்று பண மிருந்தனவோ அவைகள் அவ்வளவும் செலவாயின. ஒருவரும் பரிசசய மில்லாத வேறு தேசத்தில் என்னை யார் நம்புவார்கள். யார் நம்பிக்கையைக்கொண்டு நான் கடனாவது வாங்கி செலவு செய்ய முடியும். கடைசியாய் அன்றன்றைச் செலவுக்கே கஷ்டம் எனக்கு உண்டாய்விட்டது. அப்பொழுது என்மனம் முற்றிலும் நடுங்கலாயிற்று. இக்கவலை என்னை மூடவே என் முகக் காந்தி குன்றிற்று. என் மனத்தினுள் வேகலானேன். ஆனால் நான் யாரிடம் என் அவஸ்தையைச் சொல்லிக் கொள்ளமுடியும். மனத்தினுள் என்ன அவஸ்தையோ அது மனத்தினுள்ளேயே தானிருக்க வேண்டும். ''பக்கிரியின் அவஸ்தை அவன் உயிரோடபடவேண்டுமல்லவா.'' ஒரு நாள் ஆக்கட்டழகிதானே தனது புத்தியால் யோசித் தறிந்து கொண்டு என்னைப் பார்த்துப் பின் வருமாறு சொல்லலானாள்;—ஐயா நீர் எனக்குச் செய்திருக்கும் உபகாரம் என் உள்ளத்தில் கல்லின்மேல் எழுத்துப்போல் பதிந்திருக்கின்றது. நானதற்கு என்றைக்கும் பதில் உபகாரம் செய்ய

வேண்டியவள். ஆனலிப்பொழுது அவ்வாறு செய்ய சக்தியற்றவளாக விருக்கின்றேன். ஆனலிப்பொழுது நமக்கு அவசியமாக வேண்டிய செலவுக்கு ஏதாவது ஸங்கடமிருந்தால் நீர் சொற்பமேனும் மனத்தில் கவலையேபடவேண்டாம். ஒரு துண்டு காகிதம், மைக்கூடு, பேனு, இவைகளை என் முன் சொற்பம் கொண்டு வந்து வையுங்கள்" என்றாள். நானப்பொழுது இவள் ஏதோ ஒரு தேசத்து ராஜகுமாரத்தி, அந்த தைரியத்தாலும் செருக்காலும் இவளிவ்வாறு நம்மைப் பார்த்துச் சொன்னுள் என்று நினைத்துக்கொண்டேன். உடனே அவள் முன்பாக எழுதும் கருவிகளை சித்தப்படுத்தினேன். அவளும் வெகு அழகான எழுத்தால் ஒரு சிறு கடிதம் எழுதி என் கையிற்கொடுத்து பின்வருமாறு கட்டளையிடலானுள்:—கோட்டைக் கருகாமையில் முக்கவான்கள் வசிக்கும் வாயிற்படி ஒன்றிருக்கிறது அதற்கடுத்த தெருவில் ஒரு பெரிய மாளிகை காணப்படும். அம் மாளிகைக்கு யஜமானுடைய பெயர் ஸிதிபஹார். அவரிடம் சென்று இக்கடிதத்தைக்கொடும்.

அவள் கட்டளையிட்டபடியே இப்பக்கிரி அப்பெயரையும் அவ்வடையாளங்களையும் பற்றிச் சென்று அதே வீடு சேர்ந்தேன். வாயிற் காப்போனிடம் நான் கடிதம் கொண்டு வந்திருக்கும் ஸங்கதியைச் சொல்லி உள்ளே அனுப்பினேன். அச்சமாசாரம் எட்டினதும் ஒரு ஹபஷி (Abysinian) ஜாதி இளைஞன் வெகு அழகாக அவன் முகம் விளங்க ஒரு மின்னும் பாகையைத் தலையில் கட்டினவனுக என்னிடம் வந்தான். அவன் நிறம் கறுப்பு தான் என்றாலும் அவன் முகம் குருகுரு வென்று அழகாகவே யிருந்தது. அவன் என் கையிலிருந்த கடிதத்தை வாங்கிக்கொண்டான்; என்னை ஒரு விதக் கேள்வியும் கேட்கவேயில்லை. என்னிடம் அவன் வாய் திறந்து ஒன்றும் சொல்லவுமில்லை. அவன் வந்தபடியே அதே நடையாக உள்ளே திரும்பிச் சென்றான். சொற்ப நேரத்துக்கெல்லாம் அவன் சில வேலைக்காரர்கள் தலைமேல் மொகரிட்டு ஸரிகை துப்பட்டாவால் மூடப்பட்டு வைக்கப்பட்டிருந்த பதினொன்று பைகளைப் பதினொரு தட்டுகளில் வைத்து வெளியே அழைத்து வந்து அவர்களை நோக்கிச் சொன்னதாவது:—"இச்சிறுவர் பின்னேசென்று

அவர் சொல்லுமிடத்தில் இவைகளை இறக்கிவிட்டு வாருங்கள்.” நான் அவருக்கு ஸலாம்செய்து அவரிடம் விடைபெற்று அவை களை என் வீடு கொண்டுவந்து சேர்த்தேன், ஆட்களை வாயிலிலி ருந்தபடியே விடை கொடுத்தனுப்பினேன். அப்பைகளை எல்லாம் தட்டுகளில் வைத்திருந்தபடியே அக்கட்டழகி முன்பாகக் கொண்டு போய் வைத்தேன். அவைகளைக் கண்ணுற்றதும் அவள் கட்டளை யிட்டதாவது:—“இதோ இந்தப் பதினொன்று பைவிராகன்களையும் எடுத்துக்கொண்டு பணத்தை வீட்டுச் செலவுக்கு உபயோகப்படுத் திக்கொள்ளும்; ஈசன் எப்பொழுதும் கருணை நிரம்பியவர்.” நானும் அப்பொன்னை எடுத்துக்கொண்டு அப்போதைக் கப்பொழுது வேண்டியவைகளில் தாராளமாகச் செலவு செய்யலானேன். என் மனம் ஒருவாறு கவலையற்ற தாயிற்றென்றாலும் உள்ளத்தில் இக் குழப்பம் உண்டாயிருந்தது:—“ஜகதீசா! இதென்ன ஆச்சரியம். என்னை ஒரு கேள்வியும் கேட்கவில்லை. நானவனைக் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை; முன் பின் அறியாத ஓர் மானிடன் ஒரு துண்டுக் கடிதத்தைக் கண்ணுற்ற மாத்திரத்தால் முன்பின் அறியாத என்னி டம் இவ்வளவு பணத்தை ஒப்பி வைத்தானே. இது என்ன விந்தை. இக்கட்டழகியைத்தான் இதைப்பற்றிக் கேட்போமென் றாலோ அதுவும் முடியாமலிருக்கிறதே. அவள் முன்னமேயே என்னை எச்சரித்திருக்கின்றாள் அன்றோ” என்று பயத்தால் நடு நடுங்கினவனாய் வாய் திறவாமலிருந்தேன்.

இது நடந்த எட்டு நாட்களுக்கப்பால் அக்கட்டழகி என்னிடம் பின்வருமாறு வாய் திறந்து பேசலானாள்:—“ஈசன் மானிடனுக்கு தையை என்ற உடையை அளித்திருக்கின்றான். அதை நாம் கிழிக்க வும் கூடாது, அழுக்காக்கவும் கூடாது. ஏதோ பழைய உடை அணிந்திருப்பதால் ஒரு மனிதனுக்கு ஒருவிதக்குறைவும் நியாயமாய் விளையாது என்றாலும், உலகத்தார் கண்கள் முன்னர் அவனுக்கு அக் காரணத்தால் மரியாதைகள் நடக்காமலிருப்பது வழக்கம். ஆகை யால் நீங்கள் இரண்டு பைகள் தங்க நாணயம எடுத்துக்கொண்டு கடை வீதிக்குச் சென்று யூஸுப் என்ற வியாபாரியின் கடைக்குப் போய் நல்லவிலைக்கு சில ரத்தினங்களும் அழகான வரிகை உடுப்பு

கள் இரண்டும் வாங்கிக்கொண்டு வாருங்கள்" என்றாள். பக்கிரியும் அப்பொழுதே குதிரை ஏறி ஸவாரிசெய்துகொண்டு அதே கடையை நாடிச் சென்றேன். நானங்கு கண்டதென்னவெனில், ஒரு அழகான இளைஞன் மஞ்சள்நிறமான உடுப்பு அணிந்து அக் கடை முன்னர் ஒரு மெத்தையின்மேல் உட்கார்ந்திருந்தான். அவன் அழகு எவ்வாறிருந்த தென்றால் அவனைக் கண் குளிரப் பார்க்க வேண்டியே ஏகமாக ஜனங்கள் அவன் கடை முதல் கடைத் தெருவு கோடி வரையில் ஒரே கூட்டமாய் நின்றுகொண்டிருந்தார்கள். பக்கிரியாகிய நானும் வெகு ஆனந்தத்துடன் அவனருகாமையிற் சென்று "ஸலாம் ஆலைகா" என்று மரியாதை செய்து அவனிடம் உட்கார்ந்தேன். எனக்கு வேண்டியிருந்த ஸாமான்களை அவனிடம் தெரிவித்துக் கொண்டேன். நான் பேசின பேச்சு கீச்சு அவ்வூரான் பேச்சல்ல. சொற்பம் வித்தியாசமாக விருந்தது. அச்சிறுவன் வெகு ஸந்தோஷத்துடன் "ஐயா தங்களுடைய உத்தரவு என்னென்ன வேண்டுமோ அவைகள் யாவும் இவ்விடம் ஸித்தமாக விருக்கின்றன. தாங்கள் எவ்வூரிலிருந்து இங்கு வந்தவர்கள்? இவ்வயலூரில் தாங்கள் தங்கி யிருக்கும் காரணம் என்னவோ இவைகளைப் பற்றி தாங்கள் வாய்மலர்ந்தால் அது தாங்கள் தயை விட்டு விலகாததாக விருக்கும்" என்றான். நானோ என் கதையை வெளியிடுவது நியாயமில்லாம லிருந்தது. ஆகையால் நான் ஏதோ ஒரு கதை பிட்டுக்கட்டி சரேல் என்று சொல்லி ரத்தினங்களும் உடுப்புகளும் வாங்கிக்கொண்டு அவைகளின் விலையைக் கொடுத்துவிட்டு அவ்விடம் விட்டுப் போக அவனிடம் விடை கேட்கலானேன். அதைக் கேட்டு அவ்விளைஞன் சொற்பம் மனங் கசந்தவனாய் பின் வருமாறு சொல்லலுற்றான்:—ஐயா, உங்களுக்குள் இவ்வளவு ஒதுங்கி யிருக்க வேண்டுமென்ப திருந்தால் ஆரம்பத்திலேயே அவ்வளவு அதிகமாய் நட்பு கொண்டாடிக்கொண்டு வராம லிருக்கலாம். நற் சகவாசம் செய்யும் உத்தமர்களுக்குள் "ஸாஹிப் ஸலாமத்" "ஸலாம் அலைகா" என்ற மரியாதைப் பேச்சுகளின் அருத்தம், வெகு பெரிய நல்லவா என்று அவன் வெகு அழகாயும் மரியாதையாயும் சொல்லவே, என் மனம் பேரானந்தங் கொண்டுவிட்டது. அவ்வளவு சடுதியில் அவனை விட்டு விடை பெற்றுப்போவது எனக்கு மரியாதையாகப்

புலப்படவில்லை. வெகு அக்கிரமமாகவுந் தோன்றிற்று. உடனே நான் மறுபடியுமவன் அருகே உட்கார்ந்து அவன் மனத்தைக் களிப்பிக்க "ஐயா, உமது கட்டளை என் கண்மேலும் தலைமேலும். நானிதோ காத்திருக்கிறேன்" என்றேன்.

இவ்வண்ணம் நான் சொன்னதும், அவன் வெகு சந்தோஷமடைந்து புன்னகையுடன் என்னை நோக்கிச் சொல்லலுற்றான். "ஐயா, தாங்கள் இவ்வேழை வீட்டில் இன்று உங்களுடைய திருவடிகளைச் சாற்றினால் அவ்விடம் நாம் ஸந்தோஷக் கூட்டம் கூடி இரண்டொரு நாழிகை நமது மனத்தைக் களித்துக்கொண்டிருப்போம். ஏதோ சொற்பம் புசித்து சொற்பம் பானம் பண்ணி நமது உள்ளத்தை ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொள்வோம்" என்று அவன் சொல்லவே, பக்கிரி ஒரு போதும் அக்கட்டழகியைத் தனிமையில் விட்டு வராதவனாகையால், அவள் தனிமையிலிருக்க வேண்டியதை நினைத்தவனாய் நான் எவ்வளவோ என்றால் முடியாது. என்னை மன்னிக்க வேண்டும், என்று வேண்டி பார்த்தேன். அச்சிறுவனோ நான் என்ன சொன்னாலும் ஒப்புக்கொள்ளப்பட்டவனாக காணப்படவேயில்லை. கடைசியாய் நான் வாங்கின ஸாமான்களை வீட்டில் கொண்டு போய் வைத்து விட்டுத் திரும்பி வர விடை பெற்றவனாய் அவ்வாறு அவசியம் வர ஆணையிட்டவனாய் என்னிடம் அவ்விளைஞன் ஸத்தியம் வாங்கிக் கொண்டு என்னை வீட்டுக்குப் போக விடை கொடுத்தான். நானும் அக்கடையை விட்டு வெளிக் கிளம்பி ரத்தினங்களையும் உடுப்புகளையும் எடுத்துக்கொண்டு அக்கட்டழகியின் முன்பு வந்து நின்று அவள் ஸமூகத்தில் வைத்தேன். அவளும் அம்மணிகளின் விலையையும் அந்த ஸரிகை உடுப்புகளின் விலையையும் இன்னும் அவ்விடம் நடந்ததையும் பற்றி விசாரிக்கலானாள். நானும் எல்லா சங்கதிகளையும் நிறை, விலை முதலியவற்றையும், அவ்வியாபாரி என்னை கட்டாயப்படுத்தி அழைத்ததையும்பற்றி ஒன்று விடாமற் சொன்னேன். எல்லாவற்றையும் கேட்ட பிறகு, அவள் பின் வருமாறு கட்டளையிடத் தொடங்கினாள்:—"ஒரு மனிதன் ஒரு சமயத்தில் ஒருவித வாக்குக் கொடுத்து விட்டால், அதைப் பரிபூரணம் செய்து வைப்பது அவனுடைய முக்கியமான கடமையல்

ல்வா? என்னை நீங்கள் ஈசன் ஸம்ரக்ஷணையில் ஒப்பிவைத்து நீங்கள் கொடுத்து வந்த வாக்கைப் பரிபூரணம் பண்ணிக் கொள்ளுங்கள் ஒரு வாக்கை நாம் ஒருவருக்குக் கொடுத்து விட்டால் அதைப் பரிபூரணம் செய்து வைப்பது ஸ்வதந்த்ரமென்ற சடங்கு செய்து வைத்ததற் கொப்பாகும்'' என்று அவள் சொல்லவே நான் ''என் மனமோ உம்மை இவ்விடம் தனியே விட்டுப் போக ஒப்பவே யில்லை. ஆனால் உங்களுடைய உத்தரவோ இவ்வாறிருக்கின்றது. அதை மீறி நடக்க வழியற்றவனாய் இருக்கின்றேன். நான் திரும்பி வரும் வரையில் என் உள்ளம் இவ்விடமே குடி கொண்டிருக்கும்'' என்று சொல்லி விட்டு, மறுபடி அவ்விரத்தின வியாபாரி கடையருகே வந்தேன். அவனும் ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்து என்னை எதிர்பார்த்திருந்தான். என்னைக் கண்டதும் ''வாருங்கள், தங்கள் தயை, நானும் வெகு நாழியாகக் காத்திருக்கின்றேன்' என்றான்.

அவ்வண்ணம் சொல்லிக் கொண்டே எழுந்து என் கையைப் பற்றிக் கொண்டே புறப்பட்டு விட்டான். சொற்ப தூரம் நடந்து என்னை ஒரு தோட்டத்திற்குள் அழைத்துப் போனான். அத்தோட்டமோ வெகு அழகான தோட்டம். சிறு குளங்களிலும் வாய்க்கால்களிலும் நீரியந்திரங்கள் அழகாக அசைந்து கொண்டு நீரை இறைத்துக் கொண்டிருந்தன. பழுத்த பழங்கள் பலவகை நிரம்பி ஒவ்வொரு மரத்தின் பல கிளைகளும் அப்பாரத்தைத் தாங்க முடியாமல் வளைந்திருந்தன. பல நிறங்களமைந்த பறவைகள் அம்மரங்களின் மேல் உட்கார்ந்து வெகு மதுரமாய்ப் பாடிக் கொண்டிருந்தன. அத்தோட்டத்தின் மையத்தி லிருந்த மாளிகையின் ஒவ்வொரு அறையில் வெகு விலையுயர்ந்த ரத்னக் கம்பளங்கள் வெகு அழகாக விரிக்கப்பட்டிருந்தன. அங்கு ஒரு வாய்க்காலின் அருகாமையிலிருந்த ஒரு பங்களாவில்போய் உட்கார்ந்தோம். ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவன் அவ்விடம்விட்டு எழுந்து உட்சென்று உடை மாற்றி வெகு அழகான உடுப்பு அணிந்து திரும்பிவந்தான். அவ்வண்ணம் அவன் வரக் கண்டதும் நாம் ''கருணாகரக் கடவுளே, ஓர்வித திருஷ்டியும் இவர்மேல் விழாமலிருக்க நீ ஆசீர்வதிப்பாயாக'' என்றேன். இதைக்கேட்டதும் அவன் புன்னகை செய்து என்னைப்

பார்த்து "ஐயா, நீங்களும் இப்பொழுது உங்கள் உடுப்பை மாற்றிக் கொள்ளுவது நியாயமல்லவா" என்றான். அவன் மனத்தைக்களிப்பிக்க நானும் என் உடுப்பை மாற்றி வேறு உடுப்பு அணிந்தேன். அவ்வாலிப வியாபாரி வெகு விமரிசையாக என் மனதைக் களிப்பிக்க என்னென்ன வேண்டுமோ அவ்வளவையும் வெகு ஏராளமாகச் சேகரித்து எனக்கு விருந்திடச் சித்தமாக விருந்தார். அவர் என்மேல் வைத்திருந்த அபிமானத்தை முற்றிலும் வெளிக் காட்டிக்கொண்டு வெகு அன்பாகப் பேசலானார். அவருடைய பேச்சும் வெகு நயமாகவும் அழகாகவு மிருந்தது. அவர் என்னிடம் பேசிக்கொண்டிருந்த பொழுதே ஒரு வேலைக்காரன் ஒரு அழகான ஜாடியில் பானகம் ஏந்தி வெள்ளைக் கல்லாலாகிய ஒரு பியலாவை மற்றொரு கையில் எடுத்துக்கொண்டு வந்து நின்றான். எவ்வளவோ விதமான சிற்றுண்டிகள் எங்கள் முன்பாக வைக்கப்பட்டன. உப்புக் கிண்ணங்கள் அழகாகப் பரப்பப்பட்டன. பானகம் நிரம்பிய பியலா எங்களுக்கு உபசாரத்துடன் கொடுக்கப்பட்டது; மூன்று நான்கு கிண்ணங்கள் நாங்கள் உட்கொண்டதும் நான்கு சிறு பையன்கள் வெகு அழகாக விளங்கிக்கொண்டு அவர்கள் தலைமயிர் வெகு சிங்காரமாய் விரிக்கப்பட்டுத் தொங்க எங்கள் முன்பாகத் தோன்றி ஆடவும் பாடவுமாரம்பித்தார்கள். அக் காட்சி எவ்வளவு அழகாக விருந்த தென்றால் அச்சமயத்தில் "தான்ஸேன்" — நாரதர் — தும்புரு — அவ்விட மிருந்தக்கால் அவர்களும் தாங்கள் கற்றிருந்த ஆட்டங்களையும் ராகங்களையும் மறந்திருப்பார்கள். "பைஜு—பாவொரா" என்பவரும் பைத்தியங்கொண்டிருப்பார். இவ்வித உற்சவம் நடந்துகொண்டிருந்த பொழுது அச்சிறுவன் திடீர் என்று முகம் வாடினான். அவன் கண்கள் நீரால் ததும்பலாயின. அவன் கண்களிலிருந்து இரண்டொரு துளிகள் கீழே விழலாயின. உடனே அவன் என் பக்கமாக முகத்தைத் திருப்பி என்னை நோக்கி "ஐய! உமக்கும் நமக்கும் இப்பொழுது முதல் நமது வாழ் நாட்கள் முழுமையும் நீங்காத நட்பு விளைந்து விட்டது. ஆகையால் இனி நமது உள்ளத்திலிருக்கும் ரகஸியத்தை ஒருவருக்கொருவர் மறைத்து வைப்பது ஒரு மதத்திலும் நியாய மென்று சொல்லப்படவே யில்லை. நமது நட்பின் நம்பிக்கையால் நான் என்

உள்ளத்திலிருக்கும் ஒரு ரகஸியத்தை உம்மிடம் வெளியிடப் போகின்றேன். நீங்கள் மட்டும் விடை கொடுத்தால் நான் என் நாயகியை இவ்விடம் வரவழைத்து என்னருகாமையில் உட்கார வைத்துக்கொண்டு என் மனத்தை ஆனந்தம் செய்து கொள்வேன். அவள் என்னிடமில்லாத வரையில் எனக்கு ஒருவித ஆனந்தமும் கிடையவே கிடையாது."

இப்பேச்சை அவன் வெகு ஆவலுடன் சொன்னபடியால், நான் அப் பெண்ணைப் பார்க்காவிடினும் அவளைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை என் மனதில் உதிக்கலாயிற்று. நான் மறுமொழி சொல்லலானேன். "ஐயா! தங்கள் மனத்தின் ஸந்தோஷம் எனது முக்கிய கருத்தல்லவா? நீங்களிப்பொழுது சொல்லுவதைவிட எது பெரிது. தாமதம் வேண்டாம். அன்பான நாயகி ஸமீபத்தி லில்லாவிடில் ஒன்றும் ருசிக்காது என்பது திண்ணம்" என்றேன். அதைக் கேட்டதும் அங்கு தொங்கிக்கொண்டிருந்த ஒருதடுக்கை நோக்கி ஓர்வித அடையாளஞ் செய்தான். உடனே ஒரு பெண் பிள்ளை பிசாசுபோல கருத்தவளாய், பூதாகாரமாய், எவளொரு வளைக் கண்ட மாத்திரத்தில் ஒருவன் விதியின் உதவியே யில்லாமல் உடனே பிராணனை விடுவானோ அவ்வளவு கோரமாய் வெளிவந்து அவனருகாமையில் உட்கார்ந்தாள். அவளைக் கண்ட மாத்திரத்தில் பக்கிரியாகிய நான் மெய் பதறலானேன். என் மனத்திலுள் "ஆகா! இவ்விகாரமான பெண் பூதத்தை ஒரு அழகான வாலிபன் இவனைப்போலொத்தவன் நேசிக்கவும் முடியுமா? இவளைப் பற்றி யா இவ்வளவு மேன்மையாக இவன் புகழ்ந்தான். இவளிடமா இவ் வண்ணம் அன்பு பாராட்டுவதாகச் சொன்னான்" என்று யோசித்து விட்டு ஈசனைத் துதித்தேன். இக்காட்சியைக் கண்ட நம்மை யாவு மணுகாம லிருக்க ஈசுவரதியானம் செய்துவிட்டு நான் வாய் மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். இதே பிரகாரமாய் குடி, கூத்து, பாட்டு இவ்வாறான விநோதத்தில் மூன்று நாள் இரவும் பகலும் கழிந்தன. நான்காமிரவு குடி மயக்கமும் தூக்கமும் வெற்றி கொண்டன. நானும் மெய்மறந்து தூங்கினேன். பொழுது விடிந் தது. அவ்வாலிபன் என்னை எழுப்பலானான். சாந்தமான பாணம்

எனக்குக் குடிக்கும்படி கொடுத்தான். அதன் பிறகு தன் அன்பான நாயகியை நோக்கி "இனிமேல் நமது விருந்தாளியை வருத்துவது நியாயமில்லை" என்றான்.

அவன் என் இரு கைகளையும் பற்றிக்கொண்டு எழுந்தான். நான் புறப்பட்டுப் போக விடைகேட்டேன். வெகு ஸந்தோஷத்துடன் எனக்கு விடை கொடுத்தனுப்பினான். உடனே நான் என்னுடைய சொந்த உடுப்பை அணிந்து கொண்டு என் வீடு திரும்பி வந்து அக் கட்டழகியின் ஸமூகம் சேர்ந்து அவள் முன்பாக நிற்கலானேன். இதற்கு முன் இவ்வாறு நான் என் கட்டழகியைத் தனிமையில் வீட்டில் நிறுத்தி வெளியே சென்று இரவை ஒரு பொழுதும் கழித்தவனே அல்லன். ஆகையால் அவ்வாறு மூன்று நாளிரவு பகல் அவளைவிட்டு நான் வெளியே சென்றிருந்ததற்கு நானே வெட்கி என்னை மன்னிக்கும்படி வெகுவாக வேண்டிக் கொண்டேன். அன்றியும் எனக்கு நடந்த விருந்தின் ஸம்பரமத்தையும் அவன் எனக்கு விடை கொடுத்தனுப்பாமல் வைத்துக்கொண்ட நிர்ப்பந்தத்தையும் தெரிவித்தேன். அவளோ இவ்வுலக வியல்பை நன்றாக வறிந்தவள். புன்னகையுடன் அவள் என்னை நோக்கி "ஒரு நண்பனுக்காக நீர் தாமதித்தால் என்ன குடிமுழுகிப்போயிற்று. அதற்காக நீங்கள் யோசிக்க வேண்டாம். நான் உங்களை மனப்பூர்வமாக முற்றிலும் மன்னித்துவிட்டேன். உங்கள்மேல் என்ன குற்றம்? எப்பொழுது ஒரு மனிதன் மற்றொரு மனிதன் வீட்டுக்குப் போகின்றானோ அப்பொழுது அவன் சௌகரியப்படி அவனிடம் விடை பெற்றுத்தானே திரும்பி வரவேண்டும். ஆனால் நீங்கள் ஒருவிதச் செலவுமின்றி அவர் செலவில் தின்றும் குடித்தும் விட்டு சும்மா விருக்கப்போகின்றீரா, அல்லது அவரை மறுபடி மறு விருந்துக் கழைக்கப் போகின்றீரா? நீங்க ளிப்பொழுதே எழுந்து அவ்வியாபாரி வாலிபனை விருந்துக் கழைத்து உம்முடன் கூட்டிக்கொண்டு வாருங்கள். அவர் உமக்குச் செய்த விருந்தைக் காட்டிலும் இருமடங்கு விமரிசையுடன் அவருக்கு நாம் விருந்தளிப்போம். ஸாமான்கள் ஒன்றுங் காணோமே என்ற ஸந்தேகம் உமக்கு சொற்பமேனும் வேண்டாம். ஈசுவர பிரசாதத்தால் ஒரு சேடி

யில் எல்லா சாமான்களும் வித்தமாய்விடும். வெகு விமரிசையாய் எல்லா ஏற்பாடுகளும் நடத்தப்படும். உமது விருந்தாளியும் மேன்மை பெறுவார்" என்றாள். அவளிட்ட கட்டளைப்படியே நான் உடனே அவ்வியாபாரி வாலிபனிடம் சென்று "ஐயா! நீங்கள் சொன்ன உத்தரவுப்படி நான் கண்ணும் தலையுமாக நடந்துகொண்டேன். நீங்களும் தயை செய்து நான் செய்யப்போகும் விருந்தை ஒப்புக்கொள்ள வேண்டும்" என்றேன். அவனும் "இதோ நான் என் உயிராலும் மனத்தாலும் காத்திருக்கிறேன்" என்றான்.

அப்பொழுது நான் சொன்னதாவது, "ஐயா, தாங்கள் இவ் வேழையின் வீட்டுக்குள் கால் வைத்தால் அது தங்களுடைய பெருமைக்கு ஒத்ததாக விருக்கும். தாங்கள் என் விருந்தை ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாகும்" என்றேன் அவ் வில ஞன் எவ்வளவோ தள்ளிச் சொல்லிப் பார்த்தான். நானோ நான் எடுத்த காரியத்தை விடுவதாகவில்லை. எப்பொழுது அவன் வருவ தாக ஒப்புக்கொண்டானோ அப்பொழுதே அவனை என்னுடன் அழைத்துக்கொண்டு என் வீட்டை நோக்கி வழி நடக்கலானேன். ஆனல் வழி யெல்லாம் எனக்கு ஒரேவிதக் கவலைதான். அது என்னவெனில்—"என்னிடம் மட்டும் பொருளிருந்தால் நான் என் விருந்தாளியை அவன் அந்தஸ்துக்குத் தகுந்தபடி உபசரித்து விருந்தளிப்பேன். அவரும் விருந்துண்டு களிப்பார். இப்பொழுது நானிவரை இவ்வாறு அழைத்துப் போகின்றேன். என்ன தான் நடக் கப்போகிறது பார்ப்போம்" என்று இவ்வாறான ஸந்தேகத்தில் மூழ்கி நான் என் வீட்டண்டை வந்து சேர்ந்தேன்.

ஆகா! என் வீட்டைக் கண்டதும் எனக்குண்டான ஆச்சரியத் துக்கு அளவேயில்லை. நான் என்னதான் கண்டேன்—என் வீட்டு வாயிலில் ஒரு பெரும் கூட்டமும் குழப்பமு மிருக்கக் கண்டு வியப் புற்றேன். தெரு முன் நன்றாகக்கூட்டி தண்ணீர் தெளிக்கப்பட் டிருந்தது; வெள்ளிவில்லை போட்ட சேவகர்களும் வெள்ளித்தடி பிடித்த வேலைக்காரர்களும் அவரவர்கள் ஸ்தானத்தில் காத்திருந் தார்கள்; எனக்குண்டான ஆச்சரியத்துக்கோ அளவே யில்லை. ஆனல் என் வீடுதான் அது என்[illegible] ஆரணமாக

விருந்தபடியால் என் பாதங்களை உள்ளே வைத்து நுழையலானேன். அவ்வீட்டுக்குள் ஒவ்வொரு அறைக்கு மேற்றபடி அழகான ரத்தின கம்பளங்கள் விரிக்கப்பட்டு ஒவ்வொரு அறையிலும் விலையுயர்ந்த ஆபரணங்கள் பரப்பப்பட்டிருந்தன. வெற்றிலைத் தட்டுகள், பன்னீர்க் கூஜாக்கள், அத்தர் ஸீஸாக்கள், தம்பல கரண்டகங்கள், புஷ்பச் சட்டிகள் முதலான சாமான்கள் அவைகளுக் கேற்ற விடங்களில் வெகு அழகாக வைக்கப்பட்டிருந்தன. சுவர்களின் இடுக்குகளிலும் பிறைகளிலும் பலவித கிச்சிலிப் பழங்கள், நாரத்தை, பலவித சிற்றுண்டிகள் வெகு அழகாய் வைக்கப்பட்டிருந்தன. ஒரு பக்கம் ஆபரக் தட்டிகளுக்கும் படுதாக்களுக்கும் பின்னால் விசித்திர விளக்குகள் வெகு அழகாக ஏற்றப்பட்டு சோபித்துக்கொண்டிருந்தன. மற்றொரு பக்கத்தில் பெரிய விளக்குகளின் வரிசைகள் மரத்தின் கிளைகள் போலும் தாமரை முதலிய மலர்கள் போலும் வெகு விசித்திரமாய் சிங்காரிக்கப்பட்டு ஏற்றப்பட்டிருந்தன. கூடத்திலும் மேற் சுவர்களிலும் கற்பூர வத்திகள் ஸவர்ணக் கம்பளங்களில் ஏற்றப் பட்டு அழகான கண்ணாடி குளோப்களால் மூடப்பட்டு எரிந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு வேலைக்காரனும் அவனவன் ஸ்தானத்தில் வெகு ஜாக்கிரதையாகக் காத்துக் கொண்டிருந்தான். சமையல் கட்டில் பானைகள் தளபள வென்று ஏகமாய் கொதித்துக் கொண்டிருந்தன. தண்ணீரை ஆற்றிவைக்கு மிடத்திலோ அவ்வாறே அவ்விடத்துக் கேற்ற ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. புதிதான தண்ணீர் ஜாடிகள் வெள்ளி பீடங்களில் வைக்கப்பட்டு ஒட்டைகள் வழியாய் ஜலம் சொட்ட அழகாக மூடப்பட்டிருந்தன. இன்னும் சற்று தூரத்தில் ஒரு திட்டாணியில் கோப்பைகளும் கரண்டிகளும் மூடிகளுடனும் துணிகளுடனும் வைக்கப்பட்டிருந்தன. பனிக்கட்டிகள் கூஜாக்களில் போடப்பட்டு அவைகள் எல்லாம் வெகு விநோதமாய் சிங்காரிக்கப்பட்டு நின்றன.

சுருக்கிச் சொல்ல, எல்லா ஏற்பாடுகளும் அரசர்களுக் கேற்றபடி வித்தப்படுத்தப்பட்டிருந்தன. தாஸிகள், பாடும் சிறு பையன்கள், பாடகர்கள் வாத்தியக்காரர்கள் விகடகவிகள் இவர்கள் எல்லாரும் அழகான உடையணிந்து பாடிக்கொண்டு காத்திருந்தார்கள்.

பக்கிரியாகிய நான் அச்சிறுவனை அழைத்துப் போய் ஒரு பெரும் ஆசனத்தில் உட்கார வைத்தேன். என் மனத்திலுண்டான ஆச்சரியத்துக்கு அளவே யில்லை. "ஜகதீசா! இவ்வளவு குறைந்த காலத்துக்குள் இவ்வளவு ஏற்பாடுகளும் எவ்வாறாயின." நான் ஒவ்வொரு பக்கத்திலும் அலைந்து திரிந்து ஒவ்வொரு ஏற்பாட்டையும் பார்த்துக்கொண்டு திகைத்து நின்றேன். ஆனால் அக்கட்டழகியின் வாசனை கூட ஒரு இடத்திலாவது தென்படவேயில்லை. இதே கவலையாய் சமையற்கட்டு முழுமையும் ஒரு சுற்று வந்தேன். அங்கு ஒரு மூலையில் அம்மாது கழுத்தில் ஒரு மேலாக்கு, காலில் செருப்பு, தலையில் ஒரு வெள்ளை உருமால் இவைகள் அணிந்து ஒரு நகையுமில்லாமல் சாதாரண உடுப்பு உடுத்திக்கொண்டு வெகு அழகாய்க் காணப்பட்டாள். எவள் ஒருவளுக்கு ஈசன் அழகைக் கொடுத்திருக்கின்றானோ அவளுக்கு நகை என்னத்திற்கு. சந்திரனைப் பாருங்கள். ஒருவித சிங்காரமுமின்றி எவ்வளவு அழகாய் விளங்குகிறது. விருந்து சாப்பாடு சித்தமாக்கும் ஏற்பாட்டில் மேல் விசாரணை பண்ணிக் கொண்டு ஒவ்வொரு உண்டி விஷயமாய் திட்டஞ் சொல்லிக் கொண்டு அவள் நின்றாள். "ஜாக்கிரதை, ருசி, பதம், வாசனை எல்லாம் ஸரியாய் நிறுத்தாப்போலிருக்க வேண்டும். உப்பு சரியாயிருக்க வேண்டும்" என்று எச்சரிக்கலானாள். இந்த சிரமத்தால் ரோஜாப்பூ போன்ற மேனியாள் அதிக வியர்வை விட்டவளாய் சிரமப்பட்டுக்கொண்டிருந்தாள்.

நான் உடனே வெகு மரியாதையுடன் அவளிடம் சென்று அவள் செய்திருந்த ஏற்பாடுகளுக்கும் அவளுடைய மேலான புத்திக்கும் அவளை மெச்சி அவளை தோத்திரம் பண்ணலானேன். என் தோத்திரத்தை அவள் கேட்டு தன் முகத்தை சுளுக்கிக்கொண்டு சொல்லலானாள்:—"மனிதர்கள் சிற்சில சமயத்தில் தேவர்களாலும் செய்து முடிக்கக் கூடாத காரியத்தைச் செய்கின்றார்கள். நான் என்ன காரியம் செய்து விட்டேன். ஏன் நீங்கள் இவ்வளவு ஆச்சரியப்பட வேண்டும். போதும். அதிகப் பேச்சு பேசுவது எனக்கு ஒரு பொழுதும் பிடிக்கவே பிடிக்காது. நல்லது நீங்களே சொல்லுங்கள், எவன் இவ்வாறு தன் விருந்தாளியைத் தனியே இருத்தி அங்கு மிங்கும் அலைந்து நிற்பான், இது மானிடத் தன்மைக்கு அழ

சாமா? அவ்விருந்தாளி தனக்குள்ளேயே என்ன சொல்லிக் கொண்டிருப்பான். ஜடிதியில் திரும்பிச் சென்று உமது தோழன் சமீபத்தில் போய் உட்காரும். அவன் உள்ளங்குளிர என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்யும். அவனுடைய ஆசை நாயகியை வரவழைத்து வேண்டுமென்றால் அவன் பக்கத்தில் உட்கார்த்திவையும்'' என்றாள்.

பக்கிரியாகிய நான் இதைக் கேட்டதும், அவ்வண்ணமே யென் தோழனிடம் சென்று அவனுக்குப் பலவித உபசாரம் செய்யலானேன். அங்கு இரண்டு அழகான வேலைக்காரர்கள் வெகு மதுரமான பானகம் கையிலெடுத்துக் கொண்டுவந்து கல்லிழைத்த கிண்ணங்களில் ஊற்றி எங்களுக்குக் கொடுத்தார்கள். அந்த மரியாதை முடிந்ததும் நான் என் நண்பனை நோக்கி, "ஐயா நானே எவ்விதத்திலும் தங்களுடைய நண்பனும் வேலைக்காரனுமாய் விட்டேன். எவளொருவள் தங்கள் உள்ளத்தையே கொள்ளை கொண்டிருக்கின்றாளோ அவ்வழகான ஆசை நாயகியை நீங்கள் இப்பொழுது இச்சபைக்கு வரவழைத்து உமதருகே உட்காரவைத்துக் கொள்ளலாம். எனக்கு ஆக்ஷேபமில்லை. உத்தரவானால் அவளை அழைத்து வர ஆளனுப்புகிறேன்'' என்றேன்.

இதைக்கேட்டதும் அவன் வெகு சந்தோஷத்துடன் சொன்னதென்னவெனில்:—ரொம்ப ஸரி. இச்சமயத்தில் நீங்கள் என் உள்ளத்திலிருந்த நினைப்பை வெளிவிட்டுச் சொன்னீர்கள்'' என்றான். நானும் உடனே ஒரு கோஜாவை அனுப்பினேன். பாதி இரவு ஆனதும் அம்முண்டை ஓர் அழகான பல்லக்கில் சொல்லக்கூடாத தௌர்பாக்கியமே வருவதுபோல வந்து சேர்ந்தாள்.

என் விருந்தாளியின் உள்ளத்தைக் களிப்பிக்க நான் அவள் வந்தவுடன் எழுந்து வெகு மரியாதையாக அவளை உபசரித்து அவனிடம் அவளை உட்காரவைத்தேன். அவளைக் கண்டதும் அவ்விளைஞனுக்கு எவ்வித சந்தோஷமுண்டாயிற்றென்றால் இவ்வுலகத்திலுள்ள எல்லாவித பாக்யமும் அவனுக்குக் கைகூடினது போலாயிற்று. அப்பெண்பூதமும் அவனைப்பற்றி அவன் கழுத்தில் கை

போட்டுக் கட்டிக்கொண்டது. அவ்விருவருமிருந்த ஆச்சரியம் எவ்வாறு தோன்றிற்றென்றால் சதுர்த்தசி சந்திரனை கிரகணம் பற்றியது போலாயிற்று. அச்சபையில் எத்தனை ஜனங்களிருந்தார்களோ அவர்கள் அத்தனை பேர்களும் தங்கள் முன் விரலை தங்கள் பற்கள் நடுவில் வைத்துக் கடித்துத் திகைத்து ஆகா! இம்முண்டை இவ்விளைஞன் உள்ளத்தை எவ்வண்ணம் தன் வசமாக்கிக்கொண்டாள் என்று தங்களுக்குள்ளேயே சொல்லிக்கொள்ளலானார்கள். எல்லாருடைய நோக்கமும் அவ்விருவர் மேலேயே யிருந்தது. சபையில் நடந்த எல்லா விஷயங்களையும் துறந்து அவ்வேடிக்கையை எல்லாரும் பார்த்து நின்றார்கள். சிலர் தங்களுக்குள் "நண்பரே! காமம் புத்தி இவ்விரண்டிக்கும் எப்பொழுதும் ஒற்றுமையேயில்லை போலும். புத்தியில் நாம் யோசித்துப் பார்க்கமுடியாத விஷயத்தை இக்காமம் கைகூட்டி வைக்கிறது பார். மஜ்னூனுடைய காமக் கண்ணிருந்தால் அவனுக்கு எல்லாரும் லைலி தான் என்றார்கள். மற்றவர்கள் அதைக்கேட்டு "ஆமய்யா நிஜமான பேச்சு" என்றார்கள்.

இப்பக்கிரியாகிய நான் எனக்கிட்டிருந்த கட்டளைப்படி என் விருந்தாளியை உபசரிப்பதிலேயே கவலை கொண்டவனாக விருந்தேன். ஒவ்வொரு வேளையும் தன்னுடன் உட்கார்ந்து புசிக்க வேண்டும், குடிக்கவேண்டும் என்று என் விருந்தாளி என்னை உபசரித்தபோதிலும் அக் கட்டழகியினிடம் நான் வைத்திருந்த பயத்தால் அவ்வித விருந்திலும் விநோதத்திலும் சேரவேயில்லை. நான் உபசரிக்கவேண்டிய ஸ்திதியிலிருக்கப்பட்டவன், என்னை வருத்தக்கூடாது என்று அவன் என்னை வேண்டியபோதெல்லாம் சொல்லி தப்பித்துக் கொண்டேன். இவ்விருந்தில் மூன்று இரவும் பகலும் கழிந்தன. நான்காமிரவு அவ்விளைஞன் வெகு விசுவாஸமாய் என்னைக் கூப்பிட்டு "ஐயா! நானினிப்போகவேண்டும். எனக்குத் தாங்கள் விடை கொடுத்தனுப்பவேண்டும். தங்களுக்காக நான் என் வேலைகளை எல்லாம் 3 நாளாகவிட்டு தங்களுடைய சமூகத்தில் காத்திருந்தேன். தாங்கள் ஒரு நிமிஷமாவது என்னிடமுட்கார்ந்து என் மனதைக் களிப்பிக்கக்கூடாதா?" என்றான். நானும் என் மனத்தினுள் யோசிக்கலானேன். இப்பொழு

தாவது இவன் சொற்கேட்டு நடக்காவிடில் இவன் நம்மிடம் வெறுப் படைவான். புது நண்பனும் விருந்தாளியுமாகிய இவனுக்காக நாம் ஒரு நிமிஷமாவது இவனிடம் உட்கார வேண்டுந்தான் என்று யோசித்து அவனை நோக்கி "ஐய! தங்கள் கட்டளைப்படி நடக்க வித்தமாயிருக்கிறேன். தங்கள் கட்டளையேதான் தங்களுக்குச் செய்யும் உபசாரத்தில் ஒன்றன்றோ" என்றேன். இதைக் கேட்ட வுடன் அவ்விளைஞன் ஒரு கிண்ணம் பானம் சித்தப்படுத்தி என் கையிற் கொடுத்தான். நானதை வாங்கிக்கொண்டேன்: குடித் தேன். உடனே அக்கிண்ணம் வெகு விரைவாக கை மாறிக்கொண் டிருந்தது. எல்லாரும் ஏகமாகக் குடித்து மயங்கி விழுந்தார்கள். நானும் புத்தி கெட்டு மயக்கமடைந்து கீழே விழுந்தேன்.

பொழுது விடிந்து சூரியன் இரண்டு முழம் மேற்கிளம்பி யிருந்த சமயத்தில் நான் விழித்துக்கொள்ளலானேன். அவ்வேற் பாடுகள் ஒன்றுங்காணேன். அச்சபை, அக்கட்டழகி இவை எல் லாம் மறைந்திருந்தன. அவ்வீடு முழுமையும் காலியாக விருந் தது. ஆனால் ஒரு மூலையில் ஒரு கம்பளியில் ஏதோ சுருட் டப்பட்டு வைத்திருக்கக் கண்டேன். அதை நான் பிரித்துப் பார்க்கையில், என் புத்தியே என்னைவிட்டு அகன்றது. அத் னுள் அச்சிறுவன் அம்முண்டை அவ்விருவருடைய தலைகளும் வெட்டுண்டு வைக்கப்பட்டு சுருட்டப்பட்டிருந்தன. இதைப்பார் த்ததும் என்மூளையே குழம்பிற்று. என் புத்திக்கு இன்னசெய் கிறதென்பது தோன்றவேயில்லை. இது என்னத்தில் ஆரம் பித்தது என்னவாய் முடிந்தது என்று யோசித்துக் கொண்டு ஒவ் வொரு பக்கமும் நான் பார்க்கும்பொழுது அங்கு ஒரு கோஜாவைக் கண்டேன். அவனை நான் ஏற்கெனவே அவ்விருந்து வித்தமாகும் ஏற்பாட்டில் கண்டதுண்டு. ஆகையால் அவனைக் கண்டதும் பக்கிரி யாகிய என் மனத்துக்கு சொற்பம் ஆறுதலுண்டாயிற்று. அவ் விடம் நடந்திருந்த ஸங்கதிக்குக் காரணம் என்னவென்று கேட் டேன். அதற்கு அவன் நீர் இவ்வாறு கேட்கின்றீரே நடந்த விஷ யத்தைப் பற்றிய காரணத்தை அறிந்தபின் நீர் செய்யப் போவ தென்ன. உமக்கு அதனால் என்ன பிரயோஜனம்" என்றான். நானும் அதைக் கேட்டு என் மனத்தினுள்ளேயே அவன் சொல்லுகிறது

வாஸ்தவம் என்று நிர்ணயித்துக்கொண்டு சொற்பம் நிதானித்து மறுபடி அவனிடம் "ஐயா! நீர் எனக்கு ஒன்றும் இவ்விஷயமாய் சொல்லவேண்டாம். அக் கட்டழகி எவ்வளவாயி லிருக்கிறாள் சொல்லும்" என்றேன். அதற்கு அவன், "அவசியம் சொல்லுகின்றேன். எனக்கு என்ன தெரியுமோ அதை தெரிவிப்பதில் என்ன தடை. ஆனால் தங்களைப்போல் எல்லாந் தெரிந்த ஒரு புத்திமான் இரண்டொரு நாள் பழக்கத்தின்மேல் ஒரு நண்பனுடன் உட்கார்ந்து கள்ளுண்ணல் எவ்வளவு அக்கிரமம். அது ஏன் உங்களுக்குத் தெரியாமல் போயிற்று. ஏன் அப்படிச் செய்தீர்கள்" என்றான்.

அவன் சுட்டிக் காட்டின குற்றத்தைக் கேட்டு பக்கிரியாகிய நான் செய்தது குற்றமென் றறிந்து வெட்க மடைந்தேன். "நான் செய்தது குற்றம் குற்றமே. என்னை மன்னிக்கவேண்டும்" என்று சொல்லுவதைவிட வேறொன்றும் எனக்குச் சொல்ல நாவெழவில்லை. அக்கோஜா என்னிடம் மனமிரங்கி அக்கட்டழகியின் வீட்டின் அடையாளஞ் சொல்லிவிட்டு என்னிடம் விடை பெற்று கொலையுண்ட அவ்விரு சவங்களையும் புதைக்கச் சென்றான். நானோ அக் கொலைக் குற்றத்தில் ஸம்பந்தப்பட்டவனே யல்ல. அவ்வளவு மட்டில் எனக்கு திருப்தியாக விருந்தது. அக் கட்டழகியைப் பார்க்கவேண்டும் என்ற அவாமட்டும் எனக்கு அதிகமாக விருந்தது. அங்கு மிங்கு மலைந்து திரிந்து தேடிக்கொண்டு அக்கோஜா சொன்ன அடையாளத்தைக் கைப்பற்றிக் கடைசியாய் சாயங்கால நேரத்தில் அம்மாது இருந்த தெருவண்டை வந்து சேர்ந்தேன். அவள் வீட்டு வாயிற் படியில் ஒரு மூலையில். இரவு முழுமையும் நின்று கொண்டே கழித்தேன். அவ்விடம் ஒருவனுடைய காலடி சத்தமாவது கேட்கப்படவேயில்லை. என்னை நீ யார் என்று கேட்கப்பட்டவன் அவ விடம் ஒருவனும் வரவே.காணோம். இக்கேள்வியற்ற கதியிலேயே இரவு கழிந்து பொழுது விடிந்தது. சூரியனுதயமானதும் அம்மாளிகையிலிருந்த ஓர் பலகணிவாயில் அக்கட்டழகி என்னைப்பார்த்தாள். அச்சமயத்தில் எனக்குண்டான ஸந்தோஷத்தை என் மனம் ஒன்றேதான் அறியும், உடனே ஈசனைத் தியானித்தேன்.

இதற்குள் ஒரு கோஜா என்னிடம் வந்து "அதோ காணப்படும் மசூதியண்டை காத்திரும். அவ்விடம் நின்றால் உமது கருத்து

கைகூடும். உமது உள்ளத்திலுள்ள எண்ணங்கள் ஒருக்கால் நிறைவு பெறும்" என்றான். அவன் கட்டளையிட்டபடியே பக்கிரியாகிய நான் அவ்விடம் விட்டு எழுந்து மசூதிக்குச் சென்றேன். அவ்விடம் நின்றேன். என்றாலும் என் கண்கள் அதே மாளிகையில் பதுங்கிக் கிடந்தன. என் தலைவிதி என்ற படுதாவின் பின்பக்கம் அக்கட்டழகி என்ன செய்கிறாள் என்பதையே கவனித்தவனாக விருந்தேன். எப்பொழுது சாயங்காலமாகும், எப்பொழுது அக் கட்டழகியைக் காண்போம் என்று ரம்ஸான் பண்டிகையில் சாயங்காலத்தை ஆவலாய் எதிர்பார்ப்பவன் போல் நான் அஸ்தமனத்தை எதிர்பார்த்திருந்தேன். கடைசியாய் சாயங்காலமும் வந்தது. மலைபோல் நின்ற பகலும் என் உள்ளத்தின் விசாரம் போல் நீங்கிற்று. உடனே ஒரு கோஜா எவனொருவன் எனக்கு அம்மாதரசியின் வீட்டின் அடையாளம் சொன்னானோ அவன் அம்மசூதியண்டை வந்து சேர்ந்தான். சாயங்கால நமாஸ் முதலிய சடங்குகளை அவன் முடித்துக்கொண்டு, அவனுக்கு எனது ரகஸியங்கள் எல்லாம் தெரிந்திருந்தபடியால் என்னிடம் வந்து எனக்கு ஆறுதலைச் செய்து என் கையைப்பற்றி அழைத்துக்கொண்டு சொற்பதூரம் சென்று ஒருசிங்கார வனத்தில் புகுந்து என்னை ஓரிடம் உட்காரவைத்துப் பின்வருமாறு சொல்லலுற்றான்:—"இவ்விடம் உட்கார்ந்திரும், எதுவரையில் உமது உள்ளத்திலுள்ள கருத்து நிறைவேறுகின்றதோ அது வரையில் இவ்விட மிரும்" என்று சொல்லி என்னிடம் விடைபெற்றுச் சென்றான். ஒருக்கால் என்னைப் பற்றியே அக்கட்டழகியிடம் சொல்லத்தான் சென்றானோ என்னவோ. நானோ அத்தோட்டத்தில் பூத்திருந்த மலர்களின் அழகையும், அச்சமயத்தில் சோபித்த பூர்ணசந்திரனுடைய காந்தியையும், ஓடைகளிலும் வாய்க்கால்களிலும் நீர் சொரிந்து கொண்டிருந்த நீர்யந்திரங்களின் அமைப்பையும் அவைகள் சிராவணம் பாத்ர பதம் இம்மாதங்கள் போல் தண்ணீர் துளிகளை இறைத்துக் கொண்டிருந்ததையும் கண்டு களித்து வந்தேன் நான் ரோஜாமலரைப் பார்க்கும் பொழுதெல்லாம் அக் கட்டழகியின் தேகக்காந்தியை நினைத்துக் கொள்ளுவேன்; பூர்ணசந்திர பிம்பத்தை நோக்கும் நேரமெல்லாம் அவளழகான முகக்காந்தியை நினைவு மூட்டிக்கொள்ளுவேன். அவளில்லாமல் நான் அங்கு பார்த்த அக்

காட்சிக எவ்வளவும் என் கண்களில் முட்கள் குத்தின போலிருந்தன.

கடைசியாய் ஈசனும் அவள் மனத்திலுள் சொற்பம் கருணையைப் புகும்படி செய்தார். சொற்ப நேரத்துக்கெல்லாம் அக்கட்டழகி பூர்ணசந்திரன் போல விளங்கிக்கொண்டு அத்தோட்டத்தின் கதவு வழியாக அவ்விடம் வரலானுள். ஓரங்களில் நல் முத்து தொங்கிக்கொண்டிருந்த ஒரு அழகான உடுப்பு உடுத்து, தலை முதல் கால்வரையும் அழகான பூத்துணியால் விசித்திரவேலை செய்யப்பட்டிருந்த அவ குண்டனம் போர்த்தி சந்திரனே ஊர்ந்து வருவதுபோல ஊர்ந்து வரலானுள். சொற்பம் அத்தோட்டத்தில் உலாவி எனக்கு சொற்ப தூரத்தில் நின்றுள். அவள் வந்த காரணத்தாலேயே அத்தோட்டத்தின் அழகும் என் உள்ளத்தின் ஆனந்தமும் அதிகமாயின. அங்குமிங்கும் சொற்பம் உலாவி ஒரு மூலையில் போட்டிருந்த ஓர் அழகான ஆஸனத்தில் அவள் உட்காரலானுள். நானும் வெளிச்சத்தை நாடி ஓடும் விளக்கு விட்டில் பூச்சிபோல ஓடி என் பிராணனையே அவளுக்கு அர்ப்பித்து என்னிருகைகளையும் கட்டிக்கொண்டு ஒரு அடிமைபோல் அவள் முன்பாக நின்றேன். இச்சமயத்தில் அக்கோஜா அங்கு தோன்றி என்னை மன்னிக்க வேண்டியும் மறுபடி முன்போல் ஒப்புக் கொள்ளவேண்டியும் சிபார்சு செய்யலானுன். நானும் அவனை நோக்கி பின்வருமாறு சொல்லலானேன். "நான் குற்றவாளி குற்றவாளியே. எனக்கு என்ன தண்டனை விதிக்கப் படுகின்றதோ அது உடனே விதிக்கப் படட்டும்" என்றேன். அக்கட்டழகி என்னிடம் வெகு வெறுப்புற்றவளாய் கர்வம் மட்டும் குன்றுதவளாய் "இவருக்கு இது தானிப்பொழுது நலம் என்று தோன்றுகிறது. ஒரு நூறு பை விராகன்கள் இவர் எடுத்துக்கொண்டு, தாம் அடைந்த நஷ்டத்தை யெல்லாம் சரிப்படுத்திக்கொண்டு இவர் தம் நாடு ஏகுவதே நன்மை" என்றுர்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் ஓர் உலர்ந்த கட்டை போலானேன். எவனுவது ஒருவன் என்னை வெட்டிப் பார்த்திருந்தால் என் தேகத்திலிருந்து ஒரு பிந்து ரத்தங்கூட வந்திருக்க மாட்டாது. இவ்வுலகமே என் கண்கள் முன் இருளடைந்திருந்ததாகத் தோன்

றிற்று. என் உள்ளத்தினின்றும் நாம் பாழாய்ப் போனோம் என்ற ஒரு துக்கம் என்னையறியாமல் பொங்கி நான் "ஆகா" என்று சொன்னதால் வெளி வந்தது. என் கண்களினின்றும் நீர் ததும்பி ஓடலாயிற்று. ஈசன் ஒருவனைத் தவிர வேறொருவித நம்பிக்கையும் எனக்குத் தோன்றவில்லை. ஏதோ முற்றிலும் துணிந்த கட்டையாய் நான் வெகு தைரியமாய் அவளைப் பார்த்து பின்வருமாறு சொல்லலுற்றேன்:—"நல்லது; நீயே உன் மனத்தினுள் யோசித்துப் பார்ப்பாயாக. எனக்கு மட்டும் உலக சம்பந்தத்தில் ஆசை யென்பது இருக்குமே யானால் என் பிராணனையும் என் பொருளையும் உனக்காக நான் அவ்வண்ணம் செலவிட்டிருக்க மாட்டேன். நான் உனக்காகப் பட்ட சிரமமும் என் பிராணனையே நானுனக்கு அர்ப்பித்ததும் நீ உன் மனத்தை விட்டு முற்றிலும் ஓட்டிவிட்டாயா? என்னைப் போன்ற ஓர் ஏழையிடம் நீ காட்டின தயவு இவ்வளவு தானா ? நல்லது நல்லது; எனக்கோ இப்பிராணனால் இனி ஒருவித பிரயோஜனமுமில்லை. ஒருவித ஒத்தாசையுமில்லாமல் பாதி உயிரிழந்த நாயகர்கள் நாயகிகள் உண்மையற்றிருந்தால் என் செய்வார்கள்."

இதைக் கேட்டு அவள் தாள முடியாத கோபங்கொண்டு வெகு வெறுப்புடன் என்னைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானாள்:—"வெகு அழகு ! அப்படியா! ! நீரா என் ஆசை நாயகன்? ஓகோ தவளைக்கு ஜலதோஷம் பிடித்தது போலிருக்கிறதே. ஆ! பெரு மூடமே, உம்மைப் போலிருக்கின்றவர்களிவ்வாறு கருதுவது முடவன் கொம்பு தேனுக்காசைப்படுவது போலல்லவா. சிறுவாய்க்கு இவ்வளவு பெரிய பேச்சு ஆகவே ஆகாது. போதும், உமது வாயை மூடிக்கொள்ளும். இனி இவ்வாறான பேச்சு மூச்சு விடாமலிரும். வேறெவனாவது இவ்வாறான பேச்சு என்னிடம் பேசியிருப்பானே யானால் அவனைத் துண்டு துண்டாக வெட்டி பருந்துகளுக்கு விருந்திட்டிருப்பேன். ஆனால் நான் உம் விஷயமாய் என்ன செய்யக்கூடும். நீர் எனக்குச் செய்த உதவி யன்றோ எப்பொழுதும் என் உள்ளத்திலிருக்கின்றது. நல்லவேளையில் நீர் உமது தேசத்தின் வழியைப்பற்றிக்கொண்டு திரும்பும். இது வரையிற்றான் என் வீட்டில் உமக்கு அன்னமும் நீரும் என்று உமது விதியில்

எழுதி யிருந்தது" என்றாள். அதன்மேல் நான் அழுதுகொண்டும் கண்ணீர் சொரிந்துகொண்டும் பின்வருமாறு சொல்லலானேன்:—"என் தலை விதியினால் நான்என் மனோரதத்தை அடையப் போகின்றதில்லை. தலையைப் பாறைகளில் மோதிக் கொண்டு காட்டிலும் மலையிலும் என் ஜன்மம் அலைந்து திரியத்தான் வேண்டும் என்று எழுதி யிருந்தால், அதன்மேல் நான் செய்யப் போவதென்ன." இதைக் கேட்டு அவள் கோபங் கொண்டவளாய் இவ்விதமான ஜாடைச் சொற்களும் தப்பான எண்ணங்களும் எனக்கு ஒரு பொழுதும் பிடிக்கவே மாட்டாது. இவைகளைக் கேட்க யார் சரியானவர்களோ அவர்களிடம் போய்ச் சொல்லிக் கொள்ளும் என்றாள். அதே கோபத்தில் அவள் எழுந்து தன் வீடு திரும்பிப் போனாள், நான் என் தலையை எவ்வளவோ உடைத்துக் கொண்டு விண்ணப்பஞ் செய்ய ஆரம்பித்தேன். என் பேச்சை அவள் கவனிக்கவே யில்லை. முற்றிலும் நம்பிக்கை யற்றவனாய் நானும் அவ்விடத்தை விட்டு வெளிக் கிளம்பினேன். தெருத் தெருவாய் அலைந்து திற்கலானேன்.

நாற்பது நாள் இதே என் கதி. தெருவில் அலைவதில் சளைத்தால் நான் காட்டுக்குள் புகுந்து அலைந்து திரிவேன். அவ்விடம் வெறுத்தால் மறுபடி தெருவில் வந்து அலைந்து நிற்பேன். இவ்வாறு பயித்தியம் பிடித்தவனாய் மாறிவிட்டேன். பகலிலோ உணவில்லை; இரவிலோ தூக்கமில்லை. வண்ணான் வீட்டு நாய் வீட்டிலுமிருக்காது. வண்ணான் துறையிலுமிருக்காது. அது போலாயிற்று என் கதி. மானிட தேகமோ ஆகாரம் பானம் இவைகளுடைய ஆதரவால் நிலை நிற்கப்பட்டது, மனிதனை தானியத்தாலாகிய புழு என்றும் சொல்லலாம். சொற்பங் கூட்பலமென்பது என் தேகத்திலில்லை. முற்றிலும் திராணியற்றவனாய் நான் அம்மசூதியின் சுவற்றிற் கருகே போய் கீழே படுத்தேன். அவ்விடமே விழுந்திருந்தேன். இவ்வாறிருக்கும்போது அக்கோஜா ஒரு வெள்ளிக்கிழமை துதிப்பதற்காக அவ்விடம் வந்தான். என் பக்கமாய் அவன் செல்லலானான். அச்சமயத்தில் நான் மெதுவாய் பின்வரும் பாட்டை எனக்குள்ளேயே பாடிக் கொண்டிருந்தேன்:—"ஜகதீசா! இம்மனோ

வியாதியைச் சகித்துக் கொள்ள எனக்கு நீ பலத்தைக் கொடு; இல்லை எனில் மரணத்தைக் கொடு. எது என் தலைவிதியில் எழுதப் பட்டிருக்கின்றதோ அதை சடுதியில் கொடு."

என் துக்கத்தில் என் தோற்றம் முற்றிலும் மாறுப்பட்டிருந் தது. என் முகமோ எவ்வாறு யிருந்த தென்றால் என்னை இதற்கு முன் நன்றாக அறிந்தவன் அப்பொழுது என்னை ஒரு பொழுதும் அடையாளங் கண்டு கொள்ள மாட்டான். அப்படி யிருந்தும் என் குரலைக் கேட்டதும் அக்கோஜா என்னை உற்றுப் பார்த்து சொற்பம் நிதானித்து ஆகா என்று துக்கப்படலானான். கடைசியாய் உன் கதி இவ்வாறாயிற்று! என்றான். அதைக் கேட்டதும் நான் உடனே, "இப்பொழுதுதான் என்ன நடக்கவேண்டுமோ அது நடந்தேறிற்று. முதலில் பொருளை முற்றிலும் செலவிட்டேன். இப்பொழுது என் உயிரையும் (அவளுக்காக) செலவிட்டேன். அவள் தயவு என்பது அவ்வண்ணமானால் நான் என் செய்வேன்" என்றேன்.

இதைக் கேட்டதுமவன் ஒரு வேலைக்காரனை என்னிடமிருத்தி மசூதிக்குச் சென்றான். நமாஸ்தோத்திரம் இவைகளை முடித்துக் கொண்டு அவன் வெளி வந்ததும் என்னிடம் ஓடி வந்து என்னை ஒருபல்லக்கில் தூக்கிப்போட்டுக் கொண்டு நன்றியற்ற அக்கட்டழகி யின் வீட்டுக்கு என்னைக்கொண்டுபோய் அவள் அறைக்கு வெளியே ஒரு கட்டிலின் கீழே என்னைப் படுக்க வைத்தான். என்னுடைய பழய அடையாளங்கள் முற்றிலும் மாறி ஒன்றும் விளங்காமலிருந் தது உண்மைதான் என்றாலும், நான் அக்கட்டழகியிடம் வெகு நாள் பழகினவனாதலால் அவள் என்னைக் கண்டதும் அறிந்து கொண்டிருப்பாள் என்பதற்கு ஐயமேயில்லை. ஆனாலும் ஒன்றும் தெரியாதவள்போல அக்கோஜாவைப் பார்த்து அவள் "யார் அவன்" என்று என்னைப் பற்றிக் கேட்கலானாள். அந்த நற்குண முள்ளவனும் "இவன் தான் அந்த தௌர்பாக்கியன்; அதிர்ஷ்ட மற்றவன். எவனொருவன் உன்னுடைய ஆதரணை விட்டு நழுவி உன் கோபத்துக்கே யிடமானானோ அவன்தான் இவன்" என்றான். அன்றியும் "இக்காரணத்தாற்றான் அவன் முகம் இவ்வாறாயிற்று. காமம் என்னும் நெருப்பில் எப்பொழுதும் பற்றி எரிந்து கொண்டி

ருக்கின்றான். கண்ணீர் என்ற தண்ணீரால் அந்நெருப்பை அணைக்க அவன் எவ்வளவுதான் முயன்று பார்த்த போதிலும் அது அணையாமல் இரு மடங்காய் எரிகின்றது. அவனைத் தேற்றி வைக்க ஒன்றாலும் முடியவில்லை. அன்றியும் அவன் குற்றத்தின் வெட்கத்தால் செத்துக் கிடக்கின்றான்" என்றான். அக்கட்டழகியும் வெகு வேடிக்கையாய் அவனைப் பார்த்து "ஏன் நீர் வீண் பொய் சொல்லுகின்றீர். என் வேவுகாரர்கள் என்னிடம் அவன் ஊர் போய்ச் சேர்ந்து வெகு நாளாயிற்று என்று ஏற்கெனவே சொல்லி யிருக்கின்றார்கள். இவன் யாரோ இவன் எவனோ ஈசனுக்குத்தான் தெரியும்" என்றாள். இதைக் கேட்டதும் அக்கோஜா தனது இரு கைகளையும் தூக்கி தண்டனிட்டுக் கொண்டு விண்ணப்பஞ் செய்து கொள்ளலானான்:— "எனக்கு மட்டும் என் உயிர்ப்பிச்சை கொடுப்பீர்களேயானால் நானிதோ தெரிவித்துக் கொள்ளுகின்றேன்" என்றான். அதற்கு அவள் "சொல்லும். உமது உயிரை உமக்கே ஒப்புவித்தேன்" என, கோஜா சொல்லலானான்:—"உங்கள் குணமே சிறப்பை அறிந்து தெரிந்துகொள்ளும் குணம். ஈசனுக் கொப்பாக உமக்கும் அவனுக்கும் நடுவிலிருக்கும் தட்டியைத் தூக்கி அவனைப் பாரும்; அவனிடம் மனமிரங்கும். உபகாரம் பண்ணினவனிடம் நன்றியற்றிருப்பது ஒருபொழுதும் நியாயமாகாது. இவனிப்பொழுது இருக்கும் நிலைமைக்கு நீங்கள் எவ்விதமாக மன மிரங்கினாலும் அது தர்மமாகவும் நியாயமாகவு மிருக்குமேயன்றி வேறாகாது. இதற்குமேல் சொல்ல எனக்கு யோக்கியதையில்லை. நீங்கள் என்ன செய்தாலும் அது அவனுக்கு நன்மையாகவே யிருக்கும்" என்றான்.

இவ்வளவு தூரம் கோஜா சொல்லவே அவள் சொற்பம் புன்னகைசெய்து கட்டளை யிடலானாள்:—"அவன் யாராயிருந்தாலு மிருக்கட்டும், அவனை வைத்தியசாலையில் கொண்டுபோய் வை. அவன் உடம்பு அனுகூலமானதும் அவன் அவஸ்தையைப் பற்றி விசாரிப்போம்" என்றாள். அதற்கு அக்கோஜா "நீங்கள் உங்களுடைய ராஜாத்தி கைகளால் அவன் மேல் பன்னீர் தெளித்து ஆதரவாய் அவனிடம் ஒரு பேச்சாவது பேசினாற்றான் அவனுக்கு தான் பிழைக்கலாம் என்ற நம்பிக்கை உதிக்கும். ஏக்கம் என்பது மிகக் கொடிய நோய். நம்பிக்கை என்பதாற்றான் உலகமே பிழைத்திருக்

கின்றது” என்றான். அப்பொழுதுகூட அக்கட்டழகி ஒன்றும் சொல்லவில்லை. இவ்விருவருக்குள் நடந்த சம்பாஷணையைக் கேட்டு நானும் என் உயிரை மிக்க வெறுத்தவனானேன். ஆகவே நான் நிர்ப்பயமாய் “இவ்வண்ணமான என் பிராணனைக் காப்பாற்றி வைத்துக் கொள்ள எனக்கு இஷ்டமே யில்லை. என் கால்கள் ஏற்கெனவே கோரிக்குள் தொங்கிக் கொண்டிருப்பவைகளாய் விட்டன. நானினிப்பிராணனை விடவேண்டியவன் என்பது திண்ணம். என்னைப் பிழைப்பு மூட்ட வேண்டிய மருந்தோ ராஜ குமாரியாகிய உன் கையிலிருக்கிறது. நீ அம்மருந்தை எனக்குக் கொடுப்பாயோ மாட்டாயோ அது உன் வசத்திலிருக்கிறது எனக்குத் தெரியாது என்றேன். இவ்விதமாய் நான் சொன்னதும் ஈசன் அக்கல்மனத்தை இளக்கலானார். ஏதோ கருணை கொண்டவளாய் அவள் “கூப்பிடு ராஜவைத்யனை” என்று கட்டளை யிட்டாள். அவ்வுத்தரவு பிறந்து சொற்ப நேரத்துக்குள் ராஜ வைத்யர்கள் எல்லாரும் என்னைச் சுற்றி நிற்கலானார்கள். என்னைக் கை பிடித்து நாது பார்க்கலானார்கள்; நீரைப் பரீட்சைப் பண்ணிப் பார்த்தார்கள்; கடைசியாய் அவ்வைத்தியர்கள் எல்லாரும் “இம்மனிதன் யாரோ ஒரு ஸ்திரீயின் மேல் மோகங் கொண்டிருக்கின்றான். அவளை இவனுக்கு மணம்புரிந்து வைப்பது தான் இவனுக்கு மருந்து. அதன்றி வேறொரு மருந்தும் பலிக்காது; அம்மணம் நிறைவேறினால் இவன் வியாதி முற்றிலும் நீங்கி விடும்” என்றார்கள். எப்பொழுது வைத்தியர்களும் என்னைப் பற்றி இவ்வண்ணமாக சொல்லிப் போனார்களோ அப்பொழுதுதான் எனக்கிருந்த நோய் இன்ன தென்பது அக்கட்டழகிக்குப் புலப்பட்டது. அவள் உடனே “இச்சிறுவனை வெந்நீர் அறைக்குக் கொண்டு போய் வெந்நீரால் மங்களஸ்நானம் செய்வித்து அழகான உடை உடுத்தி இவ்விடம் கொண்டுவா” என்று தன் வேலைக்காரர்களிடம் கட்டளையிட, அவர்கள் அவ்வண்ணமே அதே நிமிஷத்தில் என்னை எடுத்துப்போய் நன்றாக ஸ்நாநம் செய்வித்து நல்ல வஸ்திரங்களைக் கட்டி அக்கட்டழகியின் ஸமூகத்தில் கொணர்ந்து சேர்த்தார்கள். அவள் என்னைப் பார்த்து “நீர் என்னை எப்பொழுதும் அகாரணமாய் நன்றியற்றவள் தயையற்றவள் என்று பலவிதமாய் வாய்க்கு வராத படியெல்லாம் நிந்தித்து என் மானத்தை ஏற்கெனவே கெடுத்து

விட்டீர். இன்னும் உமது உள்ளத்தி லிருப்பதென்ன? அதை ஒளிக்காமல் உள்ளது உள்ளபடி வாய்விட்டுச் சொல்லும்" என்றாள்.

ஓ பக்கிரிகளே! அச்சமயத்தில் என் மனத்திலுண்டான ஆனந்தத்தை நான் என்னென்று சொல்லுவேன்: ஆனந்தத்தின்மிகுதியில் நானெங்கு ஒருக்கால் மரித்துப் போவேனோ என்று பயந்தேன். ஆனந்தத்தால் நான் அப்பொழுது ஒரு உப்பு உப்பலானேன். என் சட்டையே எனக்குச் சரியாகவில்லை. கிழிந்துவிடும் போலிருந்தது. என் தோற்றமும் என் முகமும் வேறு தோற்றமும் முகமுமாய் மாறிற்று. உடனே நான் ஈசனைத் துதித்தேன். அக்கட்டழகியை நோக்கி உன்னிடத்திலல்லவா இந்நிமிஷத்தில் எல்லாவித வைத்தியமும் சித்தமாயிருக்கின்றன. நீ சொன்ன ஒரு வார்த்தையால் செத்த பிணத்துக்கு நீ உயிர் மூட்டி வைத்தாயே. அப்பொழுது நானிருந்த ஸ்திதி என்ன. இப்பொழுது எனக்குவந்த பாக்கியம் என்ன என்று சொல்லி அவளை மூன்று தடவை வலம் வந்து அவள்முன் நின்று "உன் கட்டளை இப்பொழுது என்னவெனில் என் உள்ளத்திலுள்ளதை உள்ளபடி ஒளிக்காமல் சொல்ல வேண்டும் என்பதன்றோ. உன் அடிமையாகிய எனக்கு இவ்வேழு உலகங்களையும் ஆளும் இந்திரபதவிக்கு மேலானது உன் காலின் விழுந்திருப்பது என்றிருக்கிறது. ஆகையாலிவ் வேழையாகிய என் மேல் மனமிரங்கி என்னை ஒப்புக்கொள். என்னை உன் காலின்கீழ் வைத்துக்கொண்டு என்னை மேன்மைப்படுத்து" என்றேன். இவ்விதமாய் நான் சொன்னதும் சொற்ப நேரம் அவள் சிந்தையிலாழ்ந்தியிருந்து என்னைக் கடைக்கண்ணால் பார்த்து "உட்காரும்" என்று கட்டளையிட்டாள். "ஐயா, நீங்கள் எனக்குச் செய்துவிட்ட உபகாரமும் நீங்கள் என்னிடம் நடந்துகொண்ட உண்மையும் நீங்கள் என்ன சொன்னாலும் சொல்லத்தகும் என்ற பதத்தை உமக்கு அளித்திருக்கின்றன. அவைகள் என் உள்ளத்திலும் கல்லின்மேல் எழுத்துப் போல் பதிந்திருக்கின்றன. ஸரி நான் உமது வேண்டுகோளை ஒப்பினேன்" என்றாள்.

அதே தினத்தில் ஓர் சுப லக்கினத்தில் நல்ல முகூர்த்தத்தில் ஓர் காஜி அங்குவந்து எங்களிருவருக்கும் விவாகத்தை நடத்தி

முடித்தார். என் மனோரதம் முற்றிலும் கைகூடியதைக் கண்டேன். எத்தனையோ அவஸ்தைகள், எத்தனையோ கஷ்டங்கள், துக்கங்கள் அனுபவித்த பின் ஈசன் எனக்கு அம்மகோத்ஸவ தினத்தைக் காண்பித்தான். ஆனால் இக்கட்டழகிக்குத் தாலி கட்டவேண்டும் என்ற ஆசை எவ்வளவு அதிகமாய் என் உள்ளத்தில் ஒரேவிதமாய் குடிகொண்டிருந்ததோ அதே விதமாய் அவளுடைய அதிசயங்களை அறிந்துகொள்ளவேண்டும் என்ற அவாவும் அதிகமாய் குடிகொண்டிருந்தது. என்ன அவா எனில்:—இன்று வரையில் எனக்கு இக்கட்டழகி யார் என்பது ஏன் தெரியவில்லை. நல்லது, அவ்வழகான ஹம்ஸபக்ஷிசாதியான எவனொருவன் இவள் எழுதியனுப்பிய ஒரு சிறு கடிதத்துண்டைப் பார்த்ததும் என் கையில் அத்தனை விராகனை சுமை சுமையாக ஒப்புவித்தானோ அவன் யார். அரசர்களே புசிக்கவேண்டிய மேன்மை அமைந்த அவ்விருந்து ஒரு ஜாமத்துக்குள் எவ்வாறு சித்தமாயிற்று. அவ்விரு குற்றமற்றவர்கள் என்ன காரணத்தால் அவ்விருந்தின் முடிவில் வெட்டுண்டு மாண்டார்கள். நான் எவ்வளவோ பணிவிடையும் உபகாரமும் அவளுக்குச் செய்திருக்க ஏன் அவள் என்னிடம் அவ்வாறு கோபங்கொண்டு நன்றியில்லாதவள் போல நடந்தாள்: அப்படி நடந்தவள் ஏன் ஒரு நொடியில் என் தலையைத் தூக்கிவிட்டு என்னை இவ்வளவு உன்னத பதவியில் கொண்டு வந்தாள் * * * ஒரு நாள் நான் அவளை நோக்கி சொன்னதாவது, "என்னுள்ளத்தில் நான் என்ன ஆசை வைத்திருந்தேனோ அவ்வாசையை நான் அடைந்துவிட்டேன். ஆனால் என் மனத்துக்குள் எப்பொழுதும் ஓர் வித ஸந்தேகம் பாதித்துக் கொண்டே நின்றது. எவன் மனத்தில் எப்பொழுதும் ஸந்தேகமிருக்கின்றதோ அவனுக்கு ஒரு பொழுதும் சுகமே கிடையாது. அக்காரணத்தால் அவன் ஒன்றுஞ் செய்ய முடியாமல் சிலவேளை தயங்கி நிற்பான். மற்ற மனிதர்களை விட வேறானவனாவான். நான் என் மனத்தினுள் நிச்சயப்படுத்திக் கொண்டிருந்த தென்னவெனில் உன்னை இக்கலியாணத்திற்குப்பிறகு இவ்விஷயங்களைப் பற்றி விசாரிக்கவேண்டும் என்பது உன் விஷயமாய் சில ஸங்கதிகள் எனக்குப் புலப்படவேயில்லை, அருத்தமாகவுமில்லை. உன் உதடுகளை அசைத்து நீயே இவ்விஷயங்களை

விளங்கச் சொன்னால் எனக்கு எவ்வளவோ ஆறுதலை யுண்டாக்கும்" என்றேன். இதைக்கேட்டு அக்கட்டழகி முகத்தைக் கடுத்துக் கொண்டு "என்ன அழகு! இப்பொழுது ஒருக்கால் மறந்தீர்களா என்ன? பல தடவை நான் உம்மிடம் என் செய்கைகளைப் பற்றி நீர் ஒருபொழுதும் விசாரிக்கக்கூடாது. என் பேச்சுகள் ஒன்றையும் தடுக்கக்கூடாது என்று சொல்லியிருப்பதை நினைவு மூட்டிக்கொள்ளும். அப்படியிருக்க வழக்கத்துக்கு விரோதமாய் நீர் என்னை சோதிக்கக் கேட்பது நியாயமா" என்றாள். அதற்கு நானும் புன்னகையுடன் "நீ எவ்வளவோ பெரிய விஷயங்களை எல்லாம் என்னிடம் மன்னித்திருக்கின்றாய். அவைகளைப் போல் இதையும் மன்னிப்பாயாக" என்றேன். அக்கட்டழகி உடனே தன்முகத்தை சுளுக்கிக்கொண்டு வெகு கோபங் கொண்டவளாய் தீபோல் ஜ்வலித்துக் கொண்டு என்னைப் பார்த்து "இப்பொழுது உமது தலை அதிகமாய்க் கொழுத்துவிட்டது. நீர் எழுந்திருந்து சென்று உமது வேலையைப்பாரும். இந்தப் பேச்சுகளால் உமக்காவதென்ன * * * என் மனத்தில் தோன்றுவதென்ன வெனில், நான் ஒருக்கால் என் ரகசியங்களை வெளியிட்டால் அதனால் பெரும் ஆபத்து விளையும்" என்றாள். அதற்கு நான் "இதென்ன பயம், உனக்கு என்னைப் பற்றி ஒருவித ஸந்தேகமும், பயமுமில்லாமல் உன் உள்ளத்திலிருப்பதை வெளியிடு. ஒன்றையும் ஒளிக்காதே. என் உள்ளத்தில் விழுந்த ஸமாச்சாரத்தை நான் உதடு வரையிற்கூட கொண்டுவர மாட்டேன். அதை என் உள்ளத்திலேயே பதுக்கி வைத்துக் கொள்ளுவேன். என் உள்ளத்தினின்று உதட்டுக்கே வராமலிருக்கையில் மற்றவர்கள் காதில் எவ்வாறு விழும்" என்றேன். இவன் சொன்னலொழிய நம்மை விடமாட்டான் என்பதை அவள் அறிந்து கொண்டதும் வெகு ஏங்கினவளாய், என் ஸந்தேகத்தைத் தீர்த்தால் ஒழிய தன் மனத்துக்கு ஆறுதல் இல்லை என்று அஞ்சினவளாய் என்னை நோக்கிப் பின்வருமாறு சொல்லலுற்றாள்:—நானிவ் விஷயங்களைப் பற்றிச் சொல்லுவதால் வரும் ஆபத்து வெகு அதிகமாக விருக்கும், நீங்களோ இவ்விஷயத்தில் வெகு பிடிவாதங் கொண்டிருக்கின்றீர்கள். நானே உங்களை திருப்திசெய்து வைப்பதில் கடமைப்பட்டவளாக விருக்கின்றேன். அதற்காகவென்றே

என் சரித்திரத்தை நான் இப்பொழுது உமக்கு வெளியிடப் போகின்றேன். நீங்களும் இதை வெளிவிடாமல் உமக்குள்ளேயே காப்பாற்றி வைத்துக் கொள்ளுவது வெகு அவசியம். அவ்வாறு நீங்கள் செய்வீர்களென்று முற்றிலும் நம்பி நான் வெளிப்படுத்துகின்றேன்" என்றாள்.

கடைசியாய் என்னைப் பலவண்ணம் எச்சரித்துவிட்டு தன் கதையை அவள் சொல்லத் தொடங்கினாள்:—வெகு நிர்ப்பாக்கியசாலியாகிய நான் தமஷ்க் தேசத்து அரசனுடைய மகள்; அவர் பல சுல்தான்களுக்கு மேலான அரசர். என்னைத் தவிர அவருக்கு இவ்வுலகத்தில் வேறு ஆணாவது பெண்ணாவது பிறக்கவில்லை. நான் பிறந்தநாள் முதல் என் தாய் தந்தைகளுடைய செல்வத்திலும் ஸந்தோஷத்திலும், வெகு விமரிசையாகவும் கௌரவமாகவும் வளரலானேன். நான் வளர வளர எனக்கு எப்பொழுதும் வெகு அழகான ஸுந்தரிகள் ஸகவாசம் மனத்துக்கு ஸந்தோஷத்தை உண்டாக்கலாயிற்று. ஆகவே, நான் எக்கணமும் என்னைச் சுற்றி பெரிய வமிசத்திலுதித்து என்னைப்போல் ஸமவயதான சிறு கட்டழகிகளை வைத்துக்கொண்டு அவர்களுடன் களிக்கலானேன். என் வேலைக்காரிகளும் என்னைப் போலவே வயதுள்ள வெகு அழகான குட்டிகள்தான். எப்பொழுதும் அவர்களுடன் பாடுவதுங் கூத்தாடுவதுந்தான் என்வேலை. உலகத்தின் நன்மை தீமை இவைகள் ஒன்றிலும் எனக்கு ஒரு விதக்கவலையும் கிடையவே கிடையாது. இவ்வண்ணம் ஓர் விதக் கவலையுமின்றி ஈசன் என்னை நற்பதத்தில் வைத்ததற்காக நான் எக்கணமும் அவனை துதிப்பதைவிட வேறு சிந்தையே யில்லாதவளாக விருந்தேன்.

இப்படி யிருக்கையில் என்குணம் ஏதோ காரணத்தால் திடீரென்று முற்றிலும் மாறிற்று; எனக்கு ஒருவருடைய ஸகவாஸமும் பிடிக்காமற் போயிற்று. அக்குதூகலக் கூட்டம் எனக்கு ஓர்வித ஸந்தோஷத்தையும் உண்டாக்கவேயில்லை. என்மனம் ஏதோ துக்கத்தால் வருந்திற்று. என் குணம் விஸனத்தையும் குழப்பத்தையும் கைப்பற்றிற்று. எந்த முகத்தைப் பார்த்தாலும் எனக்குப் பிடிக்கவேயில்லை. வார்த்தைகளாடவும் வார்த்தைகளைக் கேட்கவும்

என்மனம் வெறுக்கலாயிற்று. எனக்கு வந்திருந்த ஸ்திரியைக் கண்டு எல்லாக் கிழவிகளும் ஏக்கமுற்று என் காலில் விழுந்து என்ன உன் உடம்பிற்கு என்று கேட்கலானார்கள். அக்கோஜாக் கிழவன் அவன் தான் எனக்கு எப்பொழுதும் வேண்டியவன். அவனறியாத ரகஸியம் என்னைப்பற்றி ஒன்றுமில்லை. அவன் என்னிடம் வந்து நான் துக்கத்தில் மூழ்கி யிருந்ததைக்கண்டு "அம்மணி! நீங்கள் எலுமிச்சம்பழ ஷர்பத்து சொற்பநாள் தோறும் குடித்து வந்தால் உமக்கு முன்னிருந்த உற்சாக குணம் திரும்பிவரும். உமது மனம் மறுபடி களிப்படையும்" என்றான். அவன் அவ்வண்ணம் சொன்னவுடன் எனக்கும் அப்பானம் செய்யவேண்டு மென்ற அவா உதித்தது. நான், "அப்படியானல் சடுதியில் அதைக் கொண்டுவா" என்று கட்டளையிட்டேன்.

அக்கோஜா வெளிச்சென்றான். ஒரு சிறுவன் கையில் அழகான ஓர் கூஜாவில் அவ்வெலுமிச்சம்பழப் பானம் சித்தப்படுத்தி அதைப் பனிக்கட்டியால் ஜில்லென்று குளிரச் செய்து அத்துடன் திரும்பி வந்தான். நானதைக் குடித்தேன். அதன் குணம் எவ்வாறு என்று அவன் சொல்லி யிருந்தானோ அவ்வாறாகவே யிருக்கக்கண்டேன். அது எனக்கு சொற்பம் நன்மை யுண்டாக்கிற்று. உடனே நான் அக்கோஜாவுக்கு விலையுயர்ந்த உடுப்பு ஒன்று வெகுமதி செய்து ஒவ்வொருநாளும் அதே வேளையில் அப்பானம் எனக்குக் கொண்டு வந்து கொடுக்கும்படி கட்டளை யிட்டேன். அன்று முதல் அதே வழக்கமாயிற்று. அக்கோஜா அப்பையனுடன் அப்பானம் கொண்டுவருவதும் நானதைப் பானம் பண்ணுவதுமாயிற்று. அப்பானத்தின் போதை ஏறும்பொழுது எனக்கு உற்சாகம் வருமாகையால் அவ்வேளையில் அப்போதையால் அப்பையனுடன் சிரிப்பும் களிப்புமாய்ப் பேசி என் காலத்தைக் கழிப்பேன். அவனும் சொற்பம் கூச்சம் நீங்கவே வெகுமதுரமாய்ப் பேசலானான். பல கதைகள் சொல்லத் தொடங்கினான். சிற்சில வேளைகளில் பெருமூச்சு விடுவான். அவன் முகமோ வெகு சுந்தரமாயும் பார்ப்பதற்கு வெகு யோக்கியமாயு மிருந்தது. என்னால் என்னையே அடக்கிக்கொள்ள முடியாமல் என் மனம் அவனை விரும்பலாயிற்று.

என் உள்ளம் அவனிடம் பாய்ந்தபடியாலும் அவனுடைய விநோதப் பேச்சுகள் எனக்கு வெகு ருசியாயிருந்த படியாலும் ஒவ்வொரு நாளும் அவனுக்கு பலவித இனம் வெகுமதி முதலியவைகள் கொடுக்கலானேன். ஆனால் அவ்வற்பன் முதல் முதல் என்னிடம் வந்தகாலத்தில் எந்த அழுக்கு உடைகளைத் தரித்து வந்தானோ அதே உடைகளுடன் நாள்தோறும் வரலானன். அவைகள் அழுக்கடைந்தவைகள் மட்டுமல்ல; கிழிந்தவைகளாயு மிருந்தன.

நான் ஒருநாள் அவனைப்பார்த்து "என் கோசத்திலிருந்து நான் உனக்கு எவ்வளவோ பொருள் கொடுத்திருக்க நீ அதே அற்ப உடையுடனிருக்கின்றாயே இதின்காரணம் என்ன? அவ்வளவு ரூபாயையும் எவ்வாறு செலவிட்டாய்? அல்லது சேர்த்துவைத்திருக் கின்றாயா?" என்றேன். அவ்விளைஞன் இவ்வளவு ஆதரவாய் நான் அவன் ஸ்திதியைப் பற்றிக் கேட்கவே கண்ணுங் கண்ணீருமாய் இதுவரையில் என்னென்ன இப்பிதிவிக்கு நீங்கள் இனம் அதாவது வெகுமதி செய்தீர்களோ அவைகளை எல்லாம் என் உபாத்தியாயர் எடுத்துக்கொண்டு விட்டார். இதுவரையில் எனக்கு ஒரு காசுகூட கொடுக்கவில்லை ஆகையால் நானதைக் கொண்டு வேறு உடை சித்தப்படுத்தி தங்கள் முன்பு வந்து நிற்கக்கூடும். இவ் விஷயத்தில் என் குற்றம் ஒன்றுமில்லை. நான் என் செய்வேன் என்றான். இவ்வளவு பரிதாபமாய் அவன் சொல்லவே என் மனத் தில் இரக்க முண்டாயிற்று. அப்பொழுதே நான் அக் கோஜா வைக் கூப்பிட்டு அன்று முதல் அவன் வசத்தில் அப்பையனை வைத்துப் பரிபாலிக்க வேண்டும் என்று கட்டளையிட்டேன். அவன் கண் பார்வையில் அவனுடைய படிப்பு முதலியவைகள் நடக்க ஏற் பாடு செய்தேன். நல்ல உடைகள் தைத்துக் கொடுக்கும்படியும் அற்ப வேலைக்காரர்களுடன் ஸகவாஸஞ் செய்து கூத்தாடி விளை யாடாமல் நற்பழக்கத்தில் காலங் கழிக்கும்படியும், திட்டஞ் செய் தேன். ஏனெனில் அப் பையனுக்கு மரியாதையான பழக்கங்கள் படிந்து அவன் என்னிடமே யிருக்க யோக்யனாக வேண்டும் என்றும் என்னிடமே அவனை எப்பொழுதும் வைத்துக்கொள்ள வேண்டும் என்றும் என் மனத்திற்குள் தோன்றி யிருந்தது. அக்கோஜா

என் கட்டளைகளை முற்றிலும் நிறைவேற்றி என் நோக்கத்தை ஒரு வாறு அறிந்தவனாய் அவ்வாலிபனை வெகு பட்சத்துடன் காப் பாற்றி வந்தான். சொற்ப காலத்துக்குள் வெகு சௌக்யமாயும் சந்தோஷமாயும் அவ்வாலிபன் வளர்ந்த காரணத்தால் அவன் நிறமும் காந்தியும் முற்றிலும் மாறி சட்டை உரித்த பாம்புபோல் சோபிக்கலானான். நான் என் மனத்தை எவ்வளவு தூரம் அடக்க வேண்டுமோ அவ்வளவு தூரம் அடக்கிப் பார்த்தேன். ஆனால் அந்நன்றி யற்றவனுடைய முகம் எப்பொழுதும் என் உள்ளத் திலேயே இடைவிடாது பதிந்து நின்றமையால் அவனை என் ஆசை நாயகனாய்ச் செய்து அவனை என் ஈரலில் பதுக்கவும் ஒரு விநாடி கூட அவனை விட்டு என்னிரு கண்களும் நீங்காமலிருக்கவும் நான் கருத்துக் கொண்டேன்.

கடைசியாய் அவனுக்கும் என்னைப்போலவே பதமளித்து என் னிடமே வைத்துக் கொண்டு விதம் விதமான உடுப்பு உடுத்தியும் வேளைக்கு வேளை வேறு வேறு நிறமான ரத்தினங்கள் பூட்டியும் அவன் அழகைப் பார்த்துக்கொண்டே யிருப்பேன். அவன் எப் பொழுதும் என் சமீபத்தி லிருந்தாற்றான் என் கண்கள் குளிரும். என் உள்ளமும் குளிரும். எந்த நிமிஷத்தில் அவன் என்ன கேட் பானோ அதை உடனே கொடுப்பேன். கடைசியாய் என் கதி எவ் வாறாயிற்றென்றால் எக்காரணத்தாலாவது அவன் சொற்பநேரம் என்னைவிட்டு அவஸர காரியமாகப் பிரிந்து வெளியே சென்றால், என் மனத்துக்கு துக்கம் வந்துவிடும் இவ்விளைஞன் சொற்ப வரு ஷங்களுக்குப் பின் காளையானான். நன்றாக அவனுக்கு மீசை முளைத்தது. கன்னங்களில் ரோமராஜி விளங்கிற்று. அவன் தேகமும் கை கால்களும் கடைந்தெடுக்கப்பட்டன போலாயின. அப்பொழுது அவனைப்பற்றி ராஜ சபையைச் சேர்ந்தவர்கள் எல் லாரும் வம்பளக்கலானார்கள். அரண்மனைக் காவலாளிகள் எல்லா ரும் அவன் தன்னிஷ்டப்படிக்கு அரண்மனையின் அந்தப்புரத்திற் குள் வந்து போய்க்கொண்டிருப்பதைப் பற்றி ஆக்ஷேபிக்கலானார் கள். கடைசியில் அவனை வரக்கூடாதென்று தடுத்துவிட்டார்கள். எனக்கோ அவனின்றி ஓர்வித சுகமும் கிடையாது. அவனில்லாத

ஒவ்வொரு நிமிஷமும் ஓர் மலையாக விருந்தது. இக்குடி முழுகிப் போன சமாச்சாரத்தைக் கேட்டதும் என் கதி எவ்வாறுயிற்றென்றல் யமதர்மராஜன் ஸபையில் விசாரணைக்கு நிற்கின்றவன் எவ்வாறேங்குவானே அவ்வாறுயிற்று. ஆனல் இவ்விஷயத்தைப் பற்றி ஒரு பேச்சும் வாய்திறந்து பேசவோ யோக்யதை இல்லாதவளாக விருந்தேன். அவனைவிட்டு நீங்கிப் பிழைத்திருக்கவும் வழியற்றவளாக விருந்தேன். செய்ய வேண்டியது இன்னதென்பது எனக்கு விளங்கவே யில்லை. ஜகதீசா! நான் என்ன செய்வேன். வெகு விசித்திரமாய் நான் அவஸ்தைப் படலானேன். என் துக்கத்தில் நான் அதே எவனொருவன் என் ரகஸியங்கள் யாவற்றையு மறிந்திருந்தானே அதே கோஜாவைக் கூப்பிட்டு "எனக்கோ இவ்வாலிபனை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணமிருக்கின்றது. அவனுக்கு ஆயிரம் வராகன் முதல் கொடுத்து கடைத்தெருவின் சவுக்கில் ஒரு ரத்தின வியாரக் கடைவைத்துக் கொள்ளச் சொல். அதுதான் நல்ல ஏற்பாடு. அப்பொழுது அவன் அவ்வியாபாரஞ் செய்து அத்தால் வரும் லாபத்தைக் கொண்டு வெகு சௌக்கியமாய் தன் காலத்தைக் கழிப்பான். என் மாளிகைக்குச் சமீபத்தில் வெகு சௌக்கியமான ஒரு அழகான வீடு வாங்கிவை. அதில் அவன் குடியிருக்கட்டும்; வேலைக்காரன் வேலைக்காரி எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பெயர்களையும் விலைக்கு வாங்கி அவர்களுக்கு சம்பளம் முதலியவைகளை ஏற்பாடு செய்து அவனிடம் ஒப்பிவை. ஒரு விதத்திலும் அவனுக்கு வருத்தமென்பதே வேண்டாம். அவன் வெகு சௌக்கியமாய் எல்லாவித சௌகரியங்களுடன் வாழட்டும்" என்று கட்டளையிட்டேன். அக்கோஜாவும் என் உத்தரவுப்படி அவனுக்கு வீடு, கடை எல்லாம் ஏற்பாடு செய்து வைத்தான். சொற்ப காலத்துக்குள் அவன் கடை எவ்வாறு சோபிக்கலா யிற்றென்றல் அரசனுக்காவது மற்ற பிரபுக்களுக்காவது உயர்ந்த உடுப்புகள் அல்லது ரத்தினங்கள் வேண்டியிருந்தால் அவைகள் அவன் கடையிற்றான் கிட்டும். சொற்பம் சொற்பமாய் அவன் கடை எவ்வாறேங்கிற்றென்றல் ஒவ்வொரு தேசத்தின் அபூர்வ சாமான்களும் அவனிடந்தான் கிட்டும். மற்ற எல்லா வியாபாரிகளுடைய நித்திய வியாபாரங்கள் அவன் வியா

பாரத்துடன் ஒப்பிடுங்கால் முற்றிலும் மங்கலாயின. இப்பட்டணத்தில் அவனுக்கு நிகரான வியாபாரி ஒருவனாவது இல்லை. இப்பட்டணமட்டு மல்ல. ஒரு தேசத்திலுமில்லை என்று சொல்லலாம்.

இவ்வியாபாரத்தால் அவன் லட்சக்கணக்கான ரூபாய்களைக் குவித்தான். ஆனால் அவனை விட்டுப் பிரிந்த துக்கமோ நாளுக்கு நாள் என் உள்ளத்தில் வேகலாயிற்று. அவனை எவ்வாறு பார்த்து என் உள்ளத்தைக் குளிரச் செய்து கொள்ளலாமென்று என்ன யோசித்தாலும் எனக்கும் வழி புலப்படவில்லை. கடைசியாய் இவ்விஷயமாய் யோசனை செய்யும் பொருட்டு அக்கோஜாவைக் கூப்பிட்டு நான் "அவ்விளைஞனைப் பார்க்க வழியொன்றும் தோன்றவில்லை. நான் ஒரு நிமிஷமாவது அவனைப் பார்த்துத்தான் என் உள்ளத்துக்கு ஆறுதலை செய்ய வேண்டும். அதற்கு ஒரே வழிதான் எனக்குப் புலப்படுகின்றது. அவன் வீட்டிலிருந்து என் மாளிகைக்கு ஓர் சுரங்கம் ஏற்படுத்த வேண்டும்" என்றேன். நான் இவ்வண்ணம் கட்டளையிட்டு சொற்ப நாளைக்குள் ஓர் சுரங்கம் சித்தமாய்விட்டது. அக்கோஜா அச்சுரங்கத்தின் வழியாக அஸ்தமனமானதும் அவ்விளைஞனை வெகு இரகஸியமாய் என் அறைக்கு அழைத்து வந்துவிட்டுப் போவான். இரவு முழுமையும் உண்பதிலும் குடிப்பதிலும் உறங்குவதிலும் நாங்களிருவரும் எங்கள் காலத்தைக் கழிப்போம். நான் அவனைக் கண்டு ஆனந்தக்கடலில் மூழ்கி ஆனந்தித்தேன். அவனும் என்னைக்கண்டு களித்தான். காலை வெள்ளி முளைத்ததும் முவஸ்ஸீர் எல்லாரும் எழுந்து ஈசனை வணங்குங்கள் என்று கூவலானதும் அக்கோஜா அவ்விளைஞனை அதேவழியாகத் திரும்ப அழைத்துப்போய் அவன் வீட்டில் விட்டு விடுவான். இச்சங்கதி அக்கோஜா இன்னுமிரண்டு தாதிகள் இம்மூவருக்கு மட்டும் தெரியுமே யல்லாது நான்காவனொருவனுக்காவது தெரியாது. அத்தாதிகள்தான் நான் குழந்தையாக் கிருந்தபொழுது எனக்குப் பால் கொடுத்து வளர்த்தவர்கள்.

இதேமாதிரி வெகுகாலம் நடந்துவந்தது. ஒருநாள் வழக்கப்படி அவனை! கோஜா கூப்பிடச் சென்றபொழுது அவ்விளைஞன்

வெகு துக்கப்பட்டவனாய் ஏதோ யோசித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டான். உடனே அவன் அச்சிறுவனைப் பார்த்து என்ன இன்றைக்கு? உன் க்ஷேமத்துக்கு ஒன்றுங் குறைவில்லையே? ஏனிப்படி துக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றாய், புறப்படு, ராஜகுமாரத்தி உன்னை அழைத்து வரக் கட்டளையிட்டிருக்கின்றாள்" என்றான். இதற்கு அவன் ஒருவித மறுமொழியும் சொன்னானில்லை. (நாவை) உதட்டை அசக்கினானில்லை. அக்கோஜாவோ அவ் வினைஞனைப் போலவே தன் முகத்தை வைத்துக்கொண்டு என்னிடம் திரும்பிவந்து அச்சிறுவனிருந்த ஸ்திதியைச் சொன்னான். என்னைப் பற்றியிருந்த பிசாசு என்னைப் பாழாக்கக் கருதியிருந்தபடியால் அச்சிறுவனிவ்வண்ணம் என்னை அலட்சியஞ் செய்துங்கூட நானவனை மறக்க மனமே வரவில்லை. ஆனால் அப்பொழுது மட்டும் நான் அந்நன்றியற்ற அற்பனிடம் வைத்திருந்த அவ்வளவு அன்பும் ஆசையும் என்னைப் பாழ்பண்ணி, என் புகழையும் பெயரையும் கெடுத்து என் நடத்தைக்கே கெட்ட பெயரை உண்டாக்கி வைக்கும் என்பதை நானறிந்திருப்பேனே யானால், நான் அக்கணமே அச்சண்டாளனை விட்டு நீங்கியிருப்பேன். தவசிவேடம் பூண்டு தவம் புரியப் புகுந்திருப்பேன். அவன் பெயரையே வாய்விட்டுச் சொல்லியிருக்க மாட்டேன். அவ் வெட்கங்கெட்ட பதருக்கு என் உள்ளத்தைச் சுத்தஞ் செய்திருக்கமாட்டேன். ஆனால் இவ்வாறெல்லாம் நடக்கவேண்டுமென்றல்லவா என் தலையில் எழுதியிருந்தது. அக்காரணத்தால் அவன் என்னை அலட்சியஞ்செய்ததைத நான் கருதவேயில்லை. அவன் என்னை நாடிவராமலிருந்ததையே ஆசைநாயகர்கள் தங்கள்நாயகிகளிடம் செய்துகொள்ளும் ஒருவித ஜம்பமாகவும் அந்த ஜம்பம்அவர்கள் தங்கள்ஆசை நாயகிகளிடம்வைத்திருக்கும் அபிமானத்தையே வெளிக்காட்டும் அடையாளமாகவும் கருதலானேன். அவ்வாறு மோசம் போனதற்கு இன்னும் நான் துக்கப்பட்டு முடியவில்லை. உமக்கு இவ்விஷயங்கள் ஒன்றும் தெரியவே வேண்டாம், என்றாலும் நீங்களும் இவைகளை இப்பொழுது கேட்கும்படியாயிற்று இவ்வாறாகாத பக்ஷத்தில் நீங்கள் எவ்விடமோ நான் எவ்விடமோ, நீங்கள் யாரோ, நான் யாரோ, ஏதோ நடந்தது நடந்து விட்டது. நானோ அக்கழுதையின் செருக்கை சொற்பமாவது கருதாதவளாய் மற்றொரு தடவை என்

கோஜாவைக் கூப்பிட்டு அவனுக்கு பின்வருமாறு ஸமாச்சாரம் சொல்லியனுப்பினேன்:—"இப்பொழுது நீ மட்டும் என்னிடம் வரா விட்டால் நான் எப்படியாவது உன்னிடம் வந்தே தீருவேன். ஆனால் நான் அவ்விடம் வருவதில் பெரும் ஆபத்து ஒருக்கால் விளைந்தாலும் விளையும். இவ்விரகஸ்யம் வெளிப்படுமாயின் உனக்கு நாசம்விளை யும். ஆகையால் உனக்கு அவமானம் என்பதைத்தவிர வேறு ஒருவித பயனுமற்ற காரியத்தை நீ ஏன் செய்யவேண்டும். இது தான் மேன்மை, நீ சடுதியில் இவ்விடம் ஓடிவா இல்லையேல் நான் உன்னிடம் வந்து விட்டவளாகப்பார்" என்று சமாச்சாரம் சொல்லி யனுப்பினேன். இந்த சமாச்சாரம் அவனுக்கு எட்டியதும் அவன் என் விரகதாபத்தை முற்றிலும் அறிந்தவனாய் முகத்தை முழு நீளம் வைத்துக்கொண்டு வெகு டம்பமாய் வந்து சேர்ந்தான்.

அவன் வந்து எப்பொழுது என்னிடம் உட்கார்ந்தானோ அப் பொழுது அவனைப்பார்த்து நான் "ஏன் இன்று இவ்வளவு பராமுகமும் கோபமும்? காரணம் என்ன? இவ்வளவு அவமதிப்பும் அவமரியாதையும் நீ ஒரு பொழுதும் செய்ததில்லையே. தினந் தோறும் கூப்பிட்டனுப்பும் போதெல்லாம் உடனே வருவது வழக்க மன்றோ" என்றேன். அதற்கு அவன் "இருந்தவிடமே தெரியாத ஏழையாகிய நான் உன்னுடைய தயவாலும் ஆதரணையாலும் இவ்வளவு மேலான பதவிக்கு வந்தேன். இப்பொழுது எவ்வள வோ சுகமாய் என் வாழ்நாளைக் கழித்து வருகிறேன். ஆகையால் உன் பிராணனும் ஸம்பத்தும் என்றென்றைக்கும் ஓங்க வேண்டு மென்று கடவுளை பிரார்த்தித்துக்கொண்டு வருகின்றேன். நீ என்னை மன்னிப்பாய் என்று முற்றிலும் நம்பி நானிக் குற்றம் செய்துவிட்டேன். நீ என்னை மன்னிக்க நான் வேண்டிக் கொள்ளு கின்றேன்" என்றான். நானோ என் உள்ளத்தையும் பிராணனையும் அவனுக்கு கொடுத்து விட்டிருந்தேன். அவனிட்டுக் கட்டிச் சொன்ன சொற்களை நம்பி விட்டேன். ஆகையால் நானவனை மன் னித்தது மட்டுமல்லாமல் வெகு அன்பு மாதரவுமாய் நீ என்னின் றைக்கு அவ்வளவு ஏக்கமுற்று துக்கித்துக் கொண்டிருந்தாய். அதை வெளியிடுவாயானல் அத்துக்கத்தின் காரணத்தை நான் அகற்றி வைக்கின்றேன் என்றேன்.

கடைசியாயவன் தன் அற்பகுணத்துக் கேற்றவாறு "எனக்கு எல்லாம் சிரமந்தான். ஆனால் உன் முன்னிலையில் எல்லாம் எனக்கு எளிதாய் முடியும்" என்றான். அதன் மேல் அவன் பேசிய பேச்சிலிருந்து ஏதோ ஒரு அழகான சிங்காரத் தோப்பும், பங்களாவும், பல ஓடைகள், தடாகங்கள், கிணறுகள் அமைந்ததாயுள்ளது. நடுப்பட்டணத்தில் விற்கப்படுவதாய் தெரியவந்தது. அது புதுச்சுண்ணம்புக் கட்டிடம் என்றும், அவன் வீட்டுக்குச் சமீபம் என்றும், புலப்பட்டது. அத்தோட்டத்துடன் ஓர் பெண்ணும் விலைப்படுவதாயும் அவள் கான சாஸ்திரத்தில் தேர்ந்தவள். நன்றாய்ப் பாடுகிறவள், கானத்தின் ருசியை முற்றிலும் அறிந்தவள்; என்றும் விளங்கிற்று. இன்னமொரு அதிசயம் என்னவெனில், அத்தோட்டமும் அப்பெண்ணும் கூடவே சேர்த்து விற்கப்படுகின்றதே ஒழிய பெண்ணை வாங்காமல் தோட்டத்தையாவது, தோட்டத்தை வாங்காமல் பெண்ணையாவது ஒருவனால் வாங்க முடியாதென்றும் வெளியாயிற்று. ஒட்டையின் கழுத்தில் கட்டின பூனையின் விலை உலகத்தாருக்குத் தெரியுமல்லவா. ஆகையால் அத்தோட்டத்தை வாங்கப்பட்டவன் அப்பெண்ணையும் வாங்கியே தீரவேண்டும். இன்னமொரு விந்தை. என்னவெனில், தோட்டத்தின் விலை ஐந்து ஆயிரம் ரூபா; அப்பெண்ணின் விலை 5 லட்சம் ரூபா; "இவ்வளவு ரூபாயை நான் எங்கிருந்து கண்டுபிடிப்பேன்" என்று அவன் சொல்லி முடித்தான்: இதைக் கேட்டவுடன் நான் அத்தோட்டத்தை வாங்குவதில் அவன் வெகு கவலை கொண்டிருப்பதாயும் அதற்காகவே அவன் அவ்வாறு ஏக்கமுற்றிருந்ததாயும், மனத்தின் சந்தோஷத்தை யிழந்திருந்ததாயும் ஊகித்துக் கொண்டேன். என்னிடம் அவன் உட்கார்ந்திருந்தான். என்றாலும் அவன் முகம் வாடின முகமாயும் மனம் களிப்பற்றதாயுமிருந்தன. அவன் சுகம் ஒன்று தான் ஒவ்வொரு நாழிகையும் ஒவ்வொரு விநாடியும் என் கவலையாக விருந்தது. அதே நிமிஷத்தில் நான் அக்கோஜாவைக் கூப்பிட்டு, "காலை எழுந்ததும் அத்தோட்டத்தை பெண்பிள்ளை உள்பட விலை தீர்த்து பத்திரமெழுதி இச்சிறுவனிடம் அந்த தஸ்தாவேஜை ஒப்பிவை. நமது கோசத்திலிருந்து பணம் வாங்கி விற்கின்றவனுக்குக் கொடு" என்று கட்டளை யிட்டேன்.

இவ்வுத்தரவு பிறந்ததும் அச்சிறுவன் எனக்கு வந்தனஞ் செய்தான். அவன் முகம் பிரஸன்னமாயிற்று. அவ்விரவை நாங்களிருவரும் வழக்கம் போல் சிரிப்பும் களிப்புமாகக் கழித்தோம். பொழுது விடிந்ததும் அவன் விடை பெற்றுச் சென்றான். கோஜாவும் நான் சொல்லி யிருந்த உத்தரவுபடி அத்தோட்டத்தை அப்பெண்பிள்ளையுடன் வாங்கி, அச்சிறுவன் வசத்தில் ஒப்பி வைத்தான். அதன்மேல் அச்சிறுவன் வழக்கப்படி இரவில் என்னை வந்து பார்ப்பதும் பொழுது விடிந்த பின் தன் வீடு செல்லுவதுமாயிருந்தான். ஒருநாள் வஸந்த காலத்தில் எந்தப் பிரதேசத்தைப் பார்த்த போதிலும் மனதுக்கு வெகு மனோஹரமாயிருந்தது. மேகங்கள் சொற்பம் கூடுவதும் மழைத்துளி பிசு பிசு என்று விழுவதுமாய் அடிக்கடி மின்னலாயிற்று. இளங்காற்று சுகமாய் வீசிக் கொண்டிருந்தது. அவ்வேளை எதைப் பார்த்தாலும் என் மனதுக்கு ஸந்தோஷமா யிருந்தது. மாடத்தில் அழகாய் பலவிதமான பாத்திரங்களில் வைத்திருந்த பானங்களை நான் கண்ணுற்றதும் சொற்பம் பானம் பண்ணலாமா என்று என் மனதிற்கு தோன்றிற்று. இரண்டு மூன்று கிண்ணங்கள் நான் குடித்தானதும் புதிதாய் வாங்கப்பட்ட புதுத் தோட்டத்தின் ஞாபகம் என் மனத்திலுதித்தது. ஏன் அப்பொழுது அத்தோட்டத்துக்குப் போய் வரக்கூடாதென்று எனக்குள் ஓர் ஆசை வெகு உற்சாகத்துடன் தோன்றிற்று. துரதிர்ஷ்டம் வந்து விட்டதென்றால் ஒட்டகத்தின் மேல் உட்கார்ந்திருக்கிறவனையும் நாய் கடிக்குமல்லவா? நான் என் மாளிகைக்கதவை நன்றாக இழுத்து மூடினேன். ஓர் தாதியை என்னுடன் அழைத்துக் கொண்டு அச்சுரங்கத்தின் வழியே அவ்விளைஞன் வீடு சென்றேன். அவ்விடமிருந்து அத்தோட்டத்துக்கு ஏகினேன். அதை நான் கண்ணுற்றதும் அத்தோட்டம் உண்மையாகவே இந்திரனுடைய நந்தவனத்துக் கொப்பாக விருந்தது. அத்தோட்டத்திலிருந்த மரங்களின் பச்சையிலைகளின் மேல் விழுந்திருந்த மழைத்திவலைகள் மரகதத்தின் மேல் பதிக்கப்பட்டிருந்த நல் முத்துக்கள் என்றே சொல்லும்படி விளங்கின. புஷ்பித்து விளங்கின மலர்கள் அன்று சாயந்திரம் ஸந்தியா காலம் போல் விளங்கின. கால்வாய்களும் தடாகங்களும் கண்ணாடிகளின் பலகைகள் போல் மின்னலா

யின. அவைகளின் மேல் சிறு அலைகள் விளையாடிக் கொண்டிருந் தன.

அத்தோட்டத்தில் அங்கு மிங்கும் நான் அலைந்து கொண்டிருக் கையிலேயே பொழுது புகுந்து இரவின் இருள் பரவலாயிற்று. இச்சமயத்தில் அச்சிறுவன் ஒரு சிறு வழியில் உலாவிக் கொண்டி ருக்க நான் கண்டேன். அவன் என்னைக் கண்டதும் வெகு மரி யாதையுடனும் அபிமானத்துடனும் என்னிடம் வந்து என் கையை தன் கையால் பற்றி ஸமீபத்தில் போட்டிருந்த ஒரு அழகான கூடா ரத்துக்கு என்னை அழைத்துப் போய் உட்கார வைத்தான். அவ் விடம் நான் உட்கார்ந்து என்னைச் சுற்றிப் பார்த்ததும் அவ்வுத்யா னத்தில் அதுவரையில் நான் கண்டிருந்த அவ்வளவு அழகையும் மறந்தேன். அக்கூடாரத்தினுள்ளிருந்த அழகை வெளியிடவே முடியாது. எங்கு பார்த்தாலும் அழகான விளக்குகள் ஏற்றப்பட் டிருந்தன. அவைகளின் அலங்காரங்கள் வெகு விசித்திரமாக விருந் தன. அவைகளின் முன்னர் ஷடீபராத் உற்சவத்தில் ஏற்றப்படும் அலங்கார தீபங்களின் காட்சியை இருள் என்றே சொல்ல வேண் டும். ஒரு பக்கத்தில் பல விதமான வாண வேடிக்கைகள் நடந்து கொண்டிருந்தன.

இத்தருணத்தில் மேகங்கள் மறைந்தன. வெண் பட்டாடை கட்டி திடீர் என்று வந்து தோன்றுகின்ற ஓர் உத்தமி போல் சந் திரன் உதயமாயிற்று. எங்கும் ஒரே அழகாக விளங்கிற்று. சந்திரனுதயமானதும் அச்சிறுவன் நாமிப்பொழுது இவ்விடம் விட்டுச் சென்று இத்தோட்டத்தின் ப்ராஸிகானுவாகிய உப்பரிகை யில் உட்காருவோம் என்றான். நானோ அத்தருணத்தில் பெரும் பைத்தியக்காரியா யிருந்தபடியால் அவ்வற்பன் என்னென்ன சொன் னானோ அவைகள் அவ்வளவையும் கேட்கலானேன். அவன் அப் பொழுது என்னை ஆட்டி வைத்தபடி நான் அப்பாஸிகானுவின் மேல் ஏறினேன். அம்மாளிகை எவ்வளவு உயரமாக விருந்ததெனில், அப்பட்டணம் முழுமையும் அக்கடைகளில் ஏற்றப்பட்டிருந்த அவ் வளவு தீபங்களும் அம்மாளிகையின் பாதத்தில் விளங்கின என்று சொல்லலாம், நானோ அவ்விடத்தில் அச்சிறுவன் கழுத்தில் என்

கையை போட்டுக்கொண்டு சந்தோஷத்தால் முற்றிலும் மெய் மறந்தவளாய் அவ்விடம் உட்கார்ந்திருந்தேன். இப்படி நானிருக்கும்பொழுது ஒரு முண்டை, பூதம் என்றே அவளைச் சொல்லலாம். ஒருவித அழகு மற்றவளாய், ஸர்வ விகாரமாய் அடுப்பில் அவித்தெடுத்த கரிக்கட்டை போல் விளங்கிக்கொண்டு கையில் சாராயமடங்கிய ஸீஸா ஒன்று ஏந்தி அவ்விடம் வந்து தோன்றினள். அவள் அவ்விடம் அவ்வாறு சரேல் என்று வந்தது எனக்குப் பிடிக்கவேயில்லை. வெகு கெடுதலாகத் தோன்றிற்று. அவள் முகத்தை நான் பார்த்ததும் என் மனத்தில் அதிக பயம் தோன்றிற்று.

நான் மனம் நடுங்கினவளாய் அச்சிறுவனைப் பார்த்து "இவ்வழுக்குச் சரக்கை எங்கு பிடித்தாய்" என்றேன். அவனதற்கு தன்னிருகைகளையும் கூப்பிக்கொண்டு "எவளொருவள் உன் தயவால் இத்தோட்டத்துடன் வாங்கப்பட்டாளோ அதே வேலைக்காரி இவள்" என்று சொன்னான். அவன் சொன்னது அவ்வாறு என்றாலும், அவன் மனம் மட்டில் அவளிடம் பதிந்திருந்தது என்பது வெளியாயிற்று. அதை நானறிந்து கொண்டு வெகு வருத்தமுற்றவளாய் ஒன்றுஞ் சொல்லாமலிருந்தேன். ஆனால் அந்த நிமிஷம் முதல் என் மனம் குழம்பிவிட்டது. துக்கம் என்பது என் உள்ளத்தை மூடிக்கொண்டது. இவ்வளவு போதாததுபோல் அக்கொடிய பாவி அம்முண்டையை எங்களிருவருக்கும் பானம் கொடுக்கின்றவளாக ஏற்பாடு செய்திருந்தான். அப்பொழுது நான் குடித்தது பானமல்ல. என் ரத்தத்தையே நான் குடித்துக் கொண்டேன். அவ்வளவு கோபம் எனக்கு வரலாயிற்று. ஒரு கிளியை காக்கையுடன் ஒரே கூட்டிலடைத்தாலது எவ்வளவு சங்கடப்படுமோ அவ்வளவு சங்கடப்படலானேன். அவ்விடம்விட்டு எழுந்து போகவோ எனக்கு வகை தெரியவில்லை. அவ்விடம் உட்கார்ந்திருக்க என் உள்ளம் எனக்கு இடங்கொடுக்கவில்லை. கதையைச் சுருக்கிச் சொல்ல அப்பானமோ வெகு போதை உண்டாக்கும் குணமுள்ள பானம். அதைக் குடிக்கும் மனிதன் மிருகமாவான். இரண்டு மூன்று கிண்ணங்கள் அச்சிறுவனுக்கு ஒன்றின்பின் ஒன்றாக அவள்

கொடுக்கலானுள். அவன் என்னை வெகுவாய் வருந்தி வேண்டவே, நானும் அரைக்கிண்ணம் என்னையே யறியாமல் குடித்தேன். வெட்கங்கெட்ட அம்முண்டை அச்சாராயத்தை மிதமின்றி குடித்து வெறிகொண்டு அச்சிறுவனிடம் மரியாதையின்றி பேசலானுள். அவ்வற்பனும் குடி மயக்கத்தால் வெட்கம், மானம் இவைகளை முற்றிலும் துறந்து மரியாதை மீறி நடக்கலானுன்.

அப்பொழுது எனக்குண்டாயிருந்த வெட்கத்தில் பூமாதேவி பிளந்திருப்பாளேயானுல் அப்பிளப்பில் நான் குதித்து என்னை மறைத்துக்கொண்டு என் பிராணனையே விட்டிருப்பேன். ஆனுல் அவன் மேல் நான் வைத்திருந்த மோகத்தால் மெய் மறந்தவளாய் இவ்வளவு தூரம் நடந்த பின்னுங்கூட என் வாயை மூடிக்கொண் டிருந்தேன். ஆனுலவனே அஸல் (முதற்றரமான) அற்பன். நானிவ்வளவு தூரம் ஸகித்துக்கொண்டிருந்ததை சொற்பமேனும் உணரவேயில்லை. குடி போதையில் இன்னும் இரண்டு கிண்ணங் கள் உள்ளே விட்டான். அக்காரணத்தால் அவனிடம் மிருந்து நின்ற சொற்ப மரியாதையும் தொலைந்துவிட்டது. எனக்கு அவன் வைத்திருந்த மரியாதை என்பதை முற்றிலும் தன்னிடமிருந்து நீக்கிவிட்டான். நன்றியற்ற இவனுக்கு நன்றி யேது, வெட்கங் கெட்ட அவளுக்கு வெட்கமேது. ஆத்துமாவுக்குத் தக்கபடி தேக த்தின் அமைப்பன்றே. அப்பொழுது என்மனம் தாளந் தப்பி பாடும் பெண்பிள்ளையின் விசாரம் போலிருந்தது. நானே என்னையே கடிந்து கொள்ளலானேன். ஏன் இவ்விடம் வரவேண்டும்; வந்ததற் கேற்ற தண்டனை கிடைத்தது என்று சொல்லிக் கொண்டேன். கடைசியாய் நான் எவ்வளவு மட்டும் சகிப்பேன், எனக்கு கால் முதல் தலைவரையில் நெருப்பு நெருப்பாய் கோபம் பற்றலாயிற்று. கோபத் தீ கொழுந்துவிட்டு எரியலாயிற்று. கடைசியாய் என் கோபத்தை அடக்கிக்கொண்டு "ஆடுவது மாடோ அல்லது மாட் டின் மேலிருக்கும் * சாக்கோ. இக்காட்சி கண்டவர் யார்?" என்று சொல்லிக்கொண்டு வெளிக் கிளம்பினேன்.

* சாக்கு ஆடுவதாகப் புலப்பட்ட போதிலும் மாட்டின் ஆதரவால் சாக்கு ஆடுகின்றது. அது போல அவ்வற்பன் தன் பொருளால் கெட்டான் என்றபடி.

அக்குடியன் அப்பொழுது தன் மனத்தினுள் "நான் அவ்வாறு கோபங்கொண்டு விட்டால் தன்னுடைய ஸ்திதி நாளை என்னமாய் விடும். நான் அவனை எவ்வெண்ணமாய் சிட்சித்து விடலாம் என்று பயமடைந்தான். சுருக்கிச் சொல்ல என்னை கொலை செய்து கொன்றுவிடத் தீர்மானித்தான். அம்முண்டையின் உபதேசத் தால் இவ்வித நிச்சயத்தை அவன் தன் மனத்தில் செய்துகொண்டு கழுத்தில் அங்கவஸ்திரம் போட்டுக்கொண்டு வெகு மரியாதையாய் என் காலில் விழுந்தான். தன் தலை மேலிருந்த பாகையை அகற்றி வெகு வணக்கமாய் தன் குற்றங்களை மன்னிக்கும்படி என்னை வேண் டிக்கொள்ளலானுன். என் மனமோ அவனிடம் முற்றிலும் பதிந் திருந்ததை சொல்லி யிருக்கிறேன் அல்லவா? அவன் எப்படி எல்லாம் இழுக்கலானுனோ அப்படி எல்லாம் திரும்பிற்று. கையில் சிக்கிக்கொண்ட யந்திரப்பிடிபோல எப்படி சுற்றினுனோ அப்படி சுற்றலாயிற்று. அவன் சொல்லுகிறபடி யெல்லாம் செய்யலா னேன். என்னென்னவோ மாயப்பொடி தூவி என்னை மறுபடி உட் காரும்படி செய்தான். அதே பானத்தை மறுபடி இன்னும் இரண்டு மூன்று கிண்ணங்கள் குடித்தான். என்னையும் சொற்பம் குடிக்கும்படி செய்தான். நான் ஏற்கெனவே கோபத்தால் முற்றி லும் மெய்மறந்தவள். குடியும் சொற்பம் சேரவே போதையில் என் புத்தியே என்னை விட்டு ஓடிவிட்டது. சொற்பமேனும் மிகுந்து நிற்கவேயில்லை. அப்பொழுது கல் நெஞ்சனும் நன்றி யற்றவனும், சண்டாளனுமான அப்பாதகன் கத்தியால் என்னை வெட்டினுன். முற்றிலும் என்னை கொன்று விட்டதாகவே கருதி னுன். எப்பொழுது என் கண்களை நான் திறக்கலானேனோ அப் பொழுது "அந்தோ நான் எவ்வண்ணம் செய்தேனோ அவ்வண்ணம் கூலியைப் பெறுகிறேன். ஆனால் இவ்வாறு அநியாயமாய் என்னை கொன்ற தோஷம் உன்னைக் கொல்லாமல் நீ உன்னை காப்பாற்றிக் கொள்ளக்கடவாய். எவனுவது ஒரு கொடியவன் உன்னை இதற் காகப் பிடித்துக் கொல்லாமலிருக்கவேண்டும். என் இரத்தம் ஒருக் கால் உன்னுடையில் ஒட்டியிருக்கலாம். அதை முதலில் அலம்

பிக்கொள். நடந்தது நடந்துவிட்டது. நான் போகின்றேன். நீ யாவது பிழைத்திரு" என்று சொன்னேன்.

அன்றியும் நான் "இந்த இரகஸ்யமான கொலையை ஒருவரிடமும் சொல்லாதே. நானோ என் உயிரைக்கூட உனக்காகவே இழந்து விட்டேன்" என்று சொல்லி, அவனை அப்பொழுதும் ஈசன் வசத்தில் ஒப்பிவைத்து என் கண்களை மூடிவிட்டேன். அதன்மேல் நடந்த விஷயம் எனக்கு ஒன்றும் தெரியாது. நிச்சயமாய் அக் கொலைகாரன் நான் மாண்டதாகவே எண்ணி என்னை அப்பெட்டியில் அடக்கி கோட்டைச் சுவருக்கு வெளியில் கயிறு கட்டிவிட்டான்; அப்பெட்டியைத் தான் நீங்கள் கண்டீர்கள். நானோ ஒருவருக்கும் தீங்கே நினைத்தவளல்ல. ஆனால் இத்துன்பங்கள் என் தலையில் எழுதப்பட்டிருந்தன. அவ்வெழுத்தை யாரால் அழிக்க முடியும்! என் கண்களன்றோ இக்கஷ்டங்களுக் கெல்லாம் காரணம். அழகான புருஷனைப் பார்க்க எனக்கு ஆசை யென்பது யில்லாமலிருந்தால் அவ்வறப்பன் என் கழுத்துக்கு ஒரு சுருக்காய் விளைந்திருக்கமாட்டேன். ஆனால் ஈசன் செய்த மாயை அது உங்களை அவ்விடம் அனுப்பியிருந்தான். நான் மறுபடி உயிர் பெற உங்களையே காரணமாக வைத்தார். இவ்வளவு அவமானங்களையும் பட்டபின் நான் பிழைத்திருக்கிறதே இப்பொழுது எனக்கு வெட்கமாயிருக்கிறது. என்முகத்தை ஒருவருக்கும் காட்டப் பிடிக்கவேயில்லை. ஆனால் நான் என்ன செய்யலாம். நான் மாண்டு போகிறது நமது கைக்குள்ளில்லையே. ஈசன் என்னை ஒரு தடவை கொன்று மறுபடி பிழைக்க வைத்தான்.

என்ன என் தலையில் எழுதியிருக்கின்றார் என்பதை இன்னும் பார்ப்போம். உங்களுடைய சிரமமும் விசுவாசமும் என்னிடம் பரிபூரணமா யிருந்தபடியால் நான் அக்காயங்களிலிருந்து தேறினேன். நீங்களோ உங்களுடைய பிராணனையும் பொருளையும் எனக்காகச் செலவிட்டீர்கள். உங்களிடம் என்னென்ன விருந்தனவோ அவ்வளவையும் மனப்பூர்வமாய் எனக்கு அர்ப்பித்து விட்டீர்கள். அக்காலத்தில் நீங்கள் கையில் பணமில்லாமல் வருந்தியபொழுது அக்கடிதத்தை என் கஜான்ஜியாகிய விதேபகாருக்கு நான் எழுதினேன். அக்கடிதத்தில் நான் க்ஷேமமாயும் சௌக்யமாயும் இன்ன விடத்தி

யிருக்கிறேன் என்றும், என் க்ஷேம சமாசாரத்தை என் தாயிடம் தெரிவிக்கவேண்டும் என்றும் எழுதி யிருந்தேன்.

அக் கஜான்ஜீ உங்கள் வழியாக என் செலவுக்குப் பண மனுப்பினான். நானுங்களை உடையும் ரத்தினமும் வாங்கிவர வியாபாரி யுஸூப் கடைக் கனுப்பிய பொழுது என் கருத் தென்னவெனில், பார்த்தவனுடன் எல்லாம் ஒரு நொடியில் நட்பு பண்ணிக் கொள்ளும் அவ்வற்ப புத்தி உங்களை விதேசத்தார் என்று கண்டுகொண்டு தன் வழக்கப்படி உங்களுடன் நட்பு செய்து கொள்ளுவான் என்று நிச்சயித்தே அனுப்பினேன். அன்றியும் அவன் தன் செருக்கால் உங்களை அகத்தியம் விருந்துக் கழைப்பான் என்றும் நிச்சயித்தேன் நான் எண்ணினபடி யெல்லாம் சரியாக பலிததது. நீங்கள் திரும்பி வருவதாக அவனிடம் சொல்லிவிட்டு என்னிடம் வந்து அவ்விடம் நடந்த சங்கதிகளையும் அவன் உங்களை விருந்துக்கு கட்டாயப்படுத்தி அழைத்ததையும சொன்ன பொழுது, அவ்வாறெல்லாம நானுத் தேசித்தபடி நடந்தேறியதற்கு நான் என் உள்ளததில் களிததேன்' ஏனெனில், நீங்கள் அவன் வீட்டுக்குச் சென்று அவனுடன் விருந்து புசித்து, வந்தால் நீங்கள் அவனை எதிர் விருந்துக்கு அவசியம் அழைக்கவேண்டி யிருக்கும். அவனும் அவசியம் வந்து தீர வேண்டுமல்லவா? அதற்காகவே நான் உங்களுக்கு சடுதியில் விடை கொடுத்தனுப்பினேன். நீஙகளும் மூன்று நாள் அவ்விடம் தங்கி விருந்துண்டு விட்டு அவ்வாறு தாமதித்ததற்காக வெட்கி திரும்பி வந்து என்னை மன்னிக்கும்படி வெகுவாய் வேண்டிக் கொண்டபொழுது, உங்கள் மனத்தில் விசாரமில்லாமலிருக்க நானும் என்ன பிசகு, எப்பொழுது அவன் விடை கொடுத்தனுப்பினானோ அப்பொழுது தானே வரலாம். ஆனால் ஒருவன் நமக்கு செய்த நன்றியை நாம் திரும்பச் செய்யாமலிருப்பது வெட்கத்துக்குக் காரணமல்லவா? நீங்கள் இக்கணமே திருமபிப்போய் அவனை அழைத்து வாருங்கள் என்றேன். நீங்களவனை அழைக்கச் சென்றதும் அவனுக்குத் தக்க படி விருந்தளிக்க நமது வீட்டில் ஒருவித ஏற்பாடு மில்லையே, நீங்கள் கூப்பிட்டதும் அவன் கூடவே ஒருக்கால் வந்துவிட்டால் என்ன செய்கிறது என்று கையைப் பிசைந்து நிற்கலானேன். இச்

நாட்டு வழக்கம் வெகுகாலமாய் வழங்கி வருவதொன்று உண்டு. அது என்ன வெனில், வருஷத்தில் எட்டுமாதம் ராஜகாரியததின் நிமித்தம் இந்நாட்டு அரசர் நாடுலாவப்போவது வழக்கம். அதல்லாத காலம் மழைகாலம். அந்த நான்கு மாதங்களிலேயும் ஊரிலேயே யிருப்பார். இவ்விருந்து ஏற்படுத்த உத்தேசித்த காலத்தில் என் தந்தை வெளியிற் சென்று இரண்டொரு மாதங்களாயிருந்தது.

நீங்கள் அவ்வியாபாரியை அழைக்கப் போயிருந்த சமயத்தில் வெகு நிர்ப்பாக்கிய சாலியாகிய என்னுடைய ஸமாசாரத்தை விதிபகார் என் தயாரிடம் தெரிவித்தான். நானும் வெகு வெட்கமாய் முடிந்த என் குற்றத்தை என் தாயாரிடம் சென்று ஒன்றையும் ஒளிக்காமல் தெரிவித்தேன். அவள் தாயின் அன்பாலும், புத்தி சாலித்தனத்தாலும் நான் காணமல் போய்விட்ட விஷயத்தை எவ்வளவோ சிரமப்பட்டு ஒருவருக்கும் தெரியாமல் மறைத்து வைத்திருந்த போதிலும் என்னைக் கண்டதும் "இவைகளின் முடிவு என்னவாமோ ஈசன் தான் அறியவேண்டும்" என்றாள். இன்னும் என் நடத்தையை வெளிப்படுத்துவது இப்பொழுது நியாயமில்லை என்று நினைத்து என் குற்றங்களை எல்லாம் தன் மனத்தினுள் பதுக்கி ஒளித்துவைத்துக் கொண்டாள். ஆனால் அவள் என்னை எப்பொழுதும் தேடிக் கொண்டிருந்தாள். என்னை அவள் கண்டதும் என் சங்கதியை முற்றிலும் கேட்டதும் அவள் கண்களில் நீர் ததும்ப பின்வருமாறு கட்டளை யிடலானாள் :—ஓ நிர்ப்பாக்கியமே! நீ வேண்டுமென்று எல்லா மறிந்தும் இவ்விராஜ குலத்தின் மரியாதையையும் பெயரையும் பாழாக்கிவிட்டாய், அந்தோ! நீயும் உன் பிராணனைவிட்டிருந்தால் எவ்வளவோ மரியாதையாக விருக்குமன்றோ? உனக்குப் பதிலாக நான் ஒரு கல்லைப் பெற்றிருந்தால் இவ்வாறு பரிதபிக்க மாட்டேன். இப்பொழுதாவது ஈசனை வணங்கி மன்னிப்பைக் கேள். உன் தலையில் எழுதியிருந்த படி நடந்தேறிற்று. இன்னும் நீ என்ன செய்யப்போகின்றாய். உயிர் பிழைத்திருக்க உத்தேசமா? அல்லது மாண்டுபோகவா"

என் றிவ்வாறு என் தாய் சொன்னதும் நான் என் தாயிடம் என் தலையில் அவ்வளவு அவமானமும் கஷ்டமும் பட்டுக்கொண்டு

பிழைத் திருக்கவேண்டும் என்று எழுதியிருந்த தென்றும், உயி
போயிருந்தாலும் நலமாகத்தா னிருக்கும் என்றும், நான் கொடிய
வளாய் விட்டேன் என்றாலும் என் தாய், தந்தையருக்கு அவ்வளவு
அவமான முண்டாக்கும் காரியம் நான் செய்யவில்லை என்றுஞ்
சொன்னேன்.

இப்பொழுது எனக்கு இருக்கும் வருத்தம் எல்லாம் அவ்விரு
பதர்களிடமும் நான் அவர்களிடம் பழிக்குப்பழி தீர்த்துக்கொள்ள
வேண்டும். அவ்விருவரும் என்னை கொன்றுவிட்டதாக எண்ணிக்
கொண்டு தங்கள் சந்தோஷத்தில் மூழ்கி யிருப்பது என் மனத்தில்
வருத்தத்தை உண்டாக்குகின்றது. நான் தனியாக ஒன்றும் செய்ய
முடியாதவளா யிருக்கின்றேன். அம்மா உங்களிடமிருந்து ஒ
உபகாரம் வேண்டுகின்றேன்.

அவ்விருவரையும் விருந்துக் கழைத்திருக்கின்றேன். என்
வீட்டில் அரண்மனை பரிசாகரன் வந்து விருந்துக்கு வேண்டியவை
களை இப்பொழுது சித்தப்படுத்தவேண்டும். நானவ்விருவரையும்
விருந்துக் கழைத்து அவர்கள் செய்த வேலைக்குத் தக்க கூலி அவ
களுக்குக் கொடுத்து என் பழியைத் தீர்த்துக்கொள்ள வேண்
டும். எவ்வாறவன் தன் கையை ஓங்கி என் தேகத்தை காயப
பண்ணினனே அவ்வாறு நானும் அவ்விருவரையும் துண்டு துண்
டாய் வெட்ட வேண்டும். அப்பொழுதுதான் என் உள்ளங் குளி
ரும். அது முடியாதவரையில் என் கோபத்தீ என்னிடம் எரிந்து
கொண்டே யிருந்து என்னை நீறாக்கி விடும். இதைக் கேட்டது
என் தாய் என்னைப் பெற்றெடுத்த ஆசையால் என்னிடம் மன
மிரங்கி என் குற்றத்தை தன்னுள்ளத்திலேயே மறைத்து எக்கோஜ
எனக்கு மிக வேண்டியவனாக விருந்தானே அவனிடம் அவ்விரு
துக்கு வேண்டிய எல்லா ஸாமான்களையும் ஒப்பிவைத்து எல்லாவி
ஏற்பாடுகளையும் நிறைவேற்றிக் கொள்ள கட்டளையிட்டாள். அ
காரணத்தால் எல்லா வேலைக்காரர்களும் வந்து அவரவர் ஸ்தான
தில் காத்திருக்கலானார்கள். சாயங்காலத்தில் நீங்கள் அம்மாண்
போனவனை அழைத்து வந்தீர்கள். எனக்கோ அப்பட்டி முன்னை
யும் வரவேண்டும் என்ற அவசியமிருந்தது.

அதற்காகத் தான் நான் ..... அப்பொழுது அவ்வளவு வேண்டிக்கொண்டேன். அவளும் வரவே, சபை முழுமையும் குடி ஒன்றே பலத்திருந்தது. அவ்விருவரும் சாராயம் குடித்துக் குடித்துப் புத்தி கெட்டு மயங்கி விழலானார்கள். நீங்களும் சக வாஸ தோஷத்தால் குணம் மாறி குடித்து பிணம்போல் கீழே விழுந்து தூங்கலானீர்கள். அப்பொழுது நான் (ஷிலமாலினி) என்ற கொலைக்காரியைக் கூப்பிட்டு அவ்விருவருடைய தலைகளை வெட்டி விடும்படி கட்டளை யிட்டேன். அவளும் கத்தியை உருவி நான் சொன்ன க்ஷணத்தில் அவர்களுடைய தலைகளை வெட்டி அவர்களுடைய ரத்தத்தை அவர்களுடைய முண்டத்தின் மேல் பூசினாள். நான் உங்கள் மேல் கோபித்ததற்குக் காரணம் என்ன வெனில், நான் உங்களுக்கு அவர்களை அழைத்து வந்து விருந்திட மட்டும் சொல்லியிருந்தேனே யல்லாது அவர்களுடன் சொற்ப நாள் பழகிவிட்ட காரணத்தால் அவர்களுடன் உட்கார்ந்து பானம் பண்ண ஒருநாளும் சொல்லவில்லை. ஆகையால் நீங்கள் செய்த குற்றம் எனக்கு சொற்ப மேனும் பிடிக்காமற் போயிற்று. ஏனெ னில், நீங்களே குடித்துக் குடித்து புத்தி தப்பிப் போவீர்களே யானால், எவ்வண்ணம் நான் உங்களுடைய உதவியை எதிர்பார்க்க முடியும். ஆனால் நீங்கள் எனக்குச் செய்திருக்கின்ற உபகாரம் என் கழுத்தைச் சுற்றி ஹாரமாய் தொங்குகின்றதன்றோ. ஆகை யால் தாங்கள் என்ன குற்றஞ் செய்த போதிலும் நான் உங்களை மன்னிக்க வேண்டியவளல்லவா. நான் இப்பொழுது என் சரித்தி ரம் முழுமையும் முதல் முதல் கடைசி வரையில் சொல்லியாய் விட்டது. இனி மேலாங்கூட உங்கள் உள்ளத்தில் என்னிடம் கேட்டறிந்து கொள்ளவேண்டிய ரகஸியங்கள் இருக்கின்றனவா. என்ன ? நான் எவ்வண்ணம் நீங்கள் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் இடங்கொடுத்து தாாது இஷ்டப்படி எல்லாம் சொல்லி விட்டேனோ அவ்வண்ணம் நீங்களும் நானிப்பொழுது கேட்டுக்கொள்கிறபடி செய்யவேண்டும். நான் உபதேசிக்கின்றது என்னவெனில், இனி உங்களுக்கும் எனக்கும் இப்பட்டணத்தி லிருப்பது நன்மையே யில்லை. இந்த நிமிஷம் முதல் நீங்கள் என் எஜமான்.

ஓ ஈசனடியார்களே! அவ்விராஜ குமாரத்தி இவ்வாறு சொல்லிவிட்டு வாயை மூடிக்கொண்டாள். நானோ என் மனத்தா லும் பிராணனாலும் அவள் கட்டளை ஒன்றையே எல்லாவற்றிற்கும் மேலானதாய்க் கருதி யிருந்தேன். அன்றியும் அவள் மேல் ஆசை என்ற வலையில் சிக்கினவனாக விருந்தேன். ஆகையால் அவள் சொல்லி நின்றதும் நான் "நீ என்ன விதமாய் கட்டளையிடுகின்றாயோ அதுதான் என் உள்ளத்தில் எல்லாவற்றிற்கும் மேலான கட்டளை யாகும். சொற்பமேனும் முன் பின் யோசிக்காமல் நான் அக்கட்ட ளையை நிறைவேற்றி வைக்க ஸித்தமா யிருக்கின்றேன்" என்று மறுமொழி சொன்னேன். நான் அவளுக்கு அடங்கி நடக்கப் பட்டவன்; அவளுடைய வேலைக்காரன் என்பதை அவ்விராஜ குமாரத்தி அறிந்துகொண்டதும், அரசருடைய லாயத்தி லிருந்து வேகத்தில் வாயுபகவானுடன் போட்டி போடும் இரண்டு அசுவ ரத்தினங்களை வரவழைத்து ஸித்தமாக வைக்கும்படி என்னைப் பார்த்துக் கட்டளை யிட்டாள். நானவ்வண்ணமே அரசருடைய லாயத்துக்குச் சென்று நல்ல ஜாதிக் குதிரைகள் இரண்டைச் சோதித் தெடுத்து அவைகளுக்கு ஜேணம் முதலியவைகள் கட்டி ஸித்தப்படுத்தி வைத்துவிட்டேன். பொழுது விடிய சொற்பம் இரவு மிதந்திருந்த வேளையில் அவ்விராஜ குமாரத்தி புருஷன் உடை உடுத்து ஐவகை ஆயுதங்கள் கட்டிக்கொண்டு ஒரு குதிரையி லேறி பிரயாணமானாள். நானும் எல்லாவித ஆயுதங்களையும் எடுத் துக்கொண்டு மற்றொரு குதிரையின் மேலேறி அவள் பின்னர் அதே வழியாய்ப் பிரயாணமானேன்.

இரவு முற்றிலும் கழிந்து பொழுது விடியும்பொழுது நாங் கள் ஓர் ஏரியின் கரை சேர்ந்தோம். அவ்விடத்தில் குதிரைகளி னின்று நாங்கள் கீழே யிறங்கி முகங்களையும் கைகளையும் கழுவிக் கொண்டு அவஸர அவஸரமாய் சொற்பம் காலை போஜனம் செய்து மறுபடி குதிரையேறி பிரயாணமானோம். அடிக்கடி அவ்விராஜ குமாரத்தி என்னுடன் "நான் உமக்காக வெட்கம், மானம், ஊர் ஆஸ்தி, தாய் தந்தை இவ்வளவையும் துறந்தேன். ஆகையால் அந்நன்றியற்ற பாதகனைப் போல் நீங்கள் என்னிடம் நடந்து கொள்ளாமலிருக்கவேண்டுமென்று ஈசனைப் பிரார்த்திக்கின்றேன்

என்பாள். சில வேளை நான் வழி தொலைய பல விஷயங்களைப் பற்றிப் பேசுவேன். சில வேளை அவள் கேள்விகளுக்கும் ஸந்தேகங்களுக்கும் அவளை நோக்கி "பாவாய், மானிடர்கள் எல்லாரும் ஒன்று போலன்று. அப்பாதகன் நல்ல வம்சத்தில் பிறந்தவனாக இருக்கமாட்டான். ஆகையாற்றான் அக்கொடிய காரியஞ் செய்தான். நானோ உனக்காக என் பிராணனையும் பொருளையும் கொடுத்திருக்கின்றேன். நீயும் என்னை எல்லாவிதத்திலும் கௌரவப்படுத்தி மேலானவனுக்கினாய். நானோ இப்பொழுது விலைக்கு வாங்கப் படாமலே உனக்கு அடிமையாய் விட்டேன். நீ என் தேகத்தின் தோலையே செருப்பாகத் தைத்து உன் பாதங்களுக்குப் போட்டுக் கொண்டாலும் நான் தடுக்க மாட்டேன்" என்றேன். இவ்வாறான ஸம்பாஷணைகள் எங்களிருவருக்கும் நடந்து கொண்டிருக்கும். இரவும் பகலும் நாங்கள் வழி நடந்து கொண்டேயிருந்தோம். களைத்துப்போன போதெல்லாம் நாங்கள் களைத்த விடத்தில் குதிரையைவிட்டுக் கீழே யிறங்கி அவ்விடம் காட்டில் கிடைக்கும் பிராணியையோ பக்ஷியையோ வேட்டையாடி விதிப்படி அதைக்கொண்டு அத்துடன் உப்பு கலந்து சிக்கி முக்கி கல் தட்டி தீ மூட்டி அம்மாமிசத்தை யதில் சுட்டுப் புசிப்போம். அச்சமயத்தில் குதிரைகளை மேய்விடுவோம் அவைகளும் வாய் நிரம்ப புல்லும் தழையும் மேய்ந்து தங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ளும்.

இவ்வாறு வழி நடந்து ஒரு நாள் நாங்கள் ஒரு பெரும் மைதானத்தில் வந்து சேர்ந்தோம். கண்ணுக்கு எட்டிய மட்டும் அவ்விடம் ஒரு வீடாவது மனுஷ்யன் அடையாளமாவது விளங்கவே யில்லை. அப்பொழுது கூட அவ் விராஜ குமாரத்தி என் பக்கமே யிருந்தபடியால் பகல் உற்சவதினமாயும் இரவு இஷிபோராத் என்ற இரவுபோல் குதூகல இரவாயும் எனக்குத் தோன்றிற்று. இச்சமத்தரையில் நாங்கள் போகப் போக எங்கள் முன் ஒரு பெரிய ஆறு குறுக்கிட்டது. அதைப் பார்த்த மாத்திரத்தில் பார்ப்பவன் உள்ளம் உருகி நீராய்ப் போய்விடும் போல் அவ்வளவு பயங்கரமாய் அது விளங்கிற்று. அதன் கரை சேர்ந்து அதைக் கண்ணுற்றதும் கண்ணுக் கெட்டின வரையில் ஒரே தண்ணீராக அது காணப்பட்டதே யன்றி அக்கரையாவது மத்தியில்

கிட்டாவது ஒன்றும் தெரியவில்லை. அதைத் தாண்ட வழி யொன்றும் ஏற்படவில்லை. ஜகதீசா! இச்சமுத்திரத்தைத் தாண்டி எவ்வாறு அக்கரை சேரப் போகிறோம் என்று யோசித்துக்கொண்டு அவ்விடத்திலேயே நாங்கள் பிரமித்து நிற்க லானோம். கடைசியாய் என் புத்தியில் இவ்விடம் இராஜ குமாரத்தியை விட்டு விட்டு நான் படகு கிடகு ஏதாவது இதைத் தாண்டத் தேட வேண்டும் என்று தோன்றிற்று. எனக்கு ஏதாவது இவ் வாற்றைத் தாண்ட கிட்டுகின்ற வரையில் அங்கு ராஜ குமாரத்தி இளைப்பாறலாம் என்று தோன்றிற்று. உடனே நான் அவளைப் பார்த்து "ஏ இராஜ குமாரத்தி! உத்தரவானால் நான் இவ்வாற்றை கடக்க ஏதாவது துறை அல்லது படவு உண்டாவென்று பார்த்து வரு கின்றேன்" என்றேன். அதற்கு அவள் "நானோமிக்க களைத்து விட் டேன். பசியும் தாகமும் வெகுவாய் மேலிட்ட வளா யிருக்கின் றேன். நீங்கள் இவ்வாற்றைக் கடக்க துறை முதலியவைகளை அறிந்து வருகின்ற வரையில் நானிவ்விடத்தில் சொற்பம் இளைப் பாறுகின்றேன்" என்றாள்.

அவ்விடத்தில் ஓர் பெரிய ஆலமர மிருந்தது. அது குடை விழ்த்திருந்தது எப்படி யென்றால் அதன் கீழ் ஓர் ஆயிரம் வீரர்கள் தங்கள் குதிரைகளுடன் வந்து இறங்கினாலும் அவர்கள் வெய்ய லுக்கும் மழைக்கும் அதன் கீழ்சௌக்கியமாய்தங்கி யிருக்கலாம். அவ்விடம் அவளை உட்கார வைத்து விட்டு நான் துறைதேடச் சென்றேன். எவ்விடத்திலாவது மனுஷ்யனுடைய காலடியின் அடையாளம் அங்குண்டா வென்று நாலா பக்கங்களிலேயும் சோதித் துப் பார்த்தேன். எவ்வளவோ அலைந்து பார்த்தேன். ஒன்றும் கிட்டவேயில்லை. கடைசியாய் மனம் விட்டவனாய் அங்கிருந்து திரும்பி வந்தேன். அப்பெண்ணரசியை நான் விட்டவிடத்தில் நான் பார்க்கவில்லை. அப்பொழுது என் மனத்தின் ஸ்திதியை நான் எவ்வாறு வருணிக்க முடியும். என் புத்தியே என்னை விட்டு ஓடிற்று. நான் பைத்தியக்காரனாக மாறினேன். ஒரு சமயம் அம்மரத்தின் மீதேறி ஒவ்வொரு கிளையையும் ஒவ் வொரு இலையையும் பரிசோதித்துப் பார்ப்பேன். மரத்தின் வேரை

ந்தபடியே கைகளை நழுவ விட்டு பூமியில் விழுந்து மூர்ச்சை போய்க் கிடப்பேன். சில வேளை அம்மரத்தின் அடியை பிரதக்ஷணம் பண்ணுவேன். சில சமயத்தில் எனக்கு வந்த கஷ்டத்துக்காக கோ வென்று வாய் விட்டலறிப் புலம்புவேன். சிற்சில வேளை மேற்கி லிருந்து கிழக்கே ஓடுவேன். சில வேளை வடக்கி லிருந்து தெற்கே திரும்பி ஓடி வருவேன். சுருக்கிச் சொல்ல, நான் ஓரிடம் விடா மற் தேடினேன். என்ன தேடினாலும் நானிழந்து விட்ட அவ்விலை யற்ற மாணிக்கத்தின் அடையாளத்தைக் கூட நான் கண்டு பிடிக்க முடியவில்லை. அவ்விடம் இனி நான் செய்ய வேண்டியது ஒன்று மில்லை என்று முடிந்ததும், நான் கதறி என் தலையில் மண்ணைவாரி இறைத்துக் கொண்டு வேறு இடங்களில் அவளைத் தேட நினைத் தேன்.

ஒரு வேளை ஏதோ ஜின் என்ற பிசாசு இவளை எடுத்துக் கொண்டு போய் என் மனதில் இப்புண்ணை உண்டாக்கிற்றோ என்று நினைத்து தயங்குவேன். மற்றொரு வேளை எங்கள் பின்னால் இவ் வூரிலிருந்து யாராவது தொடர்ந்து வந்து இவள் தனியா யிருக்கக் கண்டு தமஷ்க் நகரத்துக்குத் திரும்பும் படி உபதேசித்து அழைத் துப் போய் விட்டாரோ என்று ஏங்குவேன். இச்சிந்தையால் நான் ஏங்கி ஏங்கி எனது அணிமணிகளை கிழித்தெறிந்தேன். நக்ன சன்னியாசியாய் ஷாம் தேசம் முற்றிலும் இரவும் பகலும் அலைந்து திரிந்து அவளைத் தேடலானேன். பகலெல்லாம் தேடித் தேடி இருக்கு மிடத்தில் படுப்பேன், இவ்வுலகம் முழுமையும் அலைந் தேன். அப்பொழுது கூட என் ராஜ குமாரத்தியின் பெயரை யாவது அடையாளத்தையாவது ஒருவரிட மிருந்தாவது நான் கேட்கவில்லை. அவள் அவ்வண்ணம் மறைந்த காரணம் எனக்கு விளங்கவேயில்லை. அப்பொழுது என் மனத்திலென்ன தோன்றிற் றென்றால், எப்பொழுது என் பிராணநாயகியின் அடையாளங் கூட எனக்குத் தெரியாமற் போயிற்றோ, அப்பொழுது இப்பாழும் பிரா ணனைற் றுன் என்ன உபயோகம் என்று நான் உயிரை வெறுக்க லானேன். ஓர் காட்டில் உயரமான மலை யொன்றைக் கண்டேன், அதின் மேல் நான் ஏறினேன். அங்கிருந்து தலையுங் கீழுமாக விழுந்து என்பிராணனை விட நான் நிச்சயித்தேன்; கற்களின் மேல்

மோதி என் தலையைத் துண்டு துண்டாக நான் உடைத்து விட்டிடேனேயானால் என் கஷ்டமான வாழ்க்கை ஒழியும் என்றும் என்னுடைய ஆத்மா துக்கத்தை விட்டு விடுபடும் என்றும் கருதலானேன்.

என் மனத்தில் இவ்வுறுதியை ஏற்படுத்திக் கொண்டு குதித்து விடுவோம் என்று சொன்னேன். அவ்வாறு குதிக்க வேண்டுமென்றே என் காலைத் தூக்கி விட்டேன். அவ்வளவு தான் எனக்குத் தெரியும். அப்பொழுது யாரோ ஒருவர் என் கையை கெட்டியாய்ப் பற்றிக் கொண்டார். என் புத்தி என் ஸ்வாதீனத்துக்கு வந்ததும் நான் திரும்பிப் பார்த்தேன். அப்பொழுது பச்சை உடுப்பு அணிந்து குதிரை மீதேறி உட்கார்ந்து தன் முகத்தை மட்டும் ஓர் யவனிகையால் மறைத்து நின்ற ஒருவர் என்னைப் பார்த்து "யாது காரணத்தால் நீ உன் பிராணனை மாய்த்துக் கொள்ளுகின்றாய்; ஈசன் கருணையில் நம்பிக்கை யில்லாமலிருப்பது பதிதகள் குணம். எது வரையில் மூச்சுக் காற்று நம்மிட மிருக்கின்றதோ அது வரையில் நமது கஷ்டம் விடியும் என்ற நம்பிக்கையுமிருக்க வேண்டும். இன்னும் சொற்ப நாளில் ரூம் தேசத்தில் உம்மைப் போல அவஸ்தைப்பட்டவரும், உம்மைப் போலவே இவ்வண்ணம் துக்கப்பட்டவர்களும், உம்மைப் போலவே இதே சங்கடத்தில் சிக்கிக்கொண்டிருக்கின்றவர்களுமான மூன்று பக்கிரிகள் உம்முடன் சேருவார்கள். அவர்கள் தரிசனம் உமக்குண்டாகும். அந்நாட்டு மன்னவன் பெயர் ஆஸாத்பக்த, அவரும் பெரும் சங்கடத்தில் விழுந்திருக்கின்றார். அவர் உம்மையும் அம்மூன்று பக்கிரிகளையும் பார்க்கும் பொழுது உங்களுள் ஒவ்வொருவனுடைய இஷ்டமும் மனோரதமும் முற்றிலும் கைகூடும்" என்றார்.

நான் அவர் பாதம் வைத்திருந்த நிலையைப் பற்றி அவர் பாதங்களை முத்தமிட்டேன். ஓ! தேவதூதா நீர் சொன்ன சொற்பச் சொற்கள் துக்கப்பட்டிருந்த என் மனத்தை முற்றிலும் தேற்றி வைத்தன. ஆனால் ஈசனுக்காகவே தயை கூர்ந்து நீங்கள் யார் என்பதையும் உங்கள் பெயரையும் வாய் மலர்ந்து வெளியிடுங்கள் என்றேன். அதற்கு அவர் "என் பெயர் முர்தஸி அலி; ஆபத்பாந்தவர் என்பார்கள். என் வேலை இது தான். எவனொருவன் கஷ்டத்திலாவது ஸங்கடத்திலாவது விழுந்து விடுகின்றானோ அவனுக்கும்

கை கொடுத்து காப்பாற்ற நான் தோன்றுவேன்" என்று சொல்லிக் கொண்டே அவர் என் பார்வையிலிருந்து மறைந்து விட்டார். இப்பக்ஷியாகிய நான் ஆபத்பாந்தவராகிய என் குரு எனக்குத் தெரிவித்த ஸந்தோஷ ஸமாசாரத்தால் உஸ்துன் துனிபா (Constantinople) நகருக்கேக உடனே நிச்சயித்தேன். என் தலையில் என்னென்ன கஷ்டங்கள் எழுதப்பட்டிருந்தனவோ அவ்வளவையும் வழியில் அநுபவித்து விட்டு கடைசியாய் என் ராஜ குமாரத்தியை இவ்விடம் காணலாம் என்று நம்பி வந்திருக்கின்றேன். ஈசன் அருள் என்னை இவ்விடம் கொண்டு வந்து சேர்த்தது. என் நற்பாக்கியத்தால் உங்கள் ஸந்நிதானத்தை அடைந்து விட்டேன். நாம் நால்வரும் ஸந்திப்போம் என்று ஈசனுர் தூதன் கொடுத்த வாக்கு தத்தம் நிறைவேறிற்று. நாம் ஒருங்கு சேர்ந்து ஸம்பாஷித்து ஆனந்தங்கொண்டோம். இனி நமக்கு நடக்க வேண்டியது மன்னவர் ஆலயத்தை தர்சித்து அவர் நம்மை அறிந்து கொள்ள வேண்டியது தான் மிகுந்து நிற்கின்றது.

இதுவும் நடந்த பிறகு நாம் ஐவரும் நமது மனோரதம் பரிபூரணமாவதை நிச்சயமாகக் காண்போம். நீங்களும் ஈசனைத் துதியும்; அவ்வாறுருக (ததாஸ்து) என்று ஆசீர் மொழி கூறுங்கள். அடியார்களே இக்குழப்பங் கொண்ட தேசசஞ்சாரியின் கதையிது. அதை நான் ஒன்றும் ஒளிக்காமல் உங்கள் முன்பாகச் சொல்லி விட்டேன்; இனி நான் என் துக்கமும் கஷ்டமும் எப்பொழுது நீங்கும். என் ராஜ கன்னியை நான் திரும்பப் பெற்று ஸந்தோஷத்தையும் சுகத்தையும் கைப்பற்றப் போகிறேன் என்று எதிர் பார்த்து நிற்கின்றேன் என்று சொல்லி முடித்தான்.

ஆலயத்துக்கு ஒரு மூலையில் அரசன் பதுங்கி மௌனியமாய் உட்கார்ந்து மூதற் பக்ஷி கதை முழுமையும் கேட்டு சந்தோஷப்பட்டானுன். இரண்டாவது பக்ஷியின் கதையைக் கேட்க வித்தமாயிருந்தான்.

## இரண்டாவது பக்கிரியின் கதை.

இரண்டாவது பக்கிரி தனது கதையை சொல்லும் முறை வந்ததும் அவன் முழுந்தாளிட்டு உட்கார்ந்து பின் வருமாறு பேசலானான்:—

ஆ நண்பர்களே, இப் பக்கிரியின் கதையை சற்று கேளுங்கள். நான் முதல் முதல் கடைசி வரையில் சொல்லுகின்றேன்; சற்று கவனித்துக் கேளுங்கள். எனக்கு வந்த சங்கடத்துக்கு மருந்து கொடுக்கும் வைத்தியன் ஒருவனையும் நான் காணவில்லை. என் துக்கமோ மருந்தினால் தீராத துக்கம். அதைச் சற்று செவியுற்றுக் கேளுங்கள்.

காவித்துணி உடுத்த துறவிகாள், இப்பக்கிரியாகிய நான் பார்ஸ் தேசத்து ராஜகுமாரன். ஒவ்வொரு சாஸ்திரத்திலும் தேர்ந்த வல்லவர்கள் அத் தேசத்தில் பிறந்திருக்கிறார்களாகையால், இஸ்பகான் என்ற பட்டணத்துக்கு "பூமியில் பாதி" என்ற கீர்த்தி யுண்டாயிருப்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஸப்த லோகங்களுக்குள் பார்ஸ் தேசத்துக்கு ஸமானமான தேசம் கிடையவே கிடையாது. அத்தேசத்தை பாதுகாக்கும் கிரஹம் சூரியன். எல்லா கிரஹங்களுக்குள்ளும் அது தான் மேலான கிரஹம்; அத் தேசத்தின் நீரும் காற்றும் எப்பொழுதும் உள்ளத்திற்கு ஆனந்தத்தையே விளைவிக்கும் அத்தேசத்துக் குடிகளோ நன்றாகக் கற்றறிந்த விசாலமான மனமமைந்தவர்கள்; நாகரீகத்துக்கு வெகு பெயர் பெற்றவர்கள். அத்தேசத்து அரசராகிய என் தந்தை எனக்கு ராஜ்ஜிய பரிபாலனத்தின் சட்டங்களையும் வரம்புகளையும் கற்றுக் கொடுக்க ஒவ்வொரு சாஸ்திரத்திலும் ஒவ்வொரு வித்தையிலும் வெகு தேர்ந்தவர்களான பண்டிதர்களைப்பொறுக்கி எடுத்து எனக்கு உபாத்தியாயர்களாக அவர்களை எனது சிறு பிராயம் முதல் நியமித்திருந்தார். ஆகையால் ஒவ்வொரு வித்தையிலும் நன்றாகக் கற்பிக்கப் பட்டவனாய் நான் எல்லா வித்தைகளையும் அறிந்தவன் என்று சொற்பம் சொல்லலாம், ஈசனருளால் எனக்கு வயது பதி

நான்கு ஆயிருந்தபொழுதே நான் எல்லா வித்தைகளையும் கற்றுக் கொண்டது மட்டுமல்லாமல் மரியாதையாக ஸம்பாஷித்தல், நாஸூக்காய் நடந்துகொள்ளுதல் இன்னும் அரசனாக வேண்டிய ஒருவன் அறிந்துகொள்ள வேண்டியவைகள் இவைகள் எல்லாவற்றையும் கற்றறிந்து கொண்டேன். எனக்கு ஸந்தோஷம் விளைவிப்பது எதாக விருந்ததென்றால் தேர்ந்த வித்வத் ஸமூகத்தில் சேர்ந்து பழகுவது ஒன்றேதான். இரவு பகலாய் ஒவ்வொரு தேசத்து சரித்திரத்தைப் படிப்பதும் பிரஸித்த ராஜகுமாரர்கள், கீர்த்தி பெற்ற உத்தமர்கள் இவர்கள் சரித்திரத்தை வாசிப்பதும் எனக்கு எப்பொழுதும் வேலையாக விருந்தது.

ஒரு நாள் என்னுடன் படித்த ஓர் வித்வானான தோழன், தேச சரித்திர சாஸ்திரத்தில் தேர்ந்தவன், உலகத்தை நன்றாக பார்த்தறிந்தவன் என்னை நோக்கி "மனிதனுக்கு ஈசன் கொடுத்திருக்கின்ற ஆயுள் என்பதில் நம்பிக்கையே யில்லாமலிருந்த போதிலும் சில மனிதர்களிடம் வெகு உத்தம குணங்களிருக்கின்ற காரணத்தால் அவர்களுடைய பெயரும் கீர்த்தியும் இவ்வுலக மிருக்கும் வரையில் வழங்கி வருகின்றது" என்றான். அதற்கு நான் இரண்டொருவரை குறித்தெடுத்துச் சொன்னால் நான் அவர்கள் சரித்திரத்தைக் கேட்டு கூடிய மட்டும் அவ்வண்ணம் நடந்து கொள்ள முயலுவேன் என்றேன். அப்பொழுது அவன் ஹாதிம்தாயி என்பவருடைய சரித்திரத்தில் சில விஷயங்களைப்பற்றி பின் வருமாறு சொல்லலானான். ஹாதிம் அரசாண்ட நாளில் அரப் தேசத்தில் நௌபல் என்றொரு பாத்ஷா அரசாண்டு வந்தான். ஹாதிம் புகழைக்கேட்டு அவன் சகிக்காதவனாய் அவனிடம் நௌபல் பகைமை கொண்டாடலானான். பல போர்வீரர்களைத் திரட்டிக் கொண்டு அவன் ஹாதிம் மேல் போரிடச் சென்றான். ஹாதிமோ ஈசனுக்கு அஞ்சினவன், வெகு தயாளு. "நானும் சண்டைக்கு சித்தமானால் ஈசன் படைத்த பிரஜைகள் அநியாயமாய் மாண்டு போவார்களே. ரத்த ஆறு அநியாயமாய் ஓடுமே. இந்த அபவாதமும் அவகீர்த்தியும் என் தலையில் விடியுமே என்று ஆலோசித்து தான் மட்டுந் தனியாக தேசத்தைவிட்டு ஓடி காடுசென்று அங்கிருந்த ஒரு மலையின் குகையில் தன்னைப் பதுக்கிக்கொண்டான். ஹாதிம் காணமற் போனான் என்ற ஸமாசாரம் நௌபலுக்கு தெரிந்ததும்

அவன் ஹாதிமுடைய ஆஸ்தி பாஸ்திகளை எல்லாம் கட்டிக்கொண்டதுமல்லாமல் எவனொருவன் ஹாதிமைத் தேடிப் பிடித்துக் கொண்டு வருகின்றானோ அவனுக்கு ராஜபொக்கசத்திலிருந்து ஐநூறு பொன் வெகுமதி கொடுப்பதாகப் பயிரங்கமாய் தண்டோரா போட்டான். இத்தண்டோராவைக் கேட்டதும் அநேகம் பெயர்கள் பணத்தின் ஆசையால் ஹாதிமைத் தேட ஆரம்பித்தார்கள்.

ஒருநாள் ஒரு கிழவன் தனது கிழ மனைவியை சிறு குழந்தைகள் இரண்டு மூன்றையும் தன்னுடன்கூட அழைத்துக்கொண்டு கட்டை வெட்டுவதற்காக அக்குகைக்குச் சமீபமான காட்டிற்குச் சென்றான். அக்குகையிற்றான் ஹாதிம் மறைந்திருந்ததும்; அங்கு அக்கிழவன் கட்டைகளை வெட்டத் தொடங்கினான். அப்பொழுது கிழவி கிழவனைப் பார்த்து நமக்கு மட்டும் நல்ல நாளாக விருந்தால் நாம் எங்கேயாவது ஹாதிமைக் கண்டுபிடிப்போம். அவனைப் பிடித்துக்கொண்டு நௌபல் முன்பாகச் சேர்ப்போம். அப்பொழுது அவன் ஐநூறு விராகன்கள் நமக்குக் கொடுப்பான். அப்பொழுது நாம் ஸுகமாகப் புசிக்கலாம். இந்த துக்கம் நம்மைவிட்டு நீங்கும்'' என்றாள். அதற்குக் கிழவன் "என் கிச்சு பிச்சு என்று கத்துகிறாய். நமது தலையில் எழுதியிருப்பது ஒன்றேதான். நாம் தினந்தோறும் கட்டைகளை வெட்டிப்போட்டு தலைமேல் தூக்கிக்கொண்டு கடைத்தெருவில் போடவேண்டும். அப்பொழுது நமக்கு ரொட்டியும் லவணமும் நிச்சயமாய் கிட்டும். இப்படி செய்துகொண்டிருக்கையில் ஒரு நாள் நம்மை புலி அடித்துக் கொல்லும். நீ உனக்கு விதிக்கப்பட்டிருக்கும் தொழிலைச்செய், எழுந்திரு. நமது கையில் ஹாதிம் அகப்படுவானேன் ? நமக்கு ஏனிவ்வளவு ரூபா பாத்ஷா கொடுக்க வேண்டும்'' என்றான். அதைக் கேட்டு அக்கிழவி ஒரு பெருமூச்சுவிட்டாள். பிறகு ஒன்றும் சொல்லாமல் வாயை மூடிக்கொண்டாள்.

இவ்விருவருக்கும் நடந்த ஸம்பாஷணையை ஹாதிம் கேட்டான். தன்னுயிரைக் காப்பாற்றிக்கொள்ள இவ்வண்ணம் தன்னைத்தான் மறைத்துக்கொள்ளுவது வெகு பயங்காளித் தனமென்றும் குரூரமென்றும் கருதினவனாய் அப்பரம ஏழைகளுடைய மனோ

ரதத்தைக் கைகூட்டிவைப்பது வெகு மேன்மை என்று யோசிக்கலானான். எவனுடைய உள்ளத்தில் தயை என்பதில்லையோ அவன் மனிதனல்ல, மிருகம்; எவனுக்கு மனத்தில் வருத்தம் என்பது தோன்றுகிறதோ யில்லையோ அவன் கசாப்புக்காரன்.

உள்ளத்தில் வருத்தம் தோன்றவேண்டுமென்றே ஈசன் மனிதனைப் படைத்தான். அதில்லாவிடில் தேவர்களுடன் நின்றுவிடலாமல்லவா. தேவர்களைவிட இனி ஈசுவர பக்தி செய்கின்றவர்கள் யார்.

கடைசியாய் ஹாதிமுக்கு இருந்த மனோதைரியம் தான் ஒளித்துக்கொண்டிருப்பது நியாயமில்லை என்று முறையிடலாயிற்று. தன் காதால் ஒருவன் கஷ்டத்தைக் கேட்ட பிறகு அதை அகற்றி வைக்காமலிருப்பது பாவமல்லவா. உடனே அவன் தான் பதுங்கியிருந்த யிடத்தை விட்டு வெளியே வந்து, அக்கிழவனைப் பார்த்து "ஓ நண்பனே, நான் தான் ஹாதிம் என்பவன். என்னைப் பற்றிக் கொண்டு நௌபல் முன்னாற் கொண்டுபோய்விடும். அவர் என்னைக் கண்டதும் எத்தனை ரூபா கொடுப்பதாக நிச்சயித்திருக்கிறாரோ அதை உனக்குக் கொடுப்பார்" என்றான். அதற்கு அக்கிழவன்:— ஆம் நீங்கள் சொல்லுவது உண்மையே; என் ஸ்திதி க்ஷேமமடையும் என்பது திண்ணந்தான். ஆனால், ஜகதீசா, அவன் உம்மை என்ன செய்வானோ தெரியவில்லையே. உம்மை ஒரு கால் கொன்றுவிட்டால் நான் என்ன செய்வேன். ஆகையால் நானிப்பொழுது பணத்தாசைகொண்டு உம்மை ஒரு பொழுதும் பகைவன் கையில் ஒப்பிவைக்கவே மாட்டேன். அப்பொருள் வந்து எனக்கு எத்தனை நாள் உதவப்போகின்றது. நான் ஒரு நாள் மாண்டுதானே போகவேண்டும். அக்காலத்தில் ஈசன் என்னை விசாரிக்கும் பொழுது நான் என்ன பதில் சொல்லுவேன்" என்றான்.

ஹாதிம் எவ்வளவோ வேண்டிக் கொண்டான். "என்னை நௌபலிடம் அவசியம் அழைத்துப் போய்விடும் நான் மனப்பூர்வமாய் வேண்டிக்கொள்ளுகிறேன். என்றென்றைக்கும் என் மனத்திலிருக்கும் ஆசை யென்ன வெனில், என் பிராணனும் என் பொருளும் மற்றவர்களுக்கு உதவினால் நன்மை என்பதுதான்" என்றான். ஆனால் ஹாதிம் என்ன சொல்லியும் அக்கிழவன் ஒப்புக் கொள்ள

வேயில்லை. ஹாதிமைப் பற்றிப் போய் வெகுமதி வாங்குவதை அவன் ஒப்பவேயில்லை. கடைசியில் நம்பிக்கையற்றவனாய் ஹாதிம் "நீர்மட்டும் என்னை இப்பொழுது கூட்டிப் போகாவிட்டால் நானே நேராக அந்த பாத்ஷாவிடம் சென்று இக்கிழவன் என்னை இக்காட்டில் ஒரு மலையின் குகையில் ஒளித்துவைத்தான் என்று சொல்லுகின்றேன்" என்றான். அதைக் கேட்டு அக்கிழவன் சிரித்து "நான் நன்மையை நாடி நிற்க எனக்கு தீமை விளைந்தால் அதற்கு நான் என்ன செய்யக்கூடும். தலை விதி என்று நினைத்துக்கொள்ளுகிறேன்" என்றான். இவர்களிவ்வாறு பேசிக்கொண்டிருந்த பொழுது அங்கு ஜனங்கள் கூடலானார்கள். பெருங்கூட்டம் கூடலாயிற்று. அவர்களுக்கு இவன் தான் ஹாதிம் என்பது தெரிந்துவிட்டது. உடனே அவனைப் பற்றிக்கொண்டார்கள்; அவனை அங்கிருந்து இழுத்துக்கொண்டு போனார்கள். அக்கிழவனும் பெருமூச்சுவிட்டு துக்கப்பட்டுக்கொண்டு அவர்கள் பின்னர் அழுது கொண்டே சென்றான். அவர்கள் எல்லாரும் நௌபல் முன்னர் சென்றதும் "யார் அவனைப் பிடித்துவந்தது" என்று அவன் கேட்டான். ஒரு கெட்டுப்போன கல்நெஞ்சன் "இவ்விதமான காரியம் என்னையன்றி வேறு எவன் செய்து முடிப்பான். இப்புகழ் என் பெயரைச் சேர்ந்தது இதன் த்வஜத்தை நான் ஆகாயத்தில் நாட்டினேன்" என்றான். மற்றொரு ஜம்பக்காரன் "நானிவனை காட்டில் பல நாள் தேடிப்பார்த்தேன். கடைசியாய் இவன் கிட்டினான் இவனை இங்கு பிடித்துக்கொண்டு வந்தேன். ஆகையால் என் சிரமத்தின் மேல் சொற்பம் கண்ணோக்கம் வையுங்கள்; கொடுப்பதாக ஏற்பட்டிருப்பதை எனக்குக் கொடுங்கள்" என்று பிதற்றலானான். இவ்வண்ணம் பணத்தின் பேராசையால் ஒவ்வொருவனும், தானே அக்காரியம் செய்து முடித்ததாகச் சொல்லலானான். அக்கிழவனோ ஒரு மூலையில் தூங்கி நின்று கொண்டு எல்லார் சொன்னதையும் கேட்டு ஹாதிமுக்கு வந்த ஆபத்துக்காக அழுது கொண்டிருந்தான். அங்கிருந்த ஒவ்வொருவனும் தனது தைரியத்தையும் பலசையும் பற்றி சொல்லி முடித்ததும் ஹாதிம் என்பவன் பாத்ஷாவைபார்த்து 'ஐயா உண்மை எது என்று உமக்குத் தெரிய வேண்டுமானால் நான் சொல்லுகின்றேன் கேளுங்கள். அதோ எல்லாருக்கும் முன்பாக தூரத்தில் நிற்கின்றாரே அக்கிழவர்

என்னைப் பிடித்துக் கொண்டவர். தோற்றத்தால் நீங்கள் ஒருவன் யோக்யதையை அறிந்து கொள்ளலாம் என்றால் அவரைக் கூப்பிட்டு விசாரணை செய்யுங்கள், என்னைப் பிடித்துக் கொடுப்பவனுக்கு என்ன கொடுப்பதாக வாக் நிச்சயம் செய்திருக்கின்றீர்களோ அதை நிறைவேற்றி வையுங்கள். இத்தேகத்தின் அவயவங்களுக்குள் நாக்கு வெகு பிரதானம். மனிதன் நாவால் என்ன சொன்னானோ அதைச் செய்ய வேண்டியது அவசியம் இல்லாவிடில் நாக்கு என்பதை ஈசன் மிருகத்துக்குக் கூடக் கொடுத்திருக்கிறார். அப்புறம் மிருகத்துக்கும் மனிதனுக்கும் என்ன வித்தியாசம்.

நௌபல் அப்பொழுது அவ்விறகு வெட்டுவோனைக் கூப்பிட்டு "இவ்விஷயத்தின் உண்மை என்ன, சொல்லு. ஹாதிம் என்பவனை எவன் பிடித்தான்" என்றான். அப்பொழுது அப்பேதமையான கிழவன் அடிமுதல் நுனி வரையில் நடந்ததை நடந்தபடி ஒன்றை விடாமல் சொன்னான். அன்றியுமவன் "எனக்காகவே ஹாதிம் என்பவன் தனக்குத் தானே உங்களிடம் வந்திருக்கிறான்" என்றான். நௌபல் என்பவன் ஹாதிமினுடைய உதார குணத்தைக் கண்டு வியப்புற்று "விந்தை! உமது உதார குணம் உண்மை உமது பிராணனைக்கூட அலட்சியம் பண்ணும்படி செய்தது. எத்தனை பெயர்கள் ஹாதிமைப்பற்றி வந்ததாக பொய் சொல்லியிருந்தார்களோ அவர்கள் கைகளைக் கட்டி வைத்து ஐநூறு விராகனுக்குப் பதிலாக ஐந்நூறு செருப்படி ஒவ்வொருவன் தலையிலுமடிக்கக் கட்டளையிட்டது மல்லாமல் அவர்கள் உயிர் போனாலும் ஸரி அடி என்று உத்தரவிட்டான். உடனே தடதடவென்று அடிகள் விழ ஆரம்பிக்கவே அவர்கள் தலைகள் அக்காரணத்தால் வழுக்கையாயின வென்னலாம். அநியாயமல்லவா பொய் சொல்லுவது; எல்லாப் பாவங்களுக்கும் அது மேலான பாவமன்றோ. அதற்கு சமானமான பாவமாய் வேறொருவித பாவத்தையும் குறிப்பிட முடியாது. ஈசன் எல்லாரையும் இவ்வித பாவத்தில் விழாமல் பாது காப்பாராக; பொய் சொல்லும் குணத்தை ஒரு பொழுதும் கொடுக்காமலிருப்பாராக. அநேகம் பெயர்கள் பொய் சொல்லிப் பிழைப்பதில் பிசகில்லை என்று எண்ணியிருப்பார்கள். கடைசியாய் கண்டு பிடிக்கப்பட்ட பொழுது தக்க தண்டனையை அடைகின்றார்கள்.

கடைசியாய் அவர்கள் எல்லாருக்கும் அவர்கள் யோக்கியதைப் படி. இனும் அதாவது செருப்படி வெகுமதி கொடுத்தனுப்பி விட்டு நௌபால் தன் மனதுக்குள்ளேயே யோசித்துக்கொள்ளலானான். "எவனொருவனிடமிருந்து ஏராளமான ஜனக்கூட்டங்கள் சௌக்கியத்தை அடைகின்றார்களோ, எவனொருவன் அனாதைக்கு தனது பிராணனைக் கூட ஒரு பொருட்டாக எண்ணாமல் கொடுக்கத் துணிந்தானோ, எவனொருவன் ஈசன் வழியிலேயே எப்பொழுதும் நடந்து கொண்டே யிருக்கின்றானோ, அப்பெயர்பட்ட ஹாதிமுடன் பகைமை கொண்டாடுவது மேன்மையுமல்ல மானிடத்தனமுமல்ல' என்று எண்ணி உடனே ஹாதிமின் கைகளைப் பற்றிக் கொண்டு வெகு நட்புடன். மனப்பூர்வமாய் அவனை நோக்கி "ஏன் இவ்வாறிருக்கக் கூடாது. உம்மைப்போல் ஒருவரிருக்கையில் நீங்கள் இவ்வாறான ஸாஹஸ காரியம் அவசியம் செய்திருப்பீர்" என்றான். அதன் பிறகு அவன் வெகு மரியாதையுடன் ஹாதிமைத் தனக்குச் சமீபத்தில் உட்கார வைத்து ஹாதிமுக்கு அவரிடமிருந்து தான் பிடித்துக் கொண்ட கிராமங்கள் பொருள்கள் எல்லாவற்றையும் அப்பொழுதே திருப்பிக் கொடுத்தான். புதிதாய் தயி என்ற நாட்டின் ஆதிபத்தியம் அவனுக்கு நௌபல் கொடுத்தான். தனது கோசத்திலிருந்து ஐநூறு விராகன் அக்கிழவனுக்கு நௌபல் கொடுத்தான். அவனுமவனைத் துதித்துக்கொண்டே போனான்.

நானிந்தப்படி ஹாதிம் கதையை முற்றிலும் கேட்டதும் என் மனத்தினுள் ஓர் வித அபேக்ஷை உதிக்கலாயிற்று. ஹாதிம் என்ன தனது சொற்ப நாட்டுக்குள் ஒரு சிற்றரசனாக விருந்தான். ஏதோ ஒரு பெருந்தன்மையான காரியம் அவன் செய்தபடியால் அவன் புகழ் இன்றைக்குக் கூட தேய்வு படாமல் உலகத்தில் வழங்கி நிற்கின்றது. நானோ ஈசனருளால் இரான் ராஜ்ஜியத்துக்கு முடிய அரசன்; நானிவ்வித நற்பாக்கியத்தை உபயோகிக்காமல் என்னை விட்டு அகற்றி வைப்பேனேயானால் அதைவிடப் பெருந் துக்கம் வேறொன்றுமில்லை. இவ்வுலகத்தில் தயையையும் தாராளத்தையும் விட மேலான குணங்களில்லவேயில்லை. அவைகளை முன்னிட்டுக் கொண்டு இவ்வுலகத்தில் ஒருவன் செய்கின்ற தானங்களை மறு உலகத்தில் அவன் அவசியம் திரும்பப் பெருகின்றான். ஒருவன் ஒரு வித்து ஒன்றினால் அதிலிருந்து எவ்வளவு பலன்களை எடுக்கின்

ருன். என்று இவ்வண்ணம் மனதில் யோசித்துக்கொண்டவுடன் மாளிகை கட்டும் மேஸ்திரியை நான் வரவழைத்து அவனிடம் வெகு சடுதியில் ஊருக்கு வெளியே வெகு உன்னதமும் அகலமு மான நாற்பது வாயிற்படிகளமைந்த அழகான மாளிகை ஒன்று கட்டிவைக்க திட்டஞ் செய்தேன். சொற்ப நாட்களுக்குள் என் மனோரதத்திலிருந்தபடி அதே மாளிகை வெகு அழகாய் கட்டப் பட்டு முடிந்தது. அவ்விடம் போய் நான் உட்கார்ந்து ஒவ்வொரு நிமிஷமும் இரவும் பகலும் ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் ரூபாய்கள் விராகன்கள் இவைகளைக் கொடுத்து வந்தேன். எவன் எந்த ஸமயத்தில் என்ன கேட்பானோ அதை அவனுக்கு அச்சமயத் தில் கொடுக்கலானேன்.

சுருக்கிச் சொல்ல இந்நாற்பது வாயில்கள் வழியாலும் பல ஏழைகள் என்னிடம் தினந்தோறும் வந்து பிச்சை கேட்பார்கள். நானும் அவர்கள் கேட்டதை இல்லை என்று சொல்லாமல் கொடுத்து வந்தேன். இப்படியிருந்த காலத்தில் ஒரு நாள் ஓர் ஆச்சரியம் நடந்தது. ஒரு பக்கிரி முதல் வாயில் வழியாய் வந்தான். பிச்சை என்று கேட்டான். நான் அவனுக்கு ஒரு விராகன் கொடுத்தேன். மறுபடி அவன் இரண்டாவது வாயிலில் வந்தான். இரண்டு விரா கன் பிச்சை கேட்டான்; நான் முதல் வாயில் வழியாக வந்தவன்தா னிவன் என்று மனதுக்குள் அறிந்து கொண்ட போதிலும் மனத் துக்குள்ளேயே அவனை மன்னித்து அவன் கேட்டதைக் கொடுத் தேன். இம்மாதிரி அவன் ஒவ்வொரு வாயில் வழியாகவும் வந்து ஒவ்வொரு விராகன் அதிகமாய்க் கேட்டுப் பெற்றுக் கொண்டான். நானும் தெரியாதவன் போலவே அவன் கேட்டபடி கொடுத்துக் கொண்டே வந்தேன். கடைசியாய் அவன் நாற்பதாவது வாயில் வழியாக வந்து நாற்பது விராகன்கள் பிச்சை கேட்டான். அவ்விராகன்களையும் நான் கொடுத்து விட்டேன். இவ்வளவு பணத் தையும் அவன் பெற்றுக்கொண்டு மறுபடியும் அவன் முதல் வாயில் வழியாக வந்து ஒரு விராகன் பிச்சை கேட்கலானான். அப்பொ ழுது அவன் நடத்தை வெகு பொல்லாத் நடத்தையாக எனக்குப் புலப்பட்டது. நான் உடனே அவனை நோக்கி, "கேள் ஓ! பணத் தாசை கொண்டவனே நீ எவ்வாறு பக்கிரியாவாய். பக்கிர் என்ற சொல்லில் மூன்று எழுத்துகளிருக்கின்றன. அவ்வெழுத்துக்களின்

பொருள் உனக்கு சற்றேனும் விளங்கவே யில்லை. நீ அவைகளின் அருத்தப்படி நடக்க வேண்டிய வனன்றோ" என்றேன். அதற்கு அவன் ஐயா, தயாளுவே, நீங்களே அவ்வெழுத்துகளின் பொருளைச் சொல்லுங்கள் என்றான். அதற்கு நான் பெ என்னும் எழுத்துக்கு பாகா உபவாஸம் என்பது அருத்தம்; ஹாப் என்னும் எழுத்தால் "ஹினு அத்" மன திருப்தி விளங்குகின்றது: ரெ என்னும் எழுத்துக்கு ரியாஸத் அதாவது ஈசுவரனிடம பக்தி. எவனிடம் இம்மூன்று குணங்களின் பேச்சே(வாசனையே) யில்லையோ அவன் பக்கிரி அல்ல. இவ்வளவு பொருள் உனக்கு இன்று கிடைததே இவைகளைக் கொண்டு திருப்தியாய் போஜனம் பண்ணு, பானம் பண்ணு: இவைகள் முடிந்த பின் வந்து பிச்சை கேள்: அப்பொழுது உனக்கு கொடுக்கப்படுவதை வாங்கிப்போ. உனக்குக் கிட்டி யிருக்கும் பிக்ஷா தர்மம் உனக்கு அன்றன்றைக்கு வேண்டியவைகளையும் நீ அடைவதற்காகவே யன்றி நீ பொருள் திரட்டி வைத்துக் கொள்வதற்காகவன்று. அடா பேராசை கொண்டவனே நீ போ. முதல் வாயில் தொடங்கி நாற்பது வாயில் முடிய வந்து ஒரு விராகன் முதல் நாற்பது விராகன்கள் வரை கேட்டாய். ஒன்று முதல் நாற்பது வரையில் (Arithmetical rogression) ரேவடி கணக்கால் கூட்டி எந்தனை விராகன்கள் மொத்தமாயிற்றெனபதைப் பார். இவவளவு கிட்டியும் நீ திருப்தி யடையாமல் துராசையால் மறுபடியும் முதல் வாயிலில் வந்து சேர்ந்தாய். இவ்வளவு பணத்தைச் சேர்த்து நீ என்ன பண்ணப் போகிறாய். பக்கிரி என்பவன் ஒரே நாள் சிந்தை கொள்ளப்பட்டவனன்றோ. மற்றுவது நாள் அவனுக்கு ரொட்டி கொடுக்க எல்லாருக்கும் படி யளக்கும் ஆண்டவன் சிந்தையன்றோ. இனிமேலாவது உன் செய்கையில் சொற்பம் அருவருப்பும் வெட்கமும் உனக்குண்டாகக் கடவதாக: சாந்தியும் துஷ்டியும் உனக்கு உண்டாகக் கடவதாக. இது என்ன பக்கிரித்தனம். எந்தகுரு இவ்வண்ணம் உபதேசித்து உன்னை பக்கிரியாக்கினான் என்றேன்.

நானிவ்வண்ணம் சொன்னதைக்கேட்டதும் அவன் வெகு ஸங்கடப்பட்டவனாய் கோபமீறி என்னிடம் இதுவரைல் பிச்சை வாங்கி மூட்டை கட்டி வைத்திருந்த அவ்வளவு பணத்தையும் பூமியில் வீசி யெறிந்து என்னைப் பார்த்து போதும் ஐயாபோதும்;

இவ்வளவு கடுகடுப்பும் கோபமும் வேண்டவே வேண்டாம். நீர் கொடுத்த அவ்வளவையும் ஜாக்கிரதையாக எடுத்துக் காப்பாற்றி வைத்துக் கொள்ளும்: மறுபடியும் தாதா என்ற பெயரை ஒரு பொழுதும் திரும்பச் சொல்லிக் கொள்ளாதேயும் ஸஹி (தாதா) என்று பெயர் வாங்குவது வெகு சிரமம் தாக்ஷண்யம் என்ற மூட்டையை உம்மால் ஒரு பொழுதும் எடுக்கவே முடியாது. அந்த ஊருக்கு (தாதா என்று பட்டம் பெற) நீங்கள் என்றைய தினம் போய் சேரப் போகிறீர்கள். தெல்லி இன்னும் நிரம்ப தூரமன்றோ! ஸஹி என்னும் பதத்திலும் மூன்று எழுத்துகள் தானிருக்கின்றன. முதல் முதல் அவைகளின் பொருளை நிதானித்து நடந்து கொள்ளும். அதன்மேல் நீர் ஸஹி (அதாவது தாதா) ஆவீர் என்றான். இதைக் கேட்டதும் நான் நடுங்கி விட்டேன்: அவனை நோக்கி ஐயா பெரியவரே இவ்வெழுத்துகளின் அருத்தத்தை எனக்கு சொற்பம் சொல்லுங்கள் என்றேன். அதற்கு அவன் ஸின் என்றால் சமம் பொறுமை; ஹே என்றால் ஈசனிடம் பயம். ஏ என்றால் ஞியாபகம் (யாத்) ஒவ்வொருவனும் தனது பிறப்பையும் இறப்பையும் மனத்தில் நினைத்துக்கொண்டிருத்தல். இம்மூன்று குணங்களும் எவனிடமில்லையோ அவன் ஒருபொழுதும் ஸஹி (தயாளு) வாகமாட்டான். ஸஹி என்பவனுடைய பெரிய பாக்கியம் எதுவென்றால், அவன் ஒரு வேளையில் தப்பி நடந்தாலும் அவன் ஸஹி என்பதை மட்டும் உண்மையாய் நடத்தி வருவானே யானால், அவனிடம் ஆண்டவன் கருணை குறைவுபடாது. பக்கிரியாகிய நான் எவ்வளவோ தேசங்கள் சுற்றி யிருக்கின்றேன். பஸ்ஸோரா தேசத்து ராஜகுமாரத்தி ஒருவளுக்கு அப்புரம் வேறு ஒரு ஸஹியையும் நான் கண்டதே யில்லை. தயாளம் என்பதை ஒரு உடுப்பாகத்தைத்து ஈசன் இப்பெண்பிள்ளையின்மேலே போட்டிருக்கின்றான். ஆனால் எல்லாருக்கும் தாதாவாக வேண்டுமென்ற ஆசை மட்டும் நிரம்ப இருக்கின்றது. ஆனால் அதை அடைய வேண்டியதற்கு எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமோ அவ்வாறு நடந்து கொள்ளத் தெரியவே தெரியாது என்றான். இதைக் கேட்டு நான் செய்த கோபத்தை மன்னித்து வேண்டியதைக் கேட்டு எடுத்துப் போகும்படி எவ்வளவோ கெஞ்சிக்கொண்டேன். நான் என்ன சொல்லியும் சொற்பமேனும் கேட்காமல் அப்பக்கிரி "இனி உன் ராஜ்ஜியத்

தையே நீ எனக்குக் கொடுத்தபோதிலும் அதன்மேல் நான் எச்சில் உமியேன். ஜலமோசனமுங்கூட செய்யேன்" என்று சொல்லிக் கொண்டே போய்விட்டான். அவனே அவ்வாறு சென்றான். நானோ பஸ்ஸோரா தேசத்து ராஜகுமாரத்தியின் புகழைக் கேட்டது முதல் அவளைப்பற்றி சிந்தையில் மூழ்கினவனானேன். அந்த நிமிஷம் முதல் என் உள்ளத்திற்கு சாந்தியேயில்லை. கடைசியாய் எனது உள்ளத்தில் எப்படியாவது பஸ்ஸோரா தேசம் சென்று அவ்விராஜ குமாரத்தியை அகத்தியம் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் முற்றிலும் குடிகொண்டு விட்டது.

இப்படியிருக்கையில் என் தந்தை காலஞ்சென்றார். நான் சிங்காசனத்தில் உட்காரலானேன். ராஜ்ஜிய பத்தியம் கிட்டிட்டென்றாலும் அவ்வெண்ணம் என் மனத்தை விட்டு நீங்கவேயில்லை. நான் என்னுடைய ராஜ்ஜியத்துக்கு முக்கிய ரக்ஷகர்களாகிய மந்திரியையும் பிரபுக்களையும் கூட்டி சபைசேர்த்து அவர்களிடம் நான் பஸ்ஸோராவுக்கு யாத்திரை செய்ய எண்ணங்கொண்டிருக்கிறேன் நீங்கள் எல்லாரும் உங்கள் அதிகாரத்தில் ஜாக்கிரதையா யிருங்கள். நான் மட்டும் பிழைத்திருக்கும் பக்ஷத்தில் இந்த யாத்திரை சடுதியில் முடிந்து விடும். நான் திரும்பி வந்து விடுவேன் என்றேன். ஒருவனாவது நான் அவ்வாறு போவதை ஒப்பவில்லை. என் எண்ணங்களோ பங்கமடைந்தன; மனமோ வெறுப்புற்றது. ஒருநாள் நான் எவனுடனும் யோசிக்காமல் ரகசியமாய் என்னுடைய முக்கிய மந்திரியை வரவழைத்து அவனை என் ஸ்தானத்தில் ராஜப் பிரதிநிதியாகப் பண்ணி ராஜீயக் காரியத்தில் முக்கிய அதிகாரியாக நியமித்தேன். பிறகு நான் காஷாய வஸ்திரம் பூண்டு பக்கிரியின் வேஷம் தரித்தேன். தனியாகவே ஒருவருக்குஞ் சொல்லாமல் பஸ்ஸோராவுக்குப் போகும் வழியைப் பிடித்து பிரயாணமானேன். சொற்பநாட்கள் வழி நடந்து அந்நாட்டு எல்லையை மிதித்தேன். எந்த நிமிஷம் அவ்வெல்லையைத் தொட்டேனோ அது முதல் பின் சொல்லப்புகும் அதிசயங்களை நான் காணலானேன். எங்கு பொழுது புகுந்து நான் இரவுக்குத் தங்குவேனோ அங்கு அவ் விராஜ குமாரத்தியின் வேலைக்காரர்கள் என்னிடம் வந்து என்னை வெகு மரியாதையாக உபசரித்து ஓர் அழகான மாளிகையில் இறக்கி, என் உண்டிக்கு வேண்டிய

எல்லா உணவுகளையும் ஏராளமாய் என் முன்னர் சித்தப்படுத்தி வெகு பயபக்தியுடனும் மரியாதையுடனும் இரவு முழுமையும் என்னிடம் கைகட்டி நிற்பார்கள். இரண்டாவது இரவில் இன்னொரு மஞ்சிலியில் தங்கும்பொழுது இதேவிதமான உபசாரம் நடக்கக்கண்டேன். இதே வித சுகத்தில் எத்தனையோ மாஸங்கள் வழி நடந்து கடைசியாய் பஸ்ஸோரா நகரம் சேர்ந்தேன். அந்நகரத்தில் புகுந்த நிமிஷத்தில் புன்னகை செய்துகொண்டு சந்தோஷமான முகத்துடன் ஓர் அழகான வாலிபன் அந்தமான உடை அணிந்து வெகு மரியாதையாக நடந்துகொண்டு வெகு புத்திமானாக விருக்கும் ஒளி அவன் முகத்திலேயே விளங்க என்னிடம் வந்து பால் (தேன்) ஒழுகும் பேச்சால் "ஐயா, நான் பக்கிரிகளுடைய வேலைக்காரன். வழிப்போக்கர்கள், சாதுக்கள், உலக சஞ்சாரிகள் யார் இவ்விடம் வருவார்களோ அவர்களை எதிர்கொண்டு என் வீட்டுக்கு அழைத்துப் போகப்பட்டவன். என் வீடு ஒன்றைத்தவிர, பரதேசிகளுக்குத் தங்க வேறு வீடு கிடையாது. தாங்கள் சிரம பரிகாரம் செய்துகொள்ள தயவு செய்யுங்கள்; என் குடிசையை கௌரவப் படுத்துங்கள். என்னையும் உத்தம பதவி அடையும்படி செய்யுங்கள் என்றான்.

அப்பொழுது பக்கிரியாகிய நான் உங்கள் திருநாமம் என்னவென்று அவரைக் கேட்க, அதற்கு அவர் "இப்பெயர் அற்ற பிராணியை பேதார் பக்த் என்று சொல்லுவார்கள்" என்றார். அவருடைய நற்குணங்களையும் அவர் ஒப்புக்கொண்டு உறவாடும் நயத்தையுங் கண்டு கவரப்பட்டு நான் அவரைத் தொடர்ந்து சென்று அவர் வீடு சேர்ந்தேன். அதைப் பார்க்கும்பொழுது அது அரசர்கள் தங்குவதற்கென்று ஏற்படுத்தப்பட்ட ஓர் பெரும் மாளிகையாக விளங்கிற்று. அங்கு அவர் என்னை ஒரு பெரிய அறைக்குள் அழைத்துப் போய் உட்காரவைத்தார். வெந்நீர் வரவழைத்து வேலைக்காரர்களால் என் கால்களையுங் கைகளையும் கழுவச்செய்தார். என் முன்பாக மட்டும் ஒரு தஸ்தர்கான் விரிக்கப்பட்டது. அதன்மேல் வேலைக்காரர்கள் பலவித சிற்றுண்டிகளடங்கிய தட்டு முட்டுகளையும் பலவித கனிகளையும் சித்தமாய் வைத்தார்கள். நான்கு பெரும் தட்டுகளில் ஒன்றில் பகனி புலாவ், மற்றொன்றில் ஹார்மா புலாவ், மூன்றாவதில் முதாஞ்சின் புலாவ், நான்காவதில் கூகூ புலாவ் எத்தனை வகை உண்டிகள் பரப்பப்பட்டன. ஒவ்வொன்றிலும் ஒரு

துண்டு எடுத்துச் சாப்பிட்டேன். அத்துடன் என் வயிறு நிரம் பிற்று. உடனே என் கையை சாப்பாட்டிலிருந்து எடுத்துவிட் டேன். அந்த மனிதர் என்னை இன்னும் புசிக்கக் கேட்டுக்கொள்ள லானார்:—"ஐயா தாங்கள் என்ன சாப்பிடவேயில்லையே. வைக்கப் பட்ட உண்டிகள் அப்படியே யிருந்து நிற்கின்றனவே. ஸங்கோஜமே யில்லாமல் நன்றாகப் புசிக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்" என்றார். அதற்கு நான் போஜனம் பண்ணுவதில் ஸங்கோஜம் என்னத்திற்கு. ஈசன் உங்கள் மாளிகையை என்றென்றைக்கும் க்ஷேமமாய் வைப்பாராக. எவ்வளவு மட்டும் என் வயிறு இடங் கொடுத்ததோ அவ்வளவும் நான் புசித்தேன். உங்களுடைய உண் டிகளின் மணத்தை நான் என்னென்று வர்ணிப்பேன். இன்னும் என் நாவு மணத்துக்கொண்டே யிருக்கிறது. வரப்பட்ட ஏப்பமும் வாஸனையா யிருக்கிறது. தஸ்தர்கானை அகற்றலாம் என்றேன். அவ் வாறே தஸ்தர்கான் அகற்றப்பட்டது. காஷானி மக்மல்லால் ஆகிய ஓர் ரத்தினக் கம்பளம் அவ்விடம் விரித்து ஜவாஸிக்கும் சவு காரமும் வென்னீரும் பொன் கிண்ணங்களில் கொண்டுவந்து நான் கை கழுவ என்முன்னர் அக்கம்பளத்தின் மேலே வைத்தார்கள். அதன் பிறகு ரத்னக் கற்களாலிழைக்கப்பட்ட தங்கப் பெட்டியில் வெற்றிலைப் பாக்கு, லவங்கம் ஏலக்காய் முதலிய திரவியங்களுடன் வைக்கப்பட்டது. தீர்த்தம் என்று நான் கேட்டால் தீர்த்தம் கொடுக்கின்றவன் பனிக்கட்டியுடன் அதைத் ஜில்லென்று ஓர் கூஜா வில் கொண்டுவந்து வைப்பான். சாயங்காலமானதும் கற்பூரங் கலந்த மெழுகுவர்த்திகள் ஏற்றப்பட்டு, கண்ணாடிக் கூண்டுகளில் வைக்கப்பட்டன. அவ்வதிசய நண்பன் என்னுடன் எப்பொழுதும் உட்கார்ந்துகொண்டு பலவித பேச்சுகள் பேசிக்கொண்டிருந்தான். இரவு ஒரு ஜாமம் கழிந்ததும் அதோ முன்பாக படுதாக்கள் தொங்க விடப்பட்டு விளங்குகின்றதே அந்த கட்டிலில் படுத்துக்கொண்டு சுகமாகத் தூங்கலாம் என்று அவன் சொன்னான். அதற்கு பக்கிரி யாகிய நான் பக்கிரிகளாகிய எங்களைப் போன்றவர்களுக்கு ஒரு பாய் அல்லது ஓர் மாந்தோல் போதுமான படுக்கையாய்விடும். இவ்வித படுக்கைகள் உலகத்தார்களாகிய உங்களுக்கென்றே ஈசன் அளித்திருக்கின்றார் என்றேன்.

அதற்கு அவன் ஐயா, இங்கிருக்கும் எல்லா சாமான்களும் பக்கிரிகளுக்கென்றே ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இவைகளில் ஒன்றாவது என் சாமான் அல்ல என்றான். அவ்வாறு அவன் நிர்ப் பந்திக்கவே நான் அப்படுக்கை மேலேறிப் படுத்துக்கொண்டேன். அதோ, புஷ்பப்படுக்கையைவிட மிருதுவா யிருந்தது. அப்படுக் கையின் இரு பக்கங்களிலேயும் ரோஜா மலர் பூக்த தொட்டிகளும் மற்ற மலர்கள் நிரம்பிய கூடைகளும் வைக்கப்பட்டிருந்தன. ஊது வத்திகளும் மற்ற வாஸனை வத்திகளும் அவைகளுக்கேற்ற விடங் களில் சிங்காரிக்கப்பட்டிருந்தன. எந்தப் பக்கம் திரும்பினாலும் புத்தி வாஸனையால் மயக்கலாயிற்று. இவ்வளவு சுகமாகத் தூங்கி னேன். பொழுது விடிந்ததும் காலை உண்டிக்கு வாதாங் கொட்டை, பிஸ்தாகொட்டை, திராக்ஷை, அத்தி, நேரிப்பழம், மாதளை, பேரீ ச்சை முதலிய பழங்களும் பழத்தின் ரஸங்களாகிய ஷர்பத்துகளும் என் முன்னர் வேலைக்காரர்கள் கொண்டு வந்து வைத்தார்கள். இதேவித உபசாரத்தில் மூன்று இரவுகளும் பகல்களும் கழிந்தன. நான்காவது நாள் பொழுது விடிந்ததும் நான் பிரயாணப்பட்டுப் போக விடை கேட்டேன். உடனே அந்நண்பன் கைகளைக் கூப்பிக் கொண்டு ஒருகால் நான் உபசாரஞ் செய்யும் வகையறியாமல் அப ராதஞ் செய்து விட்டேனோ என்னவோ தெரியவில்லையே. அக்கா ரணத்தால் நீங்கள் என்னிடம் வருத்த மடைந்தீர்களோ என்னவோ எனவே,நான் வியப்புற்று"ஜகதீசா,இதென்ன பேச்சு;விருந்துமூன்று நாள் என்பதல்லவா சாஸ்திரம். ஆகையால் நானிவ்விடம் மூன்று தினங்கள் தங்கியிருந்தேன். அதற்கு மேலிருப்பது நியாயமில்லை. அன்றியும் பக்கிரியாகிய நான் யாத்திரைக்காகப் புறப்பட்டவன் ஒரே யிடத்தில் தங்கிவிட்டால், அது எவ்வாறு என் ஏற்பாட்டுக்கு ஒக்கும். அதற்காக நானிப்பொழுது விடை கேட்கிறேன். அல்லா விடில் இவ்வளவு நற்குணமுள்ள உங்களைவிட்டுப் பிரிந்துபோக எனக்கு மனம் வருமா?" என்றேன்.

அப்பொழுது அவன் "அப்படியானால் தங்களிஷ்டம். ஆனால் ஒரு நிமிஷம் நிதானியுங்கள். நான் தங்கள் ஸமாசாரத்தை ராஜ குமாரத்தியிடம் சொல்லி விட்டு வருகின்றேன். இப்பொழுது நீங்களிவ்விடம் விட்டுப்போக எண்ணங்கொண்டு விட்டபடியால்

இவ்விடத்திலிருக்கும் எல்லா ஸாமான்களும் தாங்கள் உடுத்த உடுப்புகள், படுத்த படுக்கை, தாங்கள் எவைகளிலிருந்து உணவு புசித்தீர்களோ அக்கிண்ணங்கள், தங்கம், வெள்ளி, கற்களிழைத்த பாத்திரங்கள் யாவும் உங்களைச் சேர்ந்த ஸாமான்கள். அவைகளைக் கொண்டுபோக என்ன ஏற்பாடு செய்கின்றீர்களோ அதைத் தெரிவித்தால் அவ்வாறு தங்கள் உத்தரவுப்படி நடத்துகின்றேன்'' என்றான். இதைக் கேட்டு நான் "லாஹெளல்'' என்னும் மந்திரம் ஜபித்து வியப்புற்று "ஐயா நான் பக்கிரி. பணத்தாசைக்காக ஸஞ்சரிக்கும் பாகவதனல்ல. இப்பணத்தாசை மட்டும் என் மனத்திலிருக்குமானால் நான் ஏன் பக்கிரியாக வேண்டும். ஸம்ஸாரியாகவேயிருந்துவிட்டால் நன்மையன்றோ'' என்றேன். அதற்கு அவன் இச்சங்கதியை மட்டும் எங்கள் ராஜகுமாரத்தி கேட்டுவிட்டால் என்னை எவ்வாறு தண்டிப்பாளோ அதை ஈசன்தான் அறியவேண்டும். தங்களுக்கு இப்பொழுது இச்சாமான்களை எடுத்துப்போக மனமில்லாத பக்ஷத்தில் இவைகளை எல்லாம் ஒரு கொட்டடியில் போட்டுப் பூட்டி உங்கள் முகர் வைத்துப்போவீர்களேயானால் அப்புறம் உங்களிஷ்டப்படி அவைகளை உபயோகித்துக்கொள்ளலாம்'' என்றான்.

நானும் ஒப்புக்கொள்ளவில்லை. அவனும் என் பேச்சைக் கேட்கவில்லை. கடைசியாய் முன்பின் போக வழியின்றி எல்லா ஸாமான்களையும் ஓர் அறையில் அவன் வேண்டுகோளின்படி போட்டுப் பூட்டினேன். என் முகரை அப்பூட்டின்மேல் வைத்தேன். வெகு ஆவலுடன் அவன் தயையை எதிர்பார்த்திருந்தேன். இத்தருணத்தில் ஓர் கோஜா தலையில் உயர்ந்த பாகை, இடுப்பில் அழகான சிறு உடை தரித்து வைரக் கற்களிழைத்த தங்க விருது கோல் பிடித்து பல வேலைக்காரர்களால் சூழப்பட்டு வெகு அலங்காரமாகவும் வெகு விமரிசையாகவும் என் முன்பு வந்து நின்றான். அவன் என்னிடம் எவ்வளவோ நயமாகவும் அன்பாகவும் பேசலானான். அதை அவ்வாறு வர்ணிக்க என்றால் முடியவே முடியாது. கடைசியாக அவன் ஐயா, தங்கள் தயையையும் கருணையையும் விளங்கச் செய்ய தாங்களும் எனது குடிசையை தங்கள் பாதந்

களை வைத்து அலங்கரிக்கவேண்டும். அப்படி செய்வது தங்களுடைய ஒப்புக்கொள்ளுதலுக்கும் பெருமைக்கும் ஏற்றதாகவிருக்கும். அது மட்டுமல்ல. ஒருக்கால் ராஜகுமாரத்தி இந்த ஊருக்கு ஒரு பக்கிரி வந்து தக்க மரியாதை பெறாமல் போய்விட்டார் என்று கேள்விப்படுவாளே யானால், அவள் எங்களுக்கு என்ன தண்டனையை விதிப்பாளோ அதை ஈசன்தானறியவேண்டும். சுருக்கிச் சொல்ல என் பிராணனுக்கே ஆபத்து விளையும் என்றான். நானிவ்வாறு அவன் சொன்ன சொல் ஒன்றையும் முதல் முதல் ஒப்புக் கொள்ளவேயில்லை. ஆனால் அவன் என்னை பல தடவை கெஞ்சி வேண்டி வருந்தி வருந்தி கேட்டுக்கொண்டு என் ஆக்ஷேபணையை வென்று என்னை இன்னமொரு மாளிகைக்கு அழைத்துப் போனான். அதோ நான் முதல் தங்கின மாளிகையைவிட வெகு அழகாக விருந்தது. அவ்விடத்தில் மூன்று இரவு பகல், முதல் மனிதன் உபசரித்ததுபோல் என்னை அதேமாதிரி உபசரிக்கலானான். அதே மாதிரி தினந்தோறும் இரண்டுவேளை ஆகாரம், காலையும்மாலையும் ஷர்பத்து, இடையில பலவித கனிகள், இவ்வாறு அதே உபசாரங்கள் நடந்தன. நானவ்விடம் விட்டு புறப்படும்படியானதும் அவனும் இவ்வெல்லா சாமான்களும் வெள்ளித்தட்டு தங்கப் பாத்திரங்கள் முதலிய எல்லாப் பொருள்களும் உங்களுடையது உங்களிஷ்டப்படி செய்யலாம்'' என்றான்.

நானிதைக் கேட்டதும் வியப்புற்று புத்தி மயங்கி நின்றேன். எப்படியாவது இவ்விடத்தைவிட்டு விடை பெற்றுக்கொண்டு ஓட்டம் பிடிக்கவேண்டும் என்று நிச்சயித்தேன். என் குழப்பத்தை ஒருவாறு முகக் குறியால் அக்கோஜா அறிந்தவனாய் என்னைப் பார்த்து "ஐயா ஈசன் அடியாரே, உங்கள் உள்ளத்தில் என்ன எண்ணம் அல்லது ஆசையிருக்கின்றதோ அதை வெளியிடுங்கள். அதை நான் ராஜகுமாரத்தி சமூகத்திற் சென்று தெரியப்படுத்துகின்றேன்'' என்றான். அதற்கு நான் "ஐயா நானிவ்வண்ணம் பக்கிரியுடை பூண்டு எவ்வண்ணமாய் உலக சௌக்கியத்துக்குரிய பொருள்களில் ஆசை வைக்கலாம். நான் ஒன்றும் வேண்டாமலிருக்கும் பொழுதே நீங்கள் எனக்கு எல்லாவற்றையும் அளிக்கின்றீர்கள். நானோ அவைகள் ஒன்றும் வேண்டாம் என்று தடுக்கின்றேன்''

என்றேன். அதற்கு அவன் "ஐயா, உலக ஆசை ஒருவரையும் ஒரு பொழுதும் விட்டதே யில்லை. அதை உத்தேசித்தே ஓர் கவி ஆசைப்பற்றி பின்வருமாறு பாடினன்.

இவ்வுலகத்தில் நகத்தை வெட்டாமல் வளர்க்கவிட்டுக் கொண்டிருக்கும் யோகிகள் என்பவர்களை நான் பார்த்திருக்கின்றேன். தலையில் பெரிய ஜடா மண்டலம் தரித்தவர்களைப் பார்த்திருக்கின்றேன். இவ் வஞ்சகமான உலகில் காதை அறுத்துக் கொண்டிருக்கும் யோகிகளையும் பார்த்திருக்கின்றேன். பேசாத மௌனிகளைப் பார்த்திருக்கின்றேன். தலையை மொட்டை யடித்துக் கொண்டிருக்கும் சமணர்களைப் பார்த்திருக்கின்றேன். எத்தனையோ ஜனங்கள் எத்தனையோ விளையாட்டுகள் இக்காண்டாவனத்தில் விளையாடுவதையும் பார்த்திருக்கின்றேன். வீரனைப்பார்த்திருக்கின்றேன். சூரனைப் பார்த்திருக்கின்றேன். தெரிந்தவனைப் பார்த்திருக்கின்றேன். தெரியாத மூடனையும் பார்த்திருக்கின்றேன். மாயையில் உழன்று கொண்டிருக்கின்றவனைப் பார்த்திருக்கின்றேன். எவ்வளவோ பொருளிருந்தும் தன்னை மறந்திருப்பவர்களைப் பார்த்திருக்கின்றேன். முதல் முதல் கடைசிவரையில் சுகத்திலேயே யிருந்தவர்களைப் பார்த்திருக்கின்றேன். பிறந்தது முதல் துக்கப்பட்டவர்களைப் பார்த்திருக்கின்றேன். எல்லாரையும் பார்த்திருக்கின்றேன், ஆனால் எவனொருவனுள்ளத்தில் பணத்தாசை என்பதில்லையோ அவனை மட்டும் நான் பார்க்கவில்லை.

இப்படி அவன் பாடினதைக் கேட்டு நான் "நீங்கள் சொல்லுவது நிஜந்தான்" என்று சொன்னேன். இன்னும் நான் என் உள்ளத்தில் ஓர் ஆசைமட்டு மிருக்கின்றது. உத்தரவானல் நான் அதை வெளியிடுகின்றேன். ஒரு சீட்டில் என் உள்ளத்திலிருப்பதை எழுதி ராஜகுமாரத்திக்கு அனுப்பவேண்டும். அதைத் தங்கள் கையில் கொடுக்கின்றேன். அதைத் தாங்கள் அவள் ஸன்னிதானம் போய்ச்சேரும்படி செய்யவேண்டும். அதுதான் தாங்கள் எனக்குச் செய்யும் பெரும் உபகாரம். அப்படிச் செய்தால் இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் தாங்கள் எனக்குக் கொடுத்தாற் போலாகும் என்றேன். அதற்கு அவன் கண்ணும்

கருத்துமாய் அவ்வாறே செய்கின்றேன் ஆக்ஷேபமில்லை என்றான். உடனே நான் ஒரு கடிதம் எழுதினேன். கடிதத்தின் ஆரம்பத்தில் ஈசன் துதி; அதன் பிறகு என் சரித்திரம்; நான் ஈசனார் படைப்பில் ஒருவனாயிருந்து கொண்டு அவ்வூரில் சில நாட்களாக தாமதித்துக் கொண்டிருப்பதையும், அவனுடைய ராஜாங்கத்தின் சிறப்பால் ஒருவித குறைவுமின்றி நான் அவ்வூரில் காப்பாற்றப்பட்டு வருவதையும் அவனுடைய உதார குணத்தையும் தான தருமங்களையும் நான் எவ்வளவு மட்டும் கேட்டு அவைகளைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால் வெளிக் கிளம்பி வந்தேனோ அவைகளை நான் கேட்டதற்கு மேல் நான்கு மடங்கு அதிகமாக விருப்பதைக் கண்டதையும் எழுதினேன். அன்றியும் நான் உங்கள் ராஜாங்கத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் என் மனத்தில் என்னென்ன விருக்கின்றனவோ அவைகளை நான் வெளியிடலாம் என்று எனக்கு தைரியஞ் சொல்லுகின்றபடியால் நான் சொற்பமேனும் கூச்சமின்றி என் மனத்திலிருக்கும் அவாவை எழுதத் துணிகின்றேன், எனக்கோ இவ்வுலகத்திலிருக்கும் ஒரு பொருளின்மேலும் ஆசையில்லை. நானும் என் தேசத்துக்கு அரசன்; ஆனால் நானிவ்வளவு தூரம் வந்ததும் இவ்வளவு சிரமப்பட்டதும் உங்கள் மேல் மோகம் என்ற காரணத்தால்; அது ஒன்றே தான் என்னைத் தனிமையில் இவ்வளவு தூரம் கொண்டு வந்துவிட்டது. உங்கள் உதார குணத்தை யோசிக்குங்கால் என் உள்ளத்திலிருக்கும் எண்ணங் கைகூடும் என்ற நம்பிக்கை எனக்கு உதித்திருக்கின்றது. அவ்வாறு கைகூடினால் நான் திருப்தி யடைவேன். ஆகையால் இனிமேல் எனக்கு நடக்கவேண்டிய பெருமை எல்லாம் உங்கள் கையிலிருக்கின்றது. இந்த தௌர்பாக்கியனுடைய வேண்டுகோளுக்குத் தாங்கள் இடங்கொடாவிடில், இதே மாதிரியாக நான் கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு சுகமே யில்லாமல் அலைந்து திற்பேன். என் உயிரை உங்களுடைய மோகம் என்ற தீயிலேயே ஆகுதிசெய்து விடுவேன். மஜ்னூன் போலும் பர்ஹாத் போலும் நானும் என் பிராணனை ஓர் காட்டிலோ அல்லது மலையிலோ விடுவேன்" என்று எழுதினேன்.

இவ்வாறெழுதின கடிதத்தை அக்கோஜாவின் கையில் கொடுத்தேன். அவன் அதை ராஜகுமாரியினிடம் எடுத்துப் போனான். ஒரு நிமிஷத்துக்கெல்லாம் திரும்பிவந்தான். என்னைத் தன்னுடன் அரண்மனை ஆசார வாயிலண்டை அழைத்துப் போனான். நானவ்விடம் சேர்ந்ததும் அங்கு வயது சென்ற ஓர் பெண் பிள்ளை அநேக வித உயர்ந்த நகைகளணிந்து ஓர் பொற்பீடத்தி லுட்கார்ந்திருக்கக் கண்டேன். அநேக கோஜாக்களும் மற்ற வேலைக்காரர்களும் உயர்ந்த ஆடை ஆபரணங்களணிந்தவர்களாய் தங்கள் கைகளைக் கட்டிக்கொண்டு அவள் முன்பாக நிற்கக் கண்டேன். நான் அவளை அங்கு நடக்கும் விஷயங்களுக்கெல்லாம் மேன் காவற்காரியாகக் கருதி அவள் பெரியவளாக விருந்தமையால் வெகு மரியாதையாக அவளை வணங்கலானேன். அவ்வம்மணியும் என் மரியாதையை ஸந்தோஷத்துடன் அங்கீகரித்தவளாய் எனக்கு ஸலாம் செய்து, வாருங்கள் உட்காருங்கள், நீங்கள் வந்தது வெகு உத்தமமாயிற்று. ராஜ குமாரத்திக்கு ஆசைக் கடிதம் எழுதினவர் நீங்கள் தானோ? என்றாள். நானோ வெகு வெட்கி ஒன்றும் பேசாமல் தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தேன்,

ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவ்வம்மணி என்னைப் பார்த்து ஐயா, இளைஞரே, ராஜகுமாரத்தி தங்களுக்கு ஸலாம் சொல்லச் சொன்னாள்; அன்றியும் அவள் தங்களிடம் தெரிவித்துக் கொள்ளுவதாவது—நான் ஒரு கணவனை கலியாணஞ் செய்து கொள்ள வேண்டிய தென்பது நியாயமே. ஆகையால் நீங்களே எனக்குக் கணவனாக வேண்டிக் கொள்ளுவதில் ஒரு விதப்பிசகுமில்லை. ஆனால் நீங்கள் உங்கள் தேசத்தைப்பற்றிச் சொல்லிக் கொள்ளுவதும், பக்கிரி உடுப்பு உடுத்தியும் ராஜன் என்று கர்வங் கொள்ளுவதும், அதைப்பற்றி இவ்வளவு ஜம்பமாகப் பேசுவதும் அழகாகவேயில்லை. இஸ்லாம் மதத்தோர்களுக்கு நான் மேலான பதம் அளிக்க வேண்டியவளா யிருந்தாலும் மனிதன் என்றால் எல்லாரும் எனக்கு ஒரே மாதிரிதான். நானும் வெகுநாளாகக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசை கொண்டவளாகத்தா னிருக்கின்றேன். நீங்கள் எவ்வாறு இவ் வுலகத்து வஸ்துக்களில் ஆசை ஒழிந்தவர்களா யிருக்கின்றீர்களோ அவ்வாறே நானும் எனக்கு

ஈசன் கணக்கிட முடியாத ஐசுவரியத்தை கொடுத் திருக்கிறபடி யால் ஆசை ஒழிந்தவளா யிருக்கின்றேன். என்னைக் கலியாணம் செய்துகொள்ள ஒரு நிபந்தனை யுண்டு. அதை நீங்கள் முதலில் முடித்துக்கொடுக்க வேண்டும் என்று ராஜகுமாரத்தி சொல்லச் சொன்னாள் என்று அக்கிழவி சொல்லி, அந்நிபந்தனையை முடித்துக் கொடுக்க நீங்கள் வெகு சிரமப்படவேண்டும். அது உம்மால் முடியுமா?" என்றாள். அதற்கு நான் "என் பொருளோ பிராணனோ எது வேண்டுமோ அதை முற்றிலும் செலவிட்டு நான் முடித்துக் கொடுக்க ஸர்வ வித்திலும் முயலுகின்றேன். அந் நிபந்தனையை வெளியிடுங்கள். அதைக் கேட்க நான் ஆவலுட னிருக்கின்றேன்" என்றேன். அதற்கு அக் கிழவி "இன்று ஒருபொழுது பொறுத் துக் கொள்ளுங்கள், நாளை நான் சொல்லுகின்றேன்," என்றாள். அப்படி அவள் சொன்னதை நான் சந்தோஷமாக ஒப்புக்கொண்டு அவளிடம் விடைபெற்று அவ்விடம் விட்டு வந்தேன்.

பகல்பொழுது ஒருவாறு கழிந்தது; இரவு வந்ததும் ஒரு கோஜா என்னிடம் வந்து என்னை அந்தப்புரத்துக்கு அழைத்துப் போனான். அவ்விடம் நான் சேர்ந்ததும் அங்கு அத்தேசத்து பிர புக்கள், வித்வான்கள், பெரியோர்கள், பண்டிதர்கள் இவர்கள் எல்லா ரும் சபை கூடியிருக்கக் கண்டேன். நானும் அச்சபையில் அவர்கள் நடுவில் ஒருவனாக உட்கார்ந்தேன். இதற்குள் எங்கள் முன்பாக தஸ்தர்கான் விரிக்கப்பட்டு உப்பு இனிப்பு இவ்விரு ருசிகள் நிரம்பிய பலவித உண்டிகள் பரப்பப்பட்டன. அவர்கள் எல்லோரும் உண வுண்ண ஆரம்பித்தார்கள். என்னையும் புசிக்கும்படி அவர்கள் வெகு மரியாதையுடன் வேண்டவே நானும் அவர்களுடன் கூடவே போஜனஞ் செய்யலானேன். உண்டி முடிந்ததும் உள்ளிருந்த ஒரு தாதி வெளியே வந்து "பகர்வர்" எங்கே அவனைக் கூப்பிடு என்றாள். அங்கிருந்த வேலைக்காரர்கள் உடனே ஒருவனைக்கொணர் ந்து அவ்விடம் விட்டார்கள். அவன் முகமோ வெகு மரியாதை யுள்ள மனிதன் முகம்போல் விளங்கிற்று. அவனிடுப்பிலிருந்து பல பொன் சாவிகளும் வெள்ளிச்சாவிகளும் தொங்கிக்கொண் டிருந்தன. அவன் என்னிடம் வந்து வெகு மரியாதையுடன்

வணங்கி என்னிடம் உட்கார்ந்தான். அப்பொழுது அந்தாதி அவனை நோக்கி, ஆ, பகாவர் நீ என்னென்னதைப் பார்த்தாயோ அதைப் பார்த்தபடி முற்றிலும் இவருக்குச் சொல்லுவாயாக என்றாள்.

அப்பொழுது பகர்வர் என்னைப் பார்த்து தனது கதையைச் சொல்லலுற்றான்:— ஐய, நண்பரே, நமது ராஜ குமாரத்தியின் ஆளுகையின் கீழ் பல்லாயிரம் வேலைக்காரர்கள் வியாபாரத் தொழில் செய்துகொண்டிருக்கின்றார்கள். அவர்களுள் கடையோனிலும் கடையோனாய் தலைமுறை தலைமுறையாய் வியாபாரத் தொழில் செய்கின்றவன் நான் ஒருவன். அவள் அவர்களிடம் எவ்வளவோ லட்ச ரூபாய்கள் பெறும்படியான ஸாமான்களும் சரக்குகளும் ஒப்புவித்து வியாபாரத்துக்கு அனுப்புகின்றாள். அவ் வியாபாரிகள் தாங்கள் சென்ற தேசங்களில் வியாபாரஞ் செய்து திரும்பி வரும் பொழுதெல்லாம் ராஜ குமாரத்தி அவர்களை தம் ஸந்நிதானத்துக்கு வரவழைத்து அத்தேசத்து ஸமாசாரங்கள் நடை உடைபாவனை, எல்லாவற்றையும் நேராக விசாரிக்கினறாள். ஒரு சமயம் வெகு தௌர்பாக்கியனான நான் நீம்ரோஸ் என்ற தேசத்துக்கு வியாபாரம் செய்யச் சென்றேன். அவ்விடம் நான் சேர்ந்ததும் அத்தேசத்து ஜனங்கள் யாரைப் பார்த்தாலும் கறுப்பு உடுப்பு உடுத்திருந்தார்கள். ஒவ்வொரு நிமிஷமும் பெருமூச்சு விட்டுக்கொண்டு தாளமுடியாத துக்கக் கடலில் தத்தளிப்பவர்கள் போல காணப்பட்டார்கள். பார்த்த மாத்திரத்தில் அவர்களுக்கு ஏதோ பெரும் ஆபத்து வந்திருப்பதாக எனக்குத் தோன்றிவிட்டது. என்ன காரணம் என்று நான் யாரைக் கேட்டபோதிலும் ஒருவனாவது எனக்கு மறுமொழியே சொல்லுகின்றானில்லை. இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் பொழுது விடிந்ததும் அவ்வூரிலிருந்த ஏழைகள், பணக்காரர்கள், சிறியோர்கள், பெரியோர்கள், இளைஞர்கள், கிழவர்கள் எல்லாரும் அவ்வூரைவிட்டு வெளியே போக ஆரம்பித்தார்கள். வெளியில் ஒரு மைதானத்தில் கூட்டங் கூடலானார்கள். அவ்வூர் அரசனும் குதிரை ஏறி, தனது பரிவாரங்கள் எல்லாவற்றுடனும் அவ்விடம் சென்றார். அவ்விடத்தில் எல்லாரும் ஒரு வரிசையாக ஒழுங்காக நிற்கலானார்கள்.

நானும் அவர்கள் நடுவில் ஒரு மனிதனாக நின்றுகொண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். ஏனெனில் அவர்கள் எல்லாரும் யாரோ ஒருவனுடைய வரவை வெகு ஆவலுடன் எதிர் பார்த்து நிற்பதாக எனக்குத் தோன்றிற்று. ஒரு நாழிகை நேரத் துக்கெல்லாம் ஒரு இளைஞன் வெகு சுந்தர புருஷன் பதினைந்து, பதினாறுவயதுள்ளவன் வெகு தூரத்திலிருந்தே பெரும் கர்ச்சனை கர்ச்சித்துக் கொண்டு, வாயில் நுரைதள்ள ஓர் மஞ்சள் வர்ண மான எருதின்மேலேறி சவாரி செய்து கொண்டு கையில் ஏதோ ஒன்றைப் பிடித்துக்கொண்டு வந்து அந்த ஜன ஸமூகத் தின் முன்பாக நின்றான். அவ்விடம் சேர்ந்ததும் தன் எருதை விட்டுக் கீழே யிறங்கி ஒரு கையில் அவ்வெருதின் மூக்கணாங் கயிற்றையும் மற்றொரு கையில் பட்டாக் கத்தியையும் பற்றிக் கொண்டு அந்த ஜனங்கள் முன்பாக உட்கார்ந்தான். ரோஜா மலர் நிறம் போன்ற மேனியனொருவன் அவனுடைய வேலைக்காரனாக அவனுடனிருந்தான். அவ்விளைஞன் அவ்வேலைக்காரனிடம் தான் தன் கையில் வைத்துக் கொண்டிருந்த வஸ்துவைக் கொடுத்தான். அதை அவன் வாங்கிக் கொண்டு ஒரு கோடியிலிருந்து ஆரம்பித்து மற்றக் கோடிவரையில் அங்கு நின்ற எல்லா ஜனங்களுக்கும் அதைக் காட்டிக் கொண்டே போனான். அதைப் பார்த்த ஒவ்வொருவனும் கன்னத்திலடித்துக்கொண்டு தன்னை யறியாமல் துக்கம் பொங்கி விசனப்பட்டான். இதே மாதிரி அவ்வேலைக்காரன் அதை ஒவ் வொருவனுக்கும் காண்பிப்பான். அதைப் பார்த்தவன் துக்கிப்பான். இவ்வாறு அவ்வரிசை முடியக் காட்டி விட்டு அவ்வேலைக்காரன் தன் யஜமானனிடம் அவ்வஸ்துவைக் கொண்டு வந்து கொடுத் தான்.

அவ்வண்ணம் அவ்வடிமை தன் யஜமானனிடம் திரும்பி வந்த தும் அவன் தனது கத்தியால் அவ்வடிமையின் தலையை ஒரே வெட்டாக வெட்டி மறுபடி எருதேறி, எவ்விடமிருந்து சவாரி செய்து கொண்டு வந்தானோ அவ்விடத்தை நோக்கி வெகு வேக மாய் எருதை ஓட்டிக் கொண்டு ஓடி விட்டான். அங்கிருந்த எல்லாரும் தாங்கள் நின்றபடியே அவனைப் பார்த்துக்கொண்டி ருந்தார்கள். அவன் அவர்கள் கண்களுக்கு மறைந்த பிறகு அவர்

கள் எல்லோரும் நகரத்துக்குத் திரும்பலானார்கள். நான் கண்ட எவனையும் இவ்வதிசியத்தின் அருத்தம் என்னவென்று கேட்கலானேன். பணத்தாசை காட்டி, எனக்கு ஸரியான மறுமொழி சொன்னால் பணம் கொடுப்பதாகவும் சொல்லிப் பார்த்தேன். ஸ்தோத்திரம் பண்ணிப் புகழ்ந்து வேண்டியும் பார்த்தேன். எனக்கு சொற்பம் சொல்லுங்கள் அவ்விளைஞன் யார்? அவன் ஏன் இவ்வண்ணமான கொடிய காரியம் செய்தான்? அவன் எங்கிருந்து வந்தான். எவ்விடம் சென்றான் என்று எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன். நான் என்னதான் கேட்கினும் எனக்கு ஒருவனாவது சிறிதாவது அவ்விஷயமாய் சொல்லவேயில்லை. எனக்கும் ஒன்றும் விளங்கவேயில்லை: நானவ்விடமிருந்து இங்கு திரும்பி வந்ததும் இக்கதையை அதாவது நான் கண்ட விந்தையை ராஜ குமாரத்தி ஸந்நிதானத்தில் சொன்னேன். அது முதல் ராஜ குமாரத்தியும் இவ்விஷயமாய் வியப்பில் மூழ்கி யிருக்கின்றாள். அதன் உண்மையை அறிந்து கொள்ள எப்பொழுதும் கவலைப்பட்டவளாக விருக்கின்றாள். இதை அறிந்துகொள்ளுவதைத்தான் தன் விவாகத்தின் சுல்கமாக ஏற்படுத்தியிருக்கின்றாள்; எவனொருவன் அவ்வற்புத விஷயத்தை விசாரித்து ஒவ்வொரு ஸங்கதியின் காரணத்தை செவ்வையாக அறிந்து வருகின்றானோ அவனைத்தான் விவாகம் செய்து கொள்ளுவதாக நிச்சயித்திருக்கின்றாள். எவன் இவ்விஷயத்தை நன்றாகத் தெரிந்து கொண்டு திரும்பி வருவானோ அவன் இத்தேசத்து இராஜ குமாரத்தியின் பணம், பொருள், தேசம் இராஜ குமாரத்தி எல்லாவற்றிற்கும் எஜமானனாவான் என்பதில் ஐயமில்லை."

"ஐயா! நீங்களிக்கதையை முற்றிலும் கேட்டாய்விட்டது. உமது மனத்தினுள்ளேயே நன்றாக யோசித்துப் பார்த்துக் கொள்ளும். அவ்விளைஞன் சமாச்சாரத்தை உம்மால் கொண்டு வர முடியுமானால் நீம்ரோஸ் நாட்டுக்குச் செல்ல ஒப்புக்கொண்டு உடனே பிரயாணப்படும். முடியாத பக்ஷத்தில் முடியாது என்று சொல்லி உமது ஊருக்குத் திரும்பும்" என்றான். அதற்கு நான் ஈசனருளால் நான் வெகு சடுதியில் தலை முதல் கால் வரையில் இவ்விஷயத்தை சோதித்தறிந்து கொண்டு ராஜ குமாரத்தியினிடம் வந்து சேருகின்றேன். இக்காரியத்தை ஸாதிக்காமல் போனால் அது என்

தலை எழுத்து ஆகும். தலையெழுத்துக் கெடுதலாக விருந்தால் அதற்கு மருந்தேயில்லை. ஆனால் நான் வெற்றியுடன் திரும்பி வந்ததும் ராஜ குமாரத்தி தாம் வாக்குக் கொடுக்கிறபடி நடத்தி வைக்கின்றாள் என்பது என்ன நிச்சயம். வாக்கிலிருந்து மாறினாலோ இன்னும் ஓர் வித சந்தேகம் என் மனதில் உதிக்கின்றது. அது யாதெனில் ராஜகுமாரத்தி இவ்வேழையும் பக்கிரியுமாகிய என்னைத் தமது ஸந்நிதானத்தில் வரவழைத்து ஓர் திரைக்கப்பால் உட்கார வைத்து என் விண்ணப்பத்தைத் தமது காதால் கேட்டு தமது வாயால் எனக்கு வாக்குறுதி செய்ய வேண்டும். அப்பொழுது தான் என் உள்ளங் குளிரும். இக்காரியத்தைச் செய்து முடிப்பது எனக்கு சுலபமாகும். எனக்கு எல்லாவித தைரியமு முண்டாகும் என்றேன். இவ்வண்ணம் நான் சொன்னதை அக்கிழவி அக்கட்டழகியிடம் சென்று தெரிவித்தாள். அக்கட்டழகியும் என் மீது கருணை கூர்ந்தவண்ணம் என்னைத் தம் முன்னால் அழைத்து வரும்படி கட்டளை யிட்டாள்.

அத்தாதிஉடனே திரும்பிவந்து என்னைத் தன்னுடன் அழைத்துப் போய் அவ்விராஜ குமாரி யிருந்த அறையில் விட்டாள். நான் அவ்விடம் கண்ட காட்சியை என்னென்று சொல்லுவேன். வெகு அழகான தாதிகளும் வேலைக்காரிகளும் ஆயுதபாணிகளாய் அவ்விராஜ குமாரியின் எதிரில் இரண்டு வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆப்கானிஸ்தான், துருக்கி, ஹபிஷினி, உஸ்பக், காஷ்மீர்,நேபால் இத்தேசங்களிலிருந்து பொறுக்கி எடுத்த கட்டழகிகளாவார்கள். ரத்தினங்களிழைத்த தங்க நகைகளணிந்து உயர்ந்த ஆடை உடுத்திக் கையைக் கட்டிக்கொண்டு அத்தாதிகளும் வேலைக்காரிகளும் தங்கள் தங்களுக்கேற்பட்டிருந்த இடத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். நான் அச்சபையை என்னென்று வருணிப்பேன். அது இந்திர சபையா அல்லது தேவரம்பைகளே ஆகாயத்திலிருந்து குதித்திருந்த காட்சியா ! என்னை யறியாமல் 'ஆஹா' ! என்ற வியப்பு என் ஹிருதயத்திலிருந்து என் நாக்கு நுனி வரையில் வரலாயிற்று. மார்பு படபட வென்று அடித்துக்கொண்டது. ஒருவாறு என்னை நானே எப்படியோ தைரியப்படுத்திக் கொண்டேன், அவர்களைப்

பார்க்கப் பார்க்க என் தலை கிறுகிறு என்று சுழலலாயிற்று. எப்படியோ அவர்களின் வரிசைகள் இடையில் நடக்கலானேன். ஒவ்வொரு அடி தூக்கி வைக்கும்பொழுது என் பாதம் நூறு மணங்கு பாரம் கனத்தது. ஒரு தாதியை ஒரு தடவை பார்த்த பிறகு அவ்விடம் விட்டு காலெடுத்து வைக்க மனமே வரவில்லை. இவ்வாறு நான் போய்க் கொண்டிருந்தபொழுது ஒரு பக்கத்தில் ஒரு திரை போடப்பட்டிருந்தது. அத்திரையின் சமீபத்தில் ரத்தினக் கற்களிழைத்த ஓர் ஆஸன மிருக்கக் கண்டேன். அதற்குச் சமீபத்தில் சந்தன மரத்தால் செய்த ஓர் நாற்காலியும் போடப்பட்டிருந்தது. தாதி அந்த ரத்தினாஸனத்தில் என்னை உட்காரும்படி சைகை செய்தாள். அப்படியே நான் அதன்மேல் உட்கார்ந்தேன். அத்தாதி சந்தன நாற்காலியில் உட்கார்ந்தாள். உடனே அவள் "ஐயா! நீர் உமது மனத்திலிருப்பதை முற்றிலும் மனப்பூர்வமாய் சொல்லலாம்" என்றாள்.

நான் முதல்முதல் அவ்விராஜ குமாரியின் உதார குணத்தைப் பற்றியும் அவள் நீதி செலுத்தி அழகாக ஆண்டு வருவதைப் பற்றியும் வர்ணித்தேன். அதன் பிறகு நான் பின் வருமாறு சொல்லலானேன்:—நான் எந்த நிமிஷம் இந்நாட்டு எல்லையை மிதித்தேனோ அப்பொழுது முதல் ஒவ்வொரு மஜிலியிலும் பிரயாணிகளும் பக்கிரிகளும் தங்க அழகான மாளிகைகள் கட்டி தக்க ஏற்பாடுகள் செய்திருப்பதையும் ஒவ்வொரு தங்குமிடத்திலும் வேலைக்காரர்களும் அரண்மனை உத்தியோகஸ்தர்களும் அவர்களிடம் காத்திருந்து அவர்களை உபசரிக்க வேண்டியதற்காக நியமிக்கப்பட்டிருப்பதையும் கண்டு களித்தேன். நான் ஒவ்வொரு மாளிகையிலும் தங்கி ஒவ்வொருவிடத்திலும் 3-நாட்கள் வசித்தேன். நான்காம் நாள் நான் எந்த இடத்தை விட்டுப் புறப்பட்டாலும் ஒருவனாவது மனப் பூர்வமாய் நீ போகலாம் என்று என்னைப் பார்த்துச் சொல்லவேயில்லை. அன்றியும் நான் தங்கின விடங்களில் நான் உபயோகித்த அவ்வளவு சாமான்கள், ஜமக்காளம், தடுக்குகள், உப்புப் பாத்திரங்கள், வெள்ளி ஸாமான்கள், தங்க ஸாமான்கள், படுக்கைகள் முதலியவை என்னுடையதென்று எல்லாரும் சொல்லி நான் [illegible]

அறையில் அவைகளைப் போட்டுப் பூட்டி அப்பூட்டின்மேல் என் முகரிடவேண்டும் என்றும் எப்பொழுது எனக்கு ஸாவகாசமோ அப்பொழுது நானவைகளை எடுத்துப் போகலாம் என்றும் சொன்னார்கள். நானுமப்படியே செய்து வந்திருக்கிறேன். ஆனால் என் ஆச்சரியம் என்னவெனில், தனியாய் வந்த என்னைப்போன்ற ஒரு பக்கிரிக்கு இவ்வளவு உபசாரமானால் என்னைப்போல் எத்தனையோ ஆயிரக்கணக்காய் பக்கிரிகள் இத்தேசத்தில் ஸஞ்சாரம் செய்து கொண்டிருப்பார்களே; என்னைப்போல் எல்லாருக்கும் உபசாரம் நடப்பதானால் அதற்கென்று அளவில்லாமல் பொருள் செலவாகுமே. இவ்வளவுதூரம் செலவிட இடங்கொடுக்கும் பொருள் எங்கிருந்து வந்தது; எவ்வாறு வந்தது. குபேரன் பொக்கிஷமே ஒருவனுக்கிருந்தபோதிலும் அதுவும் போதாமற் போகுமே. உமது தேசத்திலிருந்து உமக்குக் கிட்டும் வருமானத்தை யோசித்துப் பார்த்தால் அது உங்கள் அரண்மனை சாப்பாட்டுச் செலவுக்குக்கூட போதாதுபோ லிருக்கிறதே. மற்றச் செலவுக்கோ எவ்வண்ணம் போதும் என்று சொல்லலாம். ஆகையால் இவ் வதிசயங்களை ராஜகுமாரத்தி தமது வாயால் வெளியிடுவாளாகில் நான் வெகு ஆனந்தமாய் காது கொடுத்துக் கேட்பேன். அதைக் கேட்டாற்றான் என் உள்ளங் குளிரும். அப்பொழுதுதான் நான் நீம்ரோஸ் நகரம் போவேன். நான் அவ்விடம் எப்படியாவது போய்ச் சேர்ந்து அச் சமாச்சாரம் முற்றிலும் தெரிந்து வருகின்றேன். எனக்கு ஈசன் ஆயுளை கெட்டியாய் வைத்திருக்கும் பக்ஷத்தில் நான் அவசியம் இச் சன்னிதானம் திரும்பிவந்து என்உள்ளத்திலிருக்கும் மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளுவேன் என்றேன்.

இதைக் கேட்டதும், ராஜ குமாரத்தி தானே வாய்மலர்ந்து "ஐயா இளைஞரே, உமக்கு இவ்விஷயங்களைப்பற்றி அறிந்து கொள்ள அதிக ஆசை யிருக்கின்றதென்றால், இன்றுகூட இங்கே தங்கியிரும். சாயங்காலம் உம்மை மறுபடி இவ்விடம் வரவழைத்து ஒன்றையாவது விடாமல் இவ்விஷயம் முழுவதையும் உமக்கு நான்தெரிவிக்கின்றேன்" என்றாள். நானிவ்வண்ணம் எனக்குண்டான மனச் சமாதானத்தால் களித்து என் வீடு சென்று எப்பொழுது சாயங்காலம் வரும், எப்பொழுது என் மனத்திலிருக்கும் ஆச்சரியம்

அடங்கும் என்று காத்துக் கொண்டிருக்கலானேன். அப்படி நானிருக்கும் பொழுது ஒரு கோஜா சில வேலைக்காரர்கள் தலையில் தட்டுகளில் போஜனம் வைத்து அழகாய் மூடி என் முன்பாகக் கொண்டுவந்து வைத்து "ராஜ குமாரத்தி தான் செய்யும் போஜனத்திலிருந்து உமக்கு சிறிது எடுத்து அனுப்பி யிருக்கின்றாள். அதை நீங்கள் புசிப்பீர்களாக" என்றான். இவ்வாறு சொல்லி அவன் அத்தட்டுகளின் துணியை எடுத்ததும், அவ்வுண்டிகளிலிருந்து கிளம்பிய வாஸனையால் என் மூளையே சுற்றலாயிற்று, என் ஆத்மாவே குளிர்ந்தது. என்னால் எவ்வளவு சாப்பிடமுடிந்ததோ அவ்வளவு சாப்பிட்டேன். மிகுந்திருந்ததை திருப்பி அனுப்பி அவ்வாறு என்னை கௌரவப் படுத்தியதற்காக நான் நன்றியுள்ளவனாக யிருப்பதை சொல்லி யனுப்பினேன். கடைசியாய் பகலின் பிரயாணியாகிய சூரியபகவான் அதிக நடையில் அலுத்து மலைவாயில் விழுந்து விடவே, சந்திரன் என்ற ராஜகுமாரி தமது தோழிமார்களுடன் தமது அரண்மனையை விட்டு வெளிக் கிளம்பினாள்; அப்பொழுது ஒரு தாதி என்னிடம் வந்து "புறப் படுங்கள்; ராஜ குமாரத்தி உங்களை அழைத்துவரக் கட்டளை யிட்டாள்" என்றாள்.

நானவளுடனே புறப்பட்டுச் சென்றேன். அவள் என்னை ஒரு தனி அறைக்கு அழைத்துப் போனாள். அங்கிருந்த விளக்குகளின் ஜோதியை நான் பார்த்தபொழுது ஷப்கதர் இருத்திகாதீபத்தின் ஜோதி ஒரு ஜோதியாகாது போலிருந்தது. ஒரு அழகான ரத்தன கம்பளத்தின் மேல் பொன் ஸரிகைத் துணியால் மூடப்பட்ட ஓர் ஆஸனம் வெகு அழகாகப் போடப்பட்டிருந்தது. அவ்வாஸனத்தில் நல்முத்துகளால் ஜூலர் தொங்கவிடப்பட்டு வைரக் கற்களால் பூ வேலை செய்யப்பட்ட அழகின தலையணை ஒன்று போடப் பட்டிருந்தது. அவ்வாஸனத்துக்கு மேல் நான்கு ஸ்தம்பங்களின் உச்சியில் ஓர் அலமானகிரி அதேவிதமாக முத்து ஜாலர் தொங்க விரிக்கப்பட்டிருந்தது. அவ்வாஸனத்துக்கு எதிரில் ரத்தனங்களால் விசித்திர வேலை செய்யப்பட்ட மரங்கள் மலர்களும் இலைகளும் இடைவெளிகளில் வைக்கப்பட்டு வெகு அழகாய் நாட்டப்பட்டிருந்தன. அவைகளைப் பார்க்குங்கால் அவைகள் [illegible] மாய்

கள் தானோ என்ற ஸந்தேகத்தை உண்டாக்கிற்று. இம்மரங்கள் பொன்னாலாகிய பாத்திகளில் நாட்டப்பட்டிருந்தன. அவ்வாஸனத்துக்கு எதிராக இருபக்கங்களிலேயும் இரண்டு வரிசையாக கட்டழகிகளான வேலைக்காரிகள் தங்கள் கைகளைக் கட்டிக்கொண்டு தங்கள் கால் கட்டைவிரல்களைப் பார்த்தவர்களாய் வெகு மரியாதையாக நின்றுகொண்டிருந்தார்கள். நாட்டியப் பெண்களும் வீணை முதலிய வாத்தியங்களை வாசிக்கும் பெண்களும் தங்கள் வாத்தியங்களை வித்தமாகவைத்துக்கொண்டு உத்தரவை எதிர்பார்த்து நிற்பவர்கள் போலக் காத்திருந்தார்கள். இக்காட்சியையும் இவ்வித ஏற்பாடுகளையும் நான் பார்த்ததும் என் புத்தி மயக்கமடைந்தது. என்னை அழைத்துப்போய்க் கொண்டிருந்த தாதியை நோக்கி "பகலிலோ அவ்வண்ணமான விநோதங்கள், இரவிலோ இவ்வித கோலாகலங்கள்; பகலை உற்சவதினமென்று சொல்லலாம். இரவை க்ஷப்பராத என்னலாம். ஸப்தலோகங்களுக்கும் மன்னவனாயிருக்கும் மன்னனரண்மனையில்கூட இவ்வளவு மகிமையான ஏற்பாடுகளும் இவ்வளவு தாராளமான செலவுகளும் இருக்க முடியாதே. இவ்வாறே நமது ராஜகுமாரி வீட்டில் எப்பொழுதும் இருக்கிறது வழக்கமா" என்றேன். அதற்கு அத்தாதி "ஐயா நீங்கள் இப்பொழுது கண்ட எல்லாவித ஏற்பாடுகளும் நமது ராஜகுமாரத்தி கிரஹத்தில் என்றென்றைக்கும் ஒரேமாதிரி நடக்கும் ஏற்பாடுகளேயன்றி ஒன்றும் புதிதல்ல. இவ்வித ஏற்பாடுகளுக்கு ஒருபொழுதும் குறைவே யிருக்கமாட்டாது. எப்பொழுதாவது இதைவிட அதிகமாக விருக்குமே யல்லாமல் ஒருபொழுதும் இதைவிடக் குறையாது. நீங்கள் இவ்விடம் உட்காருங்கள். ராஜகுமாரத்தி அடுத்த அறையி லிருக்கின்றாள். நீங்கள் இவ்விடம் வந்திருக்கும் ஸமாச்சாரத்தை நானவளிடம் தெரிவிக்கிறேன்" என்றாள்.

தாதி இவ்வாறு என்னிடம் சொல்லிவிட்டுப் போனாள், உடனே திரும்பிவந்து, ராஜகுமாரி என்னை அழைத்துவரச் சொன்னதாகச் சொல்லி அழைத்துப் போனாள். நான் அவளிருந்த அறைக்குள் புகுந்ததும், திகைத்து நிற்கலானேன். வாயிற்படி எங்கே, எது எவ்விடம் என்பது எனக்குப் புலப்படவில்லை. ஏனெனில் [illegible] [illegible] அலெப்போ (Aleppo) [illegible] நாற்புறங்களிலேயும்

வைக்கப்பட்டிருந்தன. அக்கண்ணாடிகளின் சட்டங்கள் பச்சைக் கற்களாலும் வைரக் கற்களாலு மிழைக்கப்பட்டிருந்தன. ஒன்றின் சாயை மற்றொன்றின் மேல் விழுந்தபடியால் அவ்விடம் முழுமை யும் இரத்தினக் கற்களா லிழைக்கப்பட் டிருந்தனவோவென்ற ஸந்தேகத்தை உண்டாக்கின. அவ்வறையின் ஒரு பக்கத்தில் திரை ஒன்று போடப்பட்டிருந்தது. அத்திரையின் பின் பக்கத்தில் அவ் விராஜகுமாரத்தி உட்கார்ந்திருந்தாள். என்னை அழைத்துப் போன அத்தாதி அத்திரைக் கருகாமையில் உட்கார்ந்தாள். என் னையும் அவளுக்குச் சமீபத்தில் உட்காரச் சொன்னாள். இராஜ குமாரத்தி செய்த உத்தரவுப்படி பின்வருமாறு அவள் அக்கதை யைச் சொல்லலானாள்:—

வெகு புத்திசாலியான இளைஞரே கேளுங்கள்; இத்தேசத்து அரசன் ஓர் பெரிய அரசனாக இருந்தார்; அவருக்கு ஏழு பெண் குழந்தைகள் பிறந்தார்கள்; ஒரு நாள் அரசன் மாளிகையில் உற்சவதினங் கொண்டாடினார்கள். அப்பொழுது அப்பெண்கள் ஒவ் வொருத்தியும் 16-வகை சிங்காரம் 12-வகை அலங்காரம் கூந் தலில் யானை நல்முத்து இவைகளை செய்துகொண்டு அரசன் முன்பு வந்து நிற்கலானார்கள். அப்பொழுது அரசன் உள்ளத்தில் என்ன தோன்றிற்றோ என்னவோ, நீங்கள் எல்லோரும் எனக்கு பெண்களாய் பிறக்காமல் ஒரு ஏழைவீட்டில் பிறந்திருந்தீர்களே யானால் உங்களுக்குஇராஜ குமாரத்திகள் என்றபட்டம் எவ்வண்ணம் வந்திருக்கும். ஆகையால் உங்களுக்கு இராஜ குமாரத்திகள் என்ற பட்டம் கிட்டினதற்காக ஈசனைத் துதியுங்கள். இவ்வளவுவித நகை களைப் போட்டு சிங்காரித்துக்கொண்டு நீங்கள் ஆனந்தப்படுவது நான் உயிரோ டிருப்பதாலன்றோ? என்றார்.

அதற்கு ஆறு ராஜ குமாரத்திகள் ஒரே வாக்காய் "மண்ட லாதிபதியே, தாங்கள் சொல்லுவ தவ்வளவும் உண்மை. தாங்கள் க்ஷேமமா யிருக்கும் வரையிற்றான் எங்கள் பாக்கியம்" என்றார்கள். நமது ராஜ குமாரி மட்டும் எல்லாப் பெண்களுக்குள்ளும் கடைசி யானவளா யிருந்தாலும் புத்தியிலும் யுக்தியிலும் அப்பொழுது முதலே மேலானவளாகையால், தமது தமக்கைகள் சொன்ன மறு மொழியுடன் சேர்ந்து, தான் ஒன்றும் சொல்லாமல் வாயை மூடிக் கொண்டிருந்தாள். அவள் அப்படி வாய் மூடிக்கொண்டிருந்ததற்கு

முக்கிய காரணம் என்னவென்னில், அப்படிச்சொல்லுவது பாபம் என்பதேயாம். அப்பொழுது அரசன் கண்களில் கோபத் தீ பறக்க அவளைப்பார்த்து, ஏன் நீ ஒன்றும் பதில் சொல்லவில்லை. இதற்குக் காரணம் என்ன? என்றார். அதற்கு இவ்விராஜகுமாரத்தி தமது உருமாலால் தமது இரு கைகளையும் கட்டிக்கொண்டு, "தந்தையே! என் குற்றத்தை மன்னித்து, எனக்கு உயிர்ப்பிச்சை அளிக்கும் பக்ஷத்தில் உங்கள் அடிமையாகிற நான் என் உள்ளத்திலிருக்கிறதை வெளியிடுவேன்" என்றாள். அற்கு அரசன் "நீ சொல்லநினைத்திருப்பதைச் சொல்லு" என்று உத்திரவிட, அவள் "மன்னவரே தாங்களே கேட்டதில்லையா, உண்மையை எடுத்துச் சொன்னால் அது எப்பொழுதும் கசப்பாகவிருக்கு மன்றோ; ஆகையால் நான் இச்சமயத்தில் என் உயிரின் மேலிருக்கும் ஆசையை ஒழித்து விண்ணப்பஞ் செய்து கொள்ளப் போகின்றேன். என் தலையில் என்ன எழுதி யிருக்கிறதோ அதை நான் ஒருபொழுதும் நீக்க முடியாது; நாம் காலால் ஓடியாடி காலைத் தேய்த்துக்கொண்டு திரிகின்றவர்களா யிருந்தாலும் சரி, அல்லது சௌக்கியமாக ரத்தனக் கம்பளத்தில் தலைவைத்துத் தூங்குகின்றவர்களா யிருந்தாலும் சரி, தலையில் என்ன எழுத்து எழுதி யிருக்கின்றதோ அது நடந்தே தீரும். ஸர்வக்ஞனை எத்தெய்வம் உங்களை அரசனாகப் பண்ணினானோ அவனேதான் என்னையும் அரசன் வீட்டில் பிறந்து ராஜகுமாரத்தியா யிருக்கப் படைத்தான். சர்வ சக்தி என்று சொல்லப்படும் அவர் கோசத்தின்மேல் அதிகாரம் ஒருவருக்குமில்லை. தாங்கள் என்னை ஆளும் அரசன், என்னை ரக்ஷிக்கும் தந்தை, தங்களுடைய ஸ்ரீபாத தூசிகளை மையாகப்பண்ணி நான் என் கண்களில் இட்டுக்கொள்ள வித்தம். அது என்னை எப்பொழுதும் கௌரவப் படுத்தும். ஆனால் ஒவ்வொருவருடைய அதிருஷ்டமும் அவரவருடைய தலையிலேயே ஏற்கெனவே எழுதப்பட்டிருக்கிறது" என்றாள்.

இதைக் கேட்டதும் அரசனுக்குக் கோபம் பொங்கிவிட்டது. இவ்வாறு ராஜகுமாரத்தி சொன்னது அவருக்கு முற்றிலும் வருத்தத்தை யுண்டாக்கியபடியால் அவர் வெகு கோபத்துடன் சிறுவாய்! வாய் பெரும்பேச்சு! இவளுக்கு இதற்கு இது தான் தண்டனை:— இவள் கைகளிலும் கழுத்துகளிலும் அணிந்திருக்கும் எல்லா நகைகளையும் ஒன்றில்லாமற் கழற்றிப் பிடுங்கிக்கொண்டு ஒரு மேனாப்

பல்லக்கில் இவளை ஏற்றி மனுஷப்பூண்டே யில்லாத ஒரு பெரும் பாலைவனத்தில் இவளை விட்டு வாருங்கள், இவள் தலையில் என்ன எழுதியிருக்கிறதோ பார்ப்போம் என்று உத்தரவிட்டார்.

அதே நடு இரவில், எவ்விரவின் இருள் வடிக்கட்டி எடுத்த இருள்போ லிருந்ததோ அந்த இரவில், எந்த ராஜ குமாரி வெகு செல்வமும், சிறப்புமாக வளர்க்கப்பட்டு தமது அரண்மனையைத் தவிர வேறு இடமே பார்க்காம லிருந்தாளோ அவளை போயிகள் தூக்கிக்கொண்டுபோய் எக்காட்டில் ஊர்வன பறப்பன கூட யிருந்த தாகத் தெரியவில்லையோ, எக்காட்டில் மனித வாஸனையேயில்லையோ அக்காட்டில் விட்டுவிட்டு திரும்பிப் போனார்கள். அப்பொழுது அவ் விராஜ குமாரியின் மனம் பதைத்த வகையை எவ்வாறென்று சொல் லுவேன். எவ்விதமான பதவியிலிருந்து என்ன நிலைமைக்கு வந்து விட்டாள்! அப்பொழுதும் அவள் ஈசன் கருணையை முற்றிலும் நம்பி ஈசனைத்தோத்திரம் பண்ணலானாள். கடவுளே! சர்வ சக்தி யுள்ளவன் நீயன்றோ! என்ன நினைத்தாயோ அதைச் செய்தாய்; என்ன நினைக்கின்றாயோ அதைச் செய்வாய்: இனி என்ன நினைப் பாயோ அதையும் செய்வாய்; எது வரையில் என்மூக்கோட்டைகளில் சுவாஸம் ஓடுகின்றதோ அதுவரையில் உன் கருணையில் நான் நம்பிக்கை வைக்காமலிருக்கவேமாட்டேன் என்று சொல்லி ஸ்தோத்திரத்தில் கண் மூடினாள்; பொழுது விடிய ஆரம்பித்ததும் இராஜகுமாரியின் கண்கள் திறந்தன. பல் தேய்த்து முகங்கழுவ நீர் கொண்டுவா என்று வேலைக்காரிகளைக் கூப்பிட்டாள். உடனே அவளுக்கு இரவு நடந்த ஸங்கதி ஞாபகத்தில் வந்தது. அப்பொ ழுது அவள் ஆகா! நீ யார்? இப்பொழுது இந்தப்பேச்சு உனக்கு இனி தகுந்தப் பேச்சா என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள். இவ்வாறு சொல்லிக்கொண்டு எழுந்து மணலால் கைகால்களை சுத்தி செய்துகொண்டு ஈசுவரனைப் பிரார்த்தித்தாள். அவனைப் பலவாறு துதிக்கலானாள். ஓ இளைஞரே! அக்காலத்தில் இராஜ குமாரிக் கிருந்த மனஸங்கடத்தை நினைத்தால் எவன் மனந்தான் விண்டு போகாது. அந்த அவஸ்தை என்ன வென்று இவ்விளங் குழந்தை மனத்தை யன்றோ கேட்டறியவேண்டும்.

கடைசியாய் அம்மேனாப் பல்லக்கிலேயே உட்கார்ந்துகொண்டு ஈசனிடம் நம்பிக்கை வைத்தவளாய் ஒரே பாட்டைப் பாடிக்கொண்டிருந்தாள்:—

எப்பொழுது எனக்கு நீ பல்லைக் கொடுக்காமலிருந்தாயோ அப்பொழுது நீ என் தாயிடம் பால் கொடுத்து என்னை வளர்த்தாய்; எப்பொழுது எனக்கு பல்லைக் கொடுத்தாயோ அப்பொழுது அன்னத்தைக் கொடுத்து என்னை வளர்க்க மாட்டாயா? ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகள், பூமியில் ஸஞ்சரிக்கும் மிருகங்கள் இவைகளுக்கெல்லாம் படியளக்கும் கடவுள் உனக்கும் அவ்வளவு படி அளக்க மாட்டானா! அப்படியிருக்க, ஏன் நீ துக்கப்படுகின்றாய். துக்கப்படுகின்றவன் மூடனன்றோ! துக்கப்படுவதால் ஆவது ஒன்றுமில்லை. ஈசன் தன்னை அறிந்த அஸ்திகனுக்கும் படியளக்கின்றான். நாஸ்திகனுக்கும் அளக்கின்றான். உலகத்திலுள்ள எல்லாருக்குமளக்கின்றான். அவ்வாறு உனக்கும் படி அவசியம் அளப்பான்.

எப்பொழுது நம்மால் ஒன்றும் செய்ய முடியாமற் போகின்றதோ அப்பொழுதுதான் ஈசனை நாம் பஜிக்கின்றோம் என்பது திண்ணம். அதில்லாதக்கால் ஒவ்வொருவனும் தான் ஓர் சுகமன் என்றும் அல்லது பூ அலிஷின என்றும் எண்ணிக் கொள்ளுகிறான்.* ஈசன் செய்த விந்தையான காரியத்தைக் கேளுங்கள். இவ்வாறு துதியில் மூன்று இரவுகளும் பகல்களும் கடந்தன. ராஜ குமாரி அதுவரையில் ஒரு கவளம் அன்னம் கூட தன் வாயில் போட்டுப் புசித்தவளில்லை. பூப்போலிருந்த அவள் தேகம் உலர்ந்து முள் போலாயிற்று. பொன் போலச் சோபித்த அவள் மேனி காய்ந்த மஞ்சள் போலாயிற்று. வாய் உலர்ந்து ஒட்டிக்கொள்ளலாயிற்று. கண்கள் இருளடைந்து மயங்கிவிட்டன. மூச்சு ஒன்றேதான் வெளி வருவதும் உட்புகுவதுமாயிருந்தது. மூச்சுக் காற்று எதுவரையிலுண்டோ அதுவரையில் ஆசையுமுண்டல்லவா. நான்காம் நாள் சூர்யோதயமானவுடன் ஒரு பக்கிரி வெகு அழகான

* இரண்டு இல்லாம் கியானிகள்—சுக ரிஷி என்றும் ஜனக ரிஷி என்றும் எண்ணிக் கொள்ளுகிறான் என்றபடி.

மேனியுடன் விளங்கிக்கொண்டு * கிஸர் என்னும் மஹாத்மா போல் தோற்ற முள்ளவராய் அவ்விடம் தோன்றினார். அந்நிலைமையிலிரு ந்த அந்த ராஜகுமாரத்தியைப் பார்த்து, "பெண்ணே, உன் தந்தை அரசன் என்றாலும் இந்த அவஸ்தை உன் தலையில் எழுதப்பட்டிரு ந்தது. ஆனால் இதோ வந்திருக்கும் இக்கிழவனாகிய பக்கிரியை உனது அடிமையாகக் கருது: உன்னைப் படைத்த ஆண்டவனை இர வும் பகலும் தியானித்து வா: ஆண்டவன் எப்பொழுதும் உனக்கு நன் மையையே செய்வார்" என்றார். பிறகு பக்கிரிகளிடம் என்னென்ன ஆகாரமிருக்குமோ அவைகளை அவர் தன் பையை அவிழ்த்து எடு த்து ராஜகுமாரியிடம் கொடுத்து அவைகளில் சொற்பம் அவள் புசிக்கும்படி செய்தார். அதன் பிறகு தண்ணீரைத் தேடச் சென் றார். அங்கு மிங்கும் ஓடித்தேடி ஒரு கிணற்றைக் கண்டார். தோண்டிக்கும் கயிற்றுக்கும் என் செய்வார். ஏதோ ஒரு மரத்தி லிருந்து ஓர் இலை பறித்து அதை ஒரு தொன்னையாகத் தைத்தார். தானிடுப்பில் கட்டியிருந்த கச்சைப்பட்டையை யவிழ்த்து அதைக் கயிறாகப் பண்ணி அதில் அத்தொன்னையைக் கட்டி கிணற் றில் விட்டார். அதனால் இழுத்த ஜலத்தைக் கொண்டு வந்து ராஜகுமாரிக்குக் கொடுத்தார். அவ்வாறு அவளுக்கு உணவும் தீர்த்தமும் அளித்தார். இவ்வாறு புசித்த பின்னர் அவளுக்கு பிரக்ஞை வந்தது. அவ்வீசனடியார் அந்த இராஜகுமாரி யிருந்த திக்கற்ற நிலைமையையும் அவள் தனிமையையும் கண்டு எவ்வளவோ தைரியம் சொல்லி அவள் மனதைத் தேற்றி வைத்தார். தான் அவளுக்காக வெகு துக்கப்பட்டார். அவர் அவ்வண்ணம் மனப்பூர்வ மாய் தனக்காக வருந்தியதைக் கண்டும் அவர் செய்த ஆறுதலைக் கேட்டும் அவ்விராஜகுமாரத்தி சொற்பம் சாந்த மடைந்தாள். அன்று முதல் அப்பக்கிரி காலையில் எழுந்து பட்டணத்துக்குள் சென்று பிச்சை வாங்குவதும் பிச்சையில் கிடைக்கும் உணவைக் கொண்டு வந்து இராஜகுமாரத்திக்குக் கொடுப்பதும் வழக்க மாயிருந்தது.

* கிஸர் இஸ்லாம் மஹாத்துமாக்களில் ஒருவர். அவர் சிரஞ்சீவியாம். அவர் இன்றைக்கும் உயிருடனிருந்துகொண்டு ஈசனடியார்களில் ஒருவராய் உலகமெங்கும் சஞ்சரிக்கின்றார் என்பது இஸ்லாம் மதத்தின் கொள்கை.

இவ்விதமாய் சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் ராஜகுமாரத்தி தலையில் சொற்பம் எண்ணெய் தடவி தலையை வாரிக்கொள்ள கூந்தலை அவிழ்த்தாள். அப்பொழுது ஒரு பெரிய நல் முத்து அதிலிருந்து கீழே விழுந்தது. அதை ராஜகுமாரத்தி அப்பக்கிரியிடம் கொடுத்து ஐயா இதை நகரத்துக் கடையில் விற்று இதால் வரும் பணத்தைக் கொண்டு வாருங்கள் என்றாள். அவரும் அதை அப்படியே விலைப்படுத்தி அப்பொருளை ராஜ குமாரத்தியிடம் கொண்டு வந்து கொடுத்தார். அதன் பிறகு அவள் அப்பக்கிரியிடம் "ஐயா, நாம் குடியிருக்க இவ்விடத்திலேயே ஒரு குடிசை கட்ட, தாங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும்" என்றாள். அதற்கு அவர் "பெண்ணே, சுவருக்கு அஸ்திவாரம் மெல்ல வெட்டு; களிமண்ணை ஒரு பக்கமாகச் சேர்த்து வை; நான் என்றைக்காவது ஒரு நாள் தண்ணீர் கொண்டு வந்து மண்ணைப் பிசைந்து சுவர் வைத்து நீ குடி யிருக்க ஒரு குடிசை கட்டித் தருகின்றேன்" என்றார். அப்படி அவர் சொன்னதும் ராஜ குமாரத்தி சுவர் எடுப்பதற்காக அஸ்திவாரம் தோண்ட ஆரம்பித்தாள். ஒரு கஜ ஆழம் தோண்டினதும் பூமியின் கீழ் ஒரு கதவு அவள் கண்களுக்குத் தென்பட்டது. அவள் அக்கதவின் மேலிருந்த மண்ணை அப்புறப்படுத்தி அதைத் திறந்ததும் ரத்தினங்களும் பொன் நாணயங்களும் குவிக்கப்பட்டிருந்த ஓர் அறையைக் கண்டாள். உடனே நான்கு ஐந்து பிடி தங்க நாணயங்களை மட்டும் எடுத்துக் கொண்டு மறுபடி அக்கதவை மூடி அதன் மேல் மண்ணைத் தள்ளி அஸ்திவாரத்தை நிரவினாள். இதற்குள் பக்கிரியும் வந்து சேர்ந்தார். அப்பொழுது ராஜ குமாரத்தி அவரை நோக்கி, "ஐயா, கல்தச்சர்கள், கொல்லத்து வேலை செய்கின்றவர்கள், வீடு கட்டும் வேலை ஒவ்வொன்றிலும் தேர்ந்த மல்லர்கள், இவர்களை எல்லாம் தாங்கள் பார்த்துக்கொண்டு வரவேண்டும். குபேரன் மாளிகையோ என்று பார்க்கின்றவர்கள் சொல்லும்படியாக நாம் இவ்விடம் ஒரு * மாளிகை அமைக்க வேண்டும். இந்திர விமான

---

* கிஸ்ரா—நீமான் என்று புஸ்தகத்திலிருக்கின்றது. இவர்கள் வெகு பிரஸித்த அரசர்கள். இவர்கள் பெயரை தமிழ் நடைக்காக குபேரன் மாளிகை, இந்திரன் விமானம் என்று மாற்றினோம். அப்படி மாற்றாத பக்ஷத்தில் கிஸ்ரா மாளிகையோ அல்லது நீமான் விமானமோ என்று படிக்க வேண்டும்.

த்தை விட அது அழகாயிருக்க வேண்டும். நாம் கட்டப்போகும் அரண்மனையைச் சுற்றிக் கோட்டைச் சுவர், அகழ், தோட்டம், கிணறு, தேச சஞ்சாரம் செய்கின்றவர்கள் வந்திறங்க வெகு விசால மான சத்திரம் இவைகளை எல்லாம் நாம் வெகு அழகாகக்கட்ட வேண்டும். முதல் முதல் இவைகளுக்கெல்லாம் ஒரு படம் (பிளான்) ஒரு காகிதத்தில் எழுதி அதை என்னிடம் காட்டுங்கள்" என்றாள்.

பக்கிரி அவ்வாறே ஒவ்வொரு வேலையிலும் தேர்ந்த ஆட்களைப் பொறுக்கி எடுத்து அவர்களை வேலை செய்ய சித்தமாக ராஜகுமாரி முன்பு கொண்டு வந்து சேர்த்தார். ராஜகுமாரத்தி கட்டளைப்படி எல்லாவித வேலைகளுமாரம்ப மாயின. பொறுப்பும் நம்பிக்கையு மான ஆட்களை ஒவ்வொரு வேலையிலும் பக்கிரி பொறுக்கிப் பொறு க்கி நியமிக்கலானார். அவ்வாறு வெகு அழகான கட்டடங்கள் கட் டப்படும் சமாசாரம் சொற்பம் சொற்பமாய் இராஜகுமாரத்தியின் தந்தையாகிய ராஜாவுக்கு எட்டிற்று. அதைக்கேட்டு வேந்தன் வியப் புற்று ஒவ்வொருவரிடமும் "இவ்வாறு மாளிகைகள் கட்டுகின்ற வன் யார்?" என்று விசாரிக்கலானார். ஒருவருக்காவது அச்சமா சாரம் ஒன்றும் தெரியாதாகையால் ஒருவராலாவது அதற்கு மறு மொழி சொல்ல முடியவில்லை. அப்பொழுது எல்லாரும் தங்கள் காதை கையால் பொத்திக்கொண்டு "தங்கள் அடிமைகளுள் ஒரு வனுக்காவது அவ்வாறு மாளிகைகள் கட்டுகின்றவன் யாவன் என் பது தெரியாது" என்றார்கள். அப்பொழுது அரசன் தமது பிரபுக் களில் ஒருவரிடம் பின்வருமாறு சமாசாரம் சொல்லி யனுப்ப லானார்:--"நான் நீங்கள் கட்டும் அழகான மாளிகைகளை வந்து பார்க்க ஆசை கொண்டிருக்கின்றேன். நீங்கள் இன்ன தேசத்து ராஜகுமா ரத்தி என்பது எனக்குத் தெரியவில்லை. எந்த வம்சத்தைச் சேர்ந்த வர்கள் என்பதும் புலப்பட வில்லை. இவைகளை யெல்லாம் விசாரிக் கும்பொருட்டு நாம் அவ்விடம் நேரில் வர உத்தேசிக்கிறோம்" என்று சொல்லி யனுப்பினார்.

இவ்விதமான அனுகூல ஸமாசாரத்தை ராஜகுமாரி கேட்ட தும் மனத்தினுள் வெகு ஆனந்த மடைந்து மறு கடிதம் எழுதலா னாள்:— "உலகத்தைப் பாதுகாக்கும் வேந்தனுக்கு என்றென்றைக்

கும் க்ஷேமமுமுண்டாவதாக, தங்களுடைய மேலான ராஜ ஸமூகம் ஏழையாகிய என் குடிசைக்கு வரும் ஸமாசாரம் கேட்டு ஆனந்தக் கடலில் மூழ்கினேன். உங்கள் அடிமையாகிய என்னை இது மிக வும் மேன்மைப்படுத்திக் கௌரவம் செய்து விட்டது. நீங்களிருக் கும் இடம் எவ்வளவு புண்யம் பெற்றதோ; உங்கள் பாதம் பட்ட பெருமை ஒன்றே போதாதா. எங்கு தங்கள் கருணா கடாக்ஷம் இடை விடாமல் விழுந்துகொண்டிருக்கின்றதோ அங்கிருக்கின்ற வர்களுடைய க்ஷேமத்துக்கு குறைவுமுண்டோ. அவ்விடமும் அக்குடிகளும் எப்பொழுதும் பாக்கியம் படைத்தவர்கள். நாளை வியாழக்கிழமை நல்ல நாள்; இப்புழுக்கையாகிய எனக்கு தங்கள் தர்சனம் நாளைக் கிடைக்கப்போகின்றமையால் நாளை எனக்கு யுகாதி தினத்தைக் காட்டிலும் மேலான நாள். தங்கள் வரவு ஸூர்ய பகவான் தர்சனத்துக்கு ஒப்பானதன்றோ. ஏதோ இவ்விடம் தாங் கள் தோன்றி ஜ்வலிக்கும் தங்கள் காந்தியால் ஒருவித உபயோகமு மில்லாத தூசாகின்ற எனக்கு ஏதோ சொற்பம் பெருமையையும் கௌரவத்தையும் அளியுங்கள். இப்புழுக்கை கொடுக்கும் உணவை சொற்பம் அங்கீகரித்துக் கொள்ளுங்கள். இப்படிச் செய்வதானது தங்கள் ராஜ ஸமூகத்தினுடைய உதார குணத்துக்கும் பெருமைக் கும் ஏற்றதாக விருக்கும்; இதற்கதிகமாக எழுதுவது எனது மரியாதையை நான் மீறுவதாகும்". என்று கடிதம் எழுதி அந்தப் பிரபுவிடம் கொடுத்து அவருக்கும் தக்க மரியாதை செய்து அனுப்பினள்.

அரசனும் அக் கடிதத்தைப் படித்து, "நீர் நம்மை அழைத் ததை நாம் ஒப்புக்கொண்டோம்; நாளை தப்பாமல் வருகின்றோம்" என்று ஸமாசாரமனுப்பினன். உடனே ராஜகுமாரத்தி தமது வேலைக்காரர்கள் எல்லாரையும் கூப்பிட்டு அரசர் விருந்துக்கு ஏற்ற படி எல்லா ஏற்பாடுகளையும் வெகு அழகாகவும் சிறப்பாகவும் செய்ய வேண்டும் என்றும் அவைகளைக் கண்டும் அவ்வுணவை உண்டும் அரசர் அத்யந்த திருப்தி அடைய வேணும் என்றும், அவருடன் வரும் எல்லாப் பிரபுக்களும் பெரிய மனிதர்களும் வெகு திருப்தி யாய் ஸந்தோஷப்பட்டு திரும்பிப்போக வேண்டும் என்றும் கட்டளை யிட்டாள். வெகு கண்டிப்பாய் ராஜகுமாரி அவ்வண்ணம் உத்தர

விட்டிருந்தபடியால் எல்லாவித உண்டிகளும், உப்பு கலந்தது தித்திப்பு கலந்தது இன்னும் மற்றவைகள் எல்லா வகைகளும் எவ்வளவு ருசியாக சமையல் செய்யப்பட்டிருந்தன என்றால், அவைகளை சொற்பம் ஒரு பிராமணப் பெண் புசித்திருப்பாளே யானால் வேண்டாம் எனக்கு வேதம் என்று சொல்லி கொரான் படிக்க ஆரம்பிப்பாள். ஸாயுங்கால மானதும் அரசர் ஓர் திறந்த சிங்காசனத்திலேறி ராஜ குமாரத்தியின் மாளிகைக்கு வந்தார். ராஜ குமாரத்தியும் தமது தோழிகளுடன் எதிர் சென்று அரசரை உபசரித்து தமது மாளிகைக்குள் அழைக்கலானாள். அரசருடைய சிங்காசனத்தை ராஜகுமாரி கண்ணுற்றதும் வெகு மரியாதையாக வெகு நாள் மரியாதையில் பழகினவள் போல் அதன் முன்பு நின்று நமஸ்காரம் செய்யலானாள். இவள் இவ்வாறு செய்யக்கண்டதும் அரசருடைய வியப்பு இன்னு மதிகமாகப் பெருகலாயிற்று. அதே மரியாதையுடன் அவள் அரசரை நடத்தி தாம் அரசருக்கு என்று கல்லிழைத்து வைத்திருந்த ஸிங்காசனத்தில் அவரை உட்கார வைத்தாள். அச் சிங்காசனம் போடப்பட்டிருந்த திட்டாணியோ ஒன்றேகால் லக்ஷம் ரூபா வெள்ளியால் கட்டப்பட்டிருந்தது. அதன்மேல் 101 தட்டு ரத்தினக் கற்கள், தங்க பாணயங்கள், கம்பளங்கள், சால்வைகள், நட்டுகள், குத்தனிகள், ஸரிகை புட்டாபோட்ட உடுப்புகள் முதலியன காணிக்கையாக வைக்கப்பட்டிருந்தன. இன்னும் அரசருக்குக் காணிக்கையாக இராக் தேசத்து யானைகள் இரண்டு, யாமன் தேசத்து குதிரைகள் பத்து, கல்லிழைத்த அம்பாரி சேணம் முறையே கட்டப்பட்டவைகளாய் சித்தமாய் நின்றுகொண்டிருந்தன. இவைகளை எல்லாம் அந்த ராஜகுமாரி அரசருக்குக் காணிக்கையாகக் கொடுத்தாள். தான் தனது கைகளைக் கட்டிக்கொண்டு அவருடைய அடிமைபோல் முன் நிற்கலானாள். அரசரும் வெகு மரியாதையுடன் "அம்மணி, நீர் எத்தேசத்து ராஜகுமாரி. எக்காரணத்தை உத்தேசித்து இவ்விடம் வந்தீர்கள்" என்றார்.

ராஜ குமாரத்தியும் உடனே அரசரை வணங்கி பின் வருமாறு பதில் சொல்லத் தொடங்கினாள்:—இப்புழுக்கை பழைய குற்றவாளி; எவளொருவள் அரசருடைய கோபத்தின் காரணத்தால் காட்டுக்கு ஓட்டப்பட்டாளோ அப்பாவியே நான். அன்றியும் தாங்கள் இப்பொழுது பார்க்கும் வஸ்துக்கள் யாவும் ஈசன் எனக்குத்

தனது கருணையால் கொடுத்த வஸ்துக்கள். இப்பேச்சைக் கேட்டதும் அரசனுக்கு பிதிருவாஞ்சையால் ரத்தம் கொதித்தது. ஆனந்த பாஷ்பம் வடித்துக்கொண்டு தானுட்கார்ந்திருந்த சிங்காசனத்தை விட்டு எழுந்து தமது குழந்தையைக்கட்டி யணைத்து, உச்சி முகந்து, அவள் கையைப்பற்றி அன்புடன் அழைத்து தமது சிங்காசனத்துக் கருகாமையிலிருந்த மற்றொரு ஆசனத்தில் உட்காரவைத்தார். என்ன வென்றாலும் அரசர் தான் கண்ட காட்சியின் காரணத்தால் திகைத்துப் பிரமித்து உட்கார்ந்துவிட்டார். உடனே ராணியையும் மற்றக் குழந்தைகளையும் அந்தக்ஷணமே அவ்விடம் வரும்படி சொல்லி ஒரு ஆளை அரண்மனைக்கனுப்பினர். அவர்கள் வந்ததும் தாயும் தமக்கைமார்களும் அவளை உடனே தெரிந்துகொண்டு அவளை ஸந்தோஷத்தால் கட்டிக்கொண்டு ஆனந்த பாஷ்பம் வடிக்கலானார்கள். ஈசனைத் துதிக்கலானார்கள், அப்பொழுது இராஜகுமாரத்தி தமது தாயாருக்கும் தமக்கைகளுக்கும் எவ்வளவு பொன்களும் நகைகளும் கொடுத்தார்கள் என்றால், அவ்வாறு கொடுத்தவைகளையும் இவ்வுலகத்தில் உள்ள எல்லா ஸம்பத்தையும் ஒரு திராசின் இரண்டு தட்டுகளில் வைத்தால் அவள் காணிக்கை கொடுத்தவை வைக்கப்பட்ட தட்டு அதிக பாரமாக விருக்கும். அப்பொழுது அரசரும்எல்லாரையும் தம்முடன் உட்கார வைத்துக் கொண்டு தமக்காக வென்று ஸித்தப்படுத்தப்பட்டிருந்த விருந்தை ஸந்தோஷமாகப் புசிக்கலானார்.

எதுவரையில் அரசர் உயிருடனிருந்தாரோ அதுவரையில் அவர் தமக்கிஷ்டமான போதெல்லா மிவ்விடம் வருவார். சில வேளையில் ராஜகுமாரத்தியைத் தம்முடன் தம் மாண்மனைக் கழைத்துப் போவார். எப்பொழுது அரசருக்குக் காலமாயிற்றோ அப்பொழுது முதல் 'இத்தேசம் இவ்விராஜகுமாரத்தியின் ஆளுகையில் வந்தது. ஏனெனில் இவளைத் தவிர வேறொருவரும் ராஜ்ஜிய பரிபாலனம் பண்ணத்தக்கவர்களாய் அந்த வமிசத்திலில்லை. ஓ இளைஞரே ! இப்பொழுது நீங்கள் கேட்டீர்களே இதுதான் இவ்விராஜ குமாரத்தியின் கதை. கடைசியில் சொல்லுகிறது என்னவெனில், ஈசன் கொடுக்கும் பொருளுக்கு ஒரு நாளும் குறைவேயில்லை. ஆனால் எண்ணம் மட்டும் நல்ல எண்ணமாயிருக்க வேண்டும். அப்படி மட்டு மிருந்துவிட்டால் ஒருவன் எவ்வளவுக் கெவ்வு

ளவு செலவிடுகின்றானோ அவ்வளவுக் கவ்வளவு வளர்ந்துகொண்டே யிருக்கும். ஈசனுடைய அபார சக்தியைக் கண்டு ஆச்சரியப்படு வது ஒரு மதத்திலாவது ஸரி என்று ஒப்புக்கொள்ளப்படமாட் டாது என்று அத்தாதி இவ்வாறு இக்கதையைச் சொல்லி முடித்து "நீங்கள் நீம்ரோஸ் போவதற்கும் அவ்விஷயத்தை ஸரியானபடி விசாரித்து வருவதற்கும் நிச்சயஞ் செய்திருப்பவர்களே யானால் உடனே புறப்படுங்கள்" என்றாள். அதற்கு நான் "இதோ இந்த நிமிஷமே புறப்பட்டுவிட்டேன். ஈசன் கருணைமட்டு மிருந்தால் வெகு சடுதியில் திரும்பி வருகின்றேன்" என்றேன். அவ்வாறு சொல்லி அவ்விராஜ குமாரியிடம் விடைபெற்று ஈசன் என்னைக் காப்பாற்றுவான் என்று நம்பி நான் நீம்ரோஸுக்குப் பிரயாண மானேன்.

ஒருவருஷகாலம் எவ்வளவோ சிரமப்பட்டு வழி நடந்து இடையில் எவ்வளவோ சங்கடங்களை அனுபவித்துக்கொண்டு கடை சியாய் நீம்ரோஸ்பட்டணம் போய்ச் சேர்ந்தேன். அங்கிருந்த பிர புக்கள் ஏழைகள் முதலான எல்லா ஜனங்களும் கறுப்பு உடுப்பு உடுத்தியிருந்தார்கள். நான் அவ் விஷயத்தைப்பற்றி எவ்வாறு கேட்டிருந்தேனோ அவ்வாறே கண்டேன். அவ்விடம் சேர்ந்த சொற்ப நாளைக்கெல்லாம் (புதுச்சந்திரனைப் பார்க்கும் தினத்தின் சாயங்காலம்) வந்தது; மாதத்தின் முதனாளாகிய அந்நாளில் சிறி யோர் பெரியோர் குழந்தை பிரபுக்கள் ராஜகுமாரர்கள், ஆண்பெண் ஆகிய அந்நகரத்து ஜனங்கள் எல்லாரும் ஊருக்கு வெளியே யிருந்த ஒரு பெரும் மைதானத்தில் கூடினார்கள். நானும் அதைக்கண்டு குழம்பி ஒன்றும் செய்யத் தெரியாதவனாய் அக்கூட்டத்துடனே சென்றேன். என் நாட்டையும் ஆஸ்திகளையும் விட்டுப்பிரிந்து பக்கிரியின் காஷாய உடை பூண்டு நான் அந்த நீம்ரோஸின் ஆச்சரி யத்தைப் பார்ப்பதற்காகவும் ஒன்றும் புரியாத அந்த ரகசியத்திலி ருந்து என்ன விளங்கப்போகிறது என்று அறிவதற்காகவும் அங்கு வந்தவனன்றோ! அச்சமயத்தில் வாயில் நுரை தள்ளும் ஒரு எருதின் மேலேறி சவாரி செய்துகொண்டும், அட்டகாசம் செய்து கொண்டும், பயங்கரமாய் கூச்சலிட்டுக்கொண்டும் காட்டிவிருந்து எங்களை நோக்கி ஓர் சிறுவன் வந்துகொண்டிருந்தான். வெகு கஷ்டப்பட்டு எவ்வளவோ கஷ்டங்களையும் அபாயங்களையும்

தாண்டி இவ்வளவு தூரம் இச்சங்கதியை அறிய வந்த வெகு தௌர்பாக்கியனான நான் இதைக் கண்டமாத்திரத்தில் பொறி கலங்கி குழப்பத்தாலும் ஆச்சரியத்தாலும் மௌனியாய் ஸ்தம் பித்து நின்றேன். அச்சிறுவன் தான் வழக்கப்படி செய்து வந்த காரியத்தைச் செய்து முடித்து காட்டுக்குத் திரும்பிச் சென்றான். நகரத்து ஜனங்களும் வந்த வழியே ஊருக்குத் திரும்பினார்கள். எனக்கு ஸ்வயபுத்தி திரும்பி வந்தவுடன் நான் என்னையே சிந்தித் துக்கொண்டு துக்கப்படலானேன். "நீ என்ன காரியம் செய்தாய். இன்னும் ஒரு மாதகாலம் நீ வெகு ஆவலோடு காத்திருக்கவேண் டும்" என்று என்னையே நான் நொந்து கொண்டேன். ஆனால் வேறு வழி ஒன்றும் இல்லாததனால் நானும் அவர்களுடனே ஊருக் குத் திரும்பினேன். அந்த மாதத்தின் ஒவ்வொரு நாளையும் எண் ணிக்கொண்டு ரம்ஜான் மாதத்தைக் கழிப்பவன் போல் நான் கழித் தேன். கடைசியாய் சந்திர தினம் வரலாயிற்று. அதே எனக்கு உத்ஸவதினமாயிருந்தது. அந்த மாதத்தின் முதல் நாளில் அரச னும் குடிகளும் வழக்கப்படி இதே மைதானத்தில் கூடினார்கள். நானும் என்ன வந்தாலும் சரி, இந்தத் தடவை இந்த ரகசியத்தை நன்றாய் சோதித்தறிந்து விடவேண்டும் என்று என் மனத்தை வலுப்படுத்திக்கொண்டேன்.

திடீரென்று வழக்கம்போல் ஓர் மஞ்சள் நிறமான எருதின் மீதேறி சவாரி செய்துகொண்டு அவ்விளைஞன் அம் மைதானத் திற்கு வந்து மாட்டைவிட்டுக் கீழே இறங்கி பூமியில் உட்கார்ந்தான். ஒரு கையில் அவன் உருவின கத்தி ஒன்றைப் பிடித்திருந்தான். மற்றொரு கையால் மாட்டின் தலைக்கயிற்றை பற்றி இருந்தான். ஒரு பாத்திரம் ஒன்றை அவன் தன் வேலைக்காரனிடம் கொடுக்க அதை அவ்வேலைக்காரன் தனது வழக்கப்படி எல்லாருக்கும் காட்டி தனது எஜமானனிடம் திருப்பிக்கொடுத்தான். அதைப் பார்த்த ஒவ்வொருவனும் அழலானான். அச்சிறுவன் பாத்திரத்தை உடை த்து அவ்வேலைக்காரன் தலையை ஒரே வெட்டாய் தேகத்தினின்று வெட்டிக் கடாத்தி எருதுமீதேறி தான் வந்தவழியே திரும்பிச் சென்றான். நானும் வெகு வேகமாய் அவன்பின் ஓடலானேன். ஆனால் அந்நகரத்து ஜனங்களெல்லாரும் என் கையைப் பிடித்துக் கொண்டு, "நீ என்ன காரியம் செய்கின்றாய்? வேண்டுமென்றே உன்

உயிரை ஏன் மாய்த்துக்கொள்ளுகிறாய்? உனக்குப் பிழைத்திருக்க ஆசை இல்லை என்றால் உன் உயிரை மாய்த்துக்கொள்ள எவ்வளவோ வேறு வழிகள் இருக்கின்றனவே" என்றார்கள். நான் எவ்வளவோ கெஞ்சிக் கேட்டேன். எப்படியாவது அவர்கள் கைகளிலிருந்து தப்பி ஓடிப்போகவேண்டுமென்று எவ்வளவோ பலாத்காரம் பண்ணியும் பார்த்தேன். என்றால் விடுவித்துக்கொள்ள முடியவில்லை. இரண்டு மூன்று மனிதர்கள் என்னைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு நகரத்திற்கு இழுத்துக்கொண்டு போனார்கள். ஆகையால் மறுபடியும் வெகு அவஸ்தைப்பட்டுக் கொண்டு பின்னும் ஒருமாதம் முழுமையும் அந்நகரத்தில் கழிக்கலானேன்.

அம்மாதம் கழிந்து கடைசி நாளும் நிரம்பவே, அதற்கடுத்த நாள் அதே மைதானத்தில் அதே மாதிரி எல்லா ஜனங்களும் சேர்ந்தார்கள். நான் ஒருவன் மட்டும் நமாஸ் செய்யும் வேளையாகிய இராத்தக்காலத்தில் எழுந்திருந்து எந்த வழியாய் அந்தச்சிறுவன் திரும்பிப்போவானோ அதே வழியில் ஓர் புதரில் ஒருவர் கண்ணிலும் படாமல் எல்லாருக்கும் முன்பாகச் சென்று பதுங்கிக்கொண்டேன். ஏனெனில் அவ்விடத்தில் என் உத்தேசத்தை நான் முடித்துக்கொள்ள என்னைத் தடுக்க முடியாதன்றோ! அச்சிறுவன் அதே வழக்கப்படி வந்து, மேற் சொன்னபடி அதே காரியத்தைச் செய்து, மீண்டும் எருதேறி திரும்பிக்கொண்டிருந்தான். நான் அவனைத் தொடர்ந்து சென்று வெகு ஆவலுடனும் வேகமாக ஓடி அவனருகாமையை யடைந்துவிட்டேன். அச்சிறுவன் என் காலடி சப்தத்தால் யாரோ தன்னைத் தொடர்வதாக அறிந்துகொண்டான். ஒரு நொடியில் தனது எருதின் தலைக்கயிற்றைத் திருப்பி ஒரு கர்ச்சனை கர்ச்சித்து என்னை நடுங்கும்படி செய்தான். அதன்பிறகு தன் கத்தியை உருவிக்கொண்டு என்னைக் கொன்றுவிட என்மேல் பாயலானான். நானோ வெகு மரியாதையுடன் சலாம் செய்து எனது இருகைகளையும் கட்டிக்கொண்டு மௌனியாய் ஸ்தம்பித்து நின்றேன். அவனோ மரியாதையான நடத்தையை அறிந்தவனாகையால் ஓங்கின கையை நிறுத்தி—"ஓ பக்கிரீ! வீணாக நீ கொல்லப் பட்டிருப்பாய். ஏதோ பிழைத்தாய். உனக்கு உன் ஆயுளும் இன்னும் மிகுந்திருக்கின்றது. ஓடிவிடு. ஏன் நீ வருகின்றாய்" என்றான். பிறகு

அவன் தன்னுடைய இடுப்பிலிருந்து ரத்னக் கற்களும் நல்முத்து களும் இழைத்த ஈட்டி ஒன்றை எடுத்து என் முன்பாக எறிந்து;

"இச்சமயத்தில் உனக்குக் கொடுக்க என்னிடத்தில் பணம் ஒன்றுமில்லை, இந்த ஈட்டியை எடுத்துக்கொண்டு போய் அரசனிடம் காட்டுவாயேயானால் அவர் உனக்கு நீர் கேட்பதைக் கொடுப்பார்" என்றான். அச்சமயத்தில் எனக்குண்டாயிருந்த பயமும் நடுக்கமும் அவ்வளவு இவ்வளவு என்று சொல்லவே முடியாது. என்னால் பேசவும் முடியவில்லை. ஓரடி நகரவும் முடியவில்லை. வாய் அடைத்துக்கொண்டது. கால்கள் கனமாய்விட்டன.

இவ்வளவு சொல்லி விட்டு அவ்விளைஞன் ஒரு பெருங் கர்ஜனை கர்ஜித்து தன் வழியே சென்றான். நானும் என் மனத்தினுள் "இப்பொழுது நீ பின்தங்குவது உனக்கு நலமன்று; அப்படி செய்வது பெரும் மடத்தனம்; மறுபடியும் உன்காரியத்தை நிறைவேற்றிக் கொள்ள இவ்வாறான ஸந்தர்ப்பம் ஒரு பொழுதும் கிட்டவே கிட்டாது" என்று நான் எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு என்னுயிரிலிருந்த ஆசையையே முற்றிலும் ஒழித்து அவன் பின் தொடர்ந்தேன். அவன் மறுபடி திரும்பி வெகு கோபத்துடன் தன்னுடன் வரக்கூடாது என்று என்னைத் தடுத்து என்னைக் கொன்று விடவே நிச்சயித்து விட்டான். அதற்கு நான் வெகு குதூகலத்துடன் என் கழுத்தையே அவனுக்கு நீட்டிக்காட்டி. தெய்வங்களின்மேல் ஆணையிட்டு ஓ, ருஸ்தம்,* இச்சமயத்துக்கு ருஸ்தமே, உமது கையால் கத்தியைக்கொண்டு என்னை ஒரே வீச்சாய் வீசும். ஒரே வீச்சில் தலை வேறு முண்டம் வேறாக விழவேண்டும். அப்படி நீர் செய்வீரேயானால் பெரும் உபகாரம். அலைந்து திரியும் இந்த உபயோக மற்ற உயிர் இன்றுடன் ஒழியும். உம்மை என்னைக் கொன்றதற்கு குற்றவாளியாக எண்ணாமல் உபகாரியாக எண்ணி மன்னிப்பேன் என்றேன். அதற்கு அவன் அடே பேய் முகத்தானே! ஒருவித காரணமுமின்றி உன் ரத்தத்தைச் சொட்டும் தோஷத்தை என் தலையில் சுமத்தி என் என்னைக் குற்றவாளியாக்கக் கருதிவிட்டாய். போய்விடு. உன் வழியைப் பிடித்துக்கொண்டு ஓடு. உனக்கும்

* அனுமானுக் கொப்பான பெருவீரன்.

உன் உயிர் பெரும்பாரமாய் விளங்குகின்றதா என்ன? என்ருன். அவன் அவ்வாறு சொன்னதை நான் கவனிக்கவேயில்லை. அவனை விடாமல் தொடர்ந்தேன். அவ்வாறு நான் தொடர்ந்து சென்றது அவனுக்குத் தெரிந்தும் தெரியாதவன் போல சென்று கொண்டிருந்தான். அவ்வாறு நடந்து குரோச தூரம் சென்று அக்காட்டைக் கடந்தோம். அதைத் தாண்டினதும் சச்சதுரமாய் கட்டப்பட்டிருந்த ஓர் பெரும் மாளிகையைக் கண்டோம். அம்மாளிகையின் வாயிற்படியில் அச்சிறுவன் நின்று ஒரு அட்டகாஸஞ்செய்தான். மாளிகைக் கதவு தனக்குத்தாளுகவே திறந்தது. அவன் உட் புகுந்ததும் கதவு மூடிக்கொண்டது. நான் வெளியில் விடப்பட்டேன். தெய்வமே நானினி என்ன செய்வேன் என்று நான் ஏங்கி நின்றுவிட்டேன். இப்படி நான் தயங்கி நிற்கையில் ஓர் வேலைக்காரன் வெளியே வந்து "உள்ளே வாரும்; அவர் உம்மை தன்னிடம் அழைந்து வரச் சொன்ஞர். ஆகா! உமது தலைமேல் ஏற்கனவே யமதூதன் உட்கார்ந்து விட்டான்" என்ருன். அதற்கு நான் "அப்படியல்ல. எனக்கு நல்ல அதிர்ஷ்ட காலம் வந்துவிட்டது" என்று சொல்லிக்கொண்டு நிர்ப்பயமாய் அவனுடன் கூட அம்மாளிகையில் நுழைந்து ஓர் தோட்டத்தினண்டை போய்ச் சேர்ந்தேன்.

கடைசியாய் அந்த ஆள் என்னை அச்சிறுவனிருந்த இடத்துக்கு அழைத்துப் போஞன். நானவனைக் கண்டதும் அவன் முன் போடப்பட்டிருந்த ரத்தினக் கம்பளத்தில் என் நெற்றியிடிக்க வணங்கி வெகு தாழ்மையாக ஒரு ஸலாம் செய்தேன். என்னை உட்காரும்படி அவன் சைகை காட்டினுன். நானும் வெகு மரியாதையுடன் உட்கார்ந்தேன். அப்பொழுது நான் அங்குகண்டகாட்சிஎன்ன? அவ்விளைஞன் தனியாய் ஓர் சிங்காசனத்தில் உட்கார்ந்திருந்தான். அவன் முன்பாக தட்டாரவேலை செய்யும் ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவன் முன்பாக ரத்தினங்களிழைத்த ஒரு சிறு செடி முடிக்கப்பட்டு நின்றுகொண்டிருந்தது. அவன் எழுந்திருக்கும் வேளை வந்ததும் அவ்விடத்திலிருந்த எல்லா வேலைக்காரர்களும் ஓடி ஒவ்வொருவனும் ஒரு அறையில் பதுங்கி ஒளித்துக்கொண்டான். நானும் பயத்தால் அவ்வாறே [illegible] அறைக்குள் ஓடி ஒளித்துக்

கொண்டேன். அச்சிறுவன் எழுந்து ஒவ்வொரு அறைக்கும் வெளித்தாளிட்டு அத்தோட்டத்தின் ஒரு மூலைக்குச்சென்று தான் ஏரி ஸவாரி செய்யும் எருதை புடை புடை என்று அதிகமாகப் புடைத்தான். அப்பொழுது அவ்வெருது போட்ட சத்தம் என் காதில் விழவே நான் பயத்தால் நடுநடுங்கினேன். ஆனால் இந்த அற்புதத்தை பரிசோதிக்க வேண்டி நான் வந்தவனாகையால் நான் வெகு சிரமப்பட்டு கதவைத்தள்ளி வெகு ரகஸியமாய் அத்தோட்டத்தில் புகுந்து ஒருவரும் என்னை அறியாதபடி என்னையே மறைத்துக்கொண்டு இவ்வற்புதங்களைப் பார்க்கலானேன். அச்சிறுவன் தான் மாட்டை எந்தக் கோலால் அடித்தானோ அதைக்கீழே போட்டுவிட்டு ஓர் அறையைத் திறந்து அதற்குள் புகுந்தான். பிறகு அதிலிருந்து வெளியே வந்து அம்மாட்டைத் தடவிக் கொடுத்து அதன் முகத்தை முத்தமிட்டான். அதற்கு கொள்ளு வைத்து பில்லும் போட்டான். இவைகளை எல்லாம் செய்த பிறகு நானிருந்தவிடத்தை நோக்கிவந்தான். இதை நான் கண்டு வெகு சடுதியில் ஓடி நான் ஏற்கெனவே பதுங்கிக்கொண்ட அறைக்குட் புகுந்து என்னை மறைத்துக்கொண்டேன்.

அச்சிறுவன் திரும்பிவந்து எல்லா அறைகளின் தாளையும் திறந்துவிட்டான். எல்லா வேலைக்காரர்களும் வெளியே வந்தார்கள். சிலர் ஒரு ரத்னகம்பளம், கைகழுவ ஒரு தொட்டி ஜலம் நிரம்பிய குடம் இவைகளை எடுத்துவந்தார்கள். அச்சிறுவன் தன் கைகளைக் கழுவி நமாஸ்செய்து எழுந்து நின்றதும் "அப்பக்கிரி எங்கே?" என்று கேட்டான். என் பெயரை நான் கேட்ட மாத்திரத்தில் சரேல் என்று ஓடி அவன் முன்பாக நிற்கலானேன். அவன் என்னை உட்காரும்படி கட்டளையிட்டான். நான் வெகு மரியாதையாக ஸலாம் செய்துவிட்டு உட்கார்ந்தேன். எங்கள் முன்பு உணவுகொண்டு வந்து வைக்கப்பட்டது. அதை அவன் புசிக்கலானான். எனக்கும் சொற்பம் கொடுத்தான். நானும் புசித்தேன். நாங்கள் புசித்த தட்டு முட்டுகள் எடுக்கப்பட்டவுடன் நாங்கள் எங்கள் கைகளைக் கழுவிக்கொண்டோம். உடனே அவன் தன் வேலைக்காரர்களுக்கு விடை கொடுத்தனுப்பி நீங்கள் எல்லாரும் தூங்குங்கள் என்றான், அவ்வறையில் ஒருவருமில்லாமற் போன

தும் அவன் என்னிடம் ஆதரவாய் "கண்பனே, நீ இவ்வாறு சாவையே அழைத்துக்கொண்டு திரியும்படியாய் உனக்கு என்ன ஸங்கடம் விளைந்தது என்று கேட்டான். நான் என் கதையை ஒன்றும் விடாமல் ஆதி முதல் கடைசிவரையில் எனக்கு நடந்திருந்த எல்லாதுக்கங்களையும் ஒளிக்காமல் சொல்லி, கடைசியாய் "உமக்கு கருணை என்பது இருக்கும் பட்சத்தில் நான் என் உள்ளத்திலிருக்கும் மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளுவேன்" என்றேன். இதைக்கேட்டதும் அவன் ஒரு பெரு மூச்செறிந்தான். பைத்தியம் பிடித்தவன்போல் அபிநயித்தான். பின்வருமாறு மறுமொழி சொல்லலானான். ஜகதீசா, நீ ஒருவனைத் தவிர வேறு யார் தான் இவ்வுலகத்தில் மன்மத பாணத்தால் வருந்தாதவனில்லை. அன்றியும் எம்மனிதன் இந்த காமாவஸ்தையை சொற்பமேனும் அனுபவிக்கவில்லையோ அவனுக்கு மற்றவர்களுடைய அவஸ்தை எவ்வாறு புலப்படும்? எவனொருவன் இந்த துக்கத்தை முற்றிலும் அனுபவித்திருக்கின்றானோ அவனொருவனுக்குத்தான் மற்றவர்கள் துக்கமிப்படி யிருக்கும் என்பது தெரியவரும்."

"காமாவஸ்தையை எவன் காமுகனோ அவனிடம் கேட்டறிய வேண்டும். காமத்தை வேஷமாய் அபிநயிக்கும் மோசக்காரனுக்கு அதன் உண்மை என்ன தெரியும். உண்மையான காமுகனிடமன்றோ கேட்க வேண்டும்.

என்று பாடி மெய்மறந்து சொற்பம் தவித்து மறுபடி ஒரு நிமிஷத்துக்கெல்லாம் முன்போல் யதா ஸ்திதிக்கு வந்து பெரு மூச்சு விட்டு ஒரு கர்ச்சனை கர்ச்சித்தான். அந்த மாளிகையே எதிரொலி ஒலித்தது. அப்பொழுது இவனும் என்னைப்போல் காமத்தின் அவஸ்தையால் வருந்துகின்றவன் என்பது எனக்கு நிச்சயமாயிற்று, அப்பொழுது நான் என் மனத்தை தைரியப்படுத்திக்கொண்டு "ஐயா நான் என் கதையை தங்களுக்கு முற்றிலும் சொன்னேன். நீங்களிப்பொழுது தங்கள் சரித்திரத்தை எனக்கு தயை செய்து சொல்லுவீர்களேயானால் நான் நிச்சயமாய் முதல் முதல் எங்கள் காரியத்தில் சிரமப்பட்டு அதை முற்றிலும் முடித்து நிறைவேற்றி வைத்து அதன்பிறகு என் காரியத்திலிறங்குகிறேன் என்றேன். அந்த யதார்த்தமான காமுகன் என்னை அவனுடைய நேரான நண்

னுகவும் தன்னைப்போன்ற அவஸ்தையிலிருப்பவனுகவும் கருதி தனது கதையை முற்றிலும் பின்வருமாறு சொல்லத் தொடங்கினுன்:—கேள், ஓ நண்பனே! இவ்வாறு மனம் புண்ணுகவிருக்கும் நான் இந்த நீம்ரோஸ் தேசத்து ராஜகுமாரன். அரசன் அதாவது என் தந்தை நான் என்றையதினம் இப்பூமியில் பிறந்தேனே அன்று எல்லா ஜோஸ்யர்கள், ஜாதகம் கணிப்பவர்கள், பண்டிதர்கள் எல்லாரையும் சபைகூட்டி என் ஜாதகத்தை நன்ருக கணித்துச் சொல்லச் சொன்னுர். ஜாதகத்தை வெகு ஜாக்கிரதையாகப் பார்த்து ஒவ்வொரு ஜாமம், ஒவ்வொரு நாழிகை, ஒவ்வொரு நிமிஷம், ஒவ்வொரு நாள், ஒவ்வொரு மாதம், ஒவ்வொரு வருஷம் எனக்கு என்னென்ன ஸம்பவிக்குமோ அவைகளெவ்வளவையும் கணிக்கச் சொன்னுர். அரசன் கட்டளைப்படியே எல்லாரும் தங்களுடைய ரகஸியமான சாஸ்திரங்களை நன்ருகப் பரிசோதித்து என் ஜாதகத்தைப் பற்றி "வேந்தே, ஈசன் கடாக்ஷத்தால் இப்பொழுது பிறந்திருக்கும் ராஜகுமாரன் நல்ல முகூர்த்தத்திலும் சுபலக்னத்திலும் பிறந்திருக்கிறபடியால் இவன் ஸிகந்தர் (Alexander the Great) போல் அவ்வளவு விசாலமான தேசமாளுவான் என்பதிலும் நௌஷீர்வான் போல நியாயவானுக விருப்பான் என்பதிலும் ஐயமேயில்லை. அன்றியும் இவ்வுலகத்தில் எவ்வளவு கலைகள் எவ்வளவு சாஸ்திரங்கள் உண்டோ அவ்வளவிலும் வெகு ஸமர்த்தனுக விருப்பான். அது மட்டுமல்ல. எந்த விஷயத்தில் தன் மனதைச் செலுத்துவானே அதை வெகு அழகாய் முடித்து வைப்பான். தயாளத்திலும் வீரியத்திலும் அவன் வெகு கீர்த்தி பெற்று ஹாதிம், ருஸ்தம் என்பவர்கள் பெயர்களை இனி உலகத்தார் உச்சரிக்காமல் செய்வான். ஆனுல் இந்த ராஜகுமாரன் தனக்கு 14-வயது நிரம்புகின்ற வரையில் சூரியனையாவது சந்திரனையாவது பார்ப்பானேயானுல் இவனுக்கு பெரும் ஆபத்து விளையும். அது மட்டுமல்ல. இவன் ஒரு பெரும் பைத்தியக்காரனுய் மாறி பல பெயர்களைக் கொல்ல ஆரம்பிப்பான். மனிதர்களைக் கண்டு அச்சமுற்று அவர்கள் ஸகவாஸம் பிடிக்காமல் காட்டுக்கு ஓடிவிடுவான். அங்கு மிருகங்களுடனும் பட்சிகளுடனும் கூடி வஸித்துக்கொண்டிருப்பான். ஆகையால் இரவும் பகலும் இவன் சந்திர சூரியர்களை ஒருபொழுதும் பார்க்காத படிக்கான ஏற்பாடுகள் வெகு கண்டிப்பாகச் செய்ய வேண்டும்,

இவன் ஆகாயத்தையே ஒருபொழுதும் அண்ணாந்து பார்க்கவே கூடாது. இவ்வாறு வெகு ஜாக்கிரதையாய் 14-வயது காலம் ஒரு வித ஆபத்துமின்றி இவ்விராஜகுமாரன் தன் காலத்தைக் கழிப்பானேயானால் அதற்குமேல் இவன் தன் ஆயுள் முழுமையும் வெகு க்ஷேமமாயும் செல்வமாயும் வாழ்வான்" என்றார்கள்.

இதைக்கேட்டதும் அரசர் இந்த ஆபத்தை நீக்க உத்தேசித்தே இக்கட்டிடத்தை இத்தோட்டத்தில் கட்டினார். இதில் பல வித அறைகளை நிர்மாணம் செய்தார். நானிருக்கவேண்டிய அறையைச் சுற்றி உட்பக்கம் தோல் மூடி அந்த அறைக்குள் நான் வளர்ந்து வரவேண்டுமென்று உத்தரவிட்டார். தோல் தைத்திருந்த காரணத்தால் சந்திரன், சூரியன் இவர்கள் கிரணங்கள் சொற்பமாவது உள்ளே விழ வழியேயில்லை. ஆபத்து ஒன்றும் இவ்விடத்தில் விளைய வழியில்லை என்ற நம்பிக்கையில் நானிவ்வறையில் என் செவிலித்தாயாலும் மற்ற வேலைக்காரர்களாலும் வெகு க்ஷேமமாய் வளர்க்கப்பட்டேன். எனக்குத் தக்க வயது வந்ததும் ராஜ நீதிகளில் தேர்ந்த ஒரு உபாத்தியாயரை எனக்கு எல்லா வித்தைகளையும் சொல்லிக்கொடுக்க என் தந்தை நியமித்தார். ஒவ்வொரு கலையும் ஒவ்வொரு சாஸ்திரமும் நான் நன்றாகக் கற்று எழுவித எழுத்துக்கள் எழுதவும் கற்றுக்கொண்டேன். என் தந்தை நாள் தோறும் என்னைப்பற்றி விசாரித்து என் படிப்பில் கவனமாக விருந்தார். இவ்விடத்தில் ஒவ்வொரு நாள் நடக்கும் எல்லா விஷயங்களும் ஒன்றுவிடாமல் அவருக்கு எழுதியனுப்பப்பட்டு வரும். நானிந்த மாளிகை ஒன்றையே ஸப்தலோகங்களாக எண்ணி இதற்குள்ளிருந்த விளையாட்டுக் கருவிகளுடனும் புஷ்பங்களுடனும் விளையாடி வந்தேன். ஆகார விஷயத்தில் இவ்வுலகத்தில் எவ்வளவு நல்ல வஸ்துக்களுண்டோ அவ்வளவும் எனக்கு என்னுடைய ஆகாரத்தில் தினந்தோறும் கிட்டிற்று. எனக்கு என்னவேண்டுமோ அவைகள் உடனே எனக்குக் கிட்டின. எனக்கு 10-வயது முடியும் முன் எவ்வளவு வித்தைகள், எவ்வளவு கலைகள் உள்ளவோ அவ்வளவையும் நான் முற்றிலும் கற்றறிந்துகொண்டேன்,

ஒருநாள் நானிருந்த அறையின், கும்பஸ் அதாவது கூறை யின் உட்பக்கத்தில் வெளிச்சத்துக்கு என்று ஏற்படுத்தப்பட்டிருந்த பிரதேசத்து வழியாக ஒரு அழகான புஷ்பம் என் தோற்றத்தில் விழலாயிற்று. அதை நான் பார்க்கப் பார்க்க அது என் கண்களுக் குப் பெரிதாகப்பட்டது. அதை நான் கையால் பற்றிப்பிடிக்கப் பார்த்தேன், வெகு ஆவலுடன் நானதைப்பற்ற யத்தனித்த பொழுது அது மேலே போகலாயிற்று. நான் வெகு ஆச்சரியப் பட்டு திகைத்து நிற்கையில் அப்புஷ்பத்தின் திசையிலிருந்து கள களவென்று யாரோ சிறித்த சத்தம் என் காதில் விழுந்தது. அப் பொழுது அக்கூரையின் பக்கம் நான் என் சண்களை எடுத்துப் பார்க்கும்பொழுது அவ்விடம் தைத்திருந்த சோலைக் கிழித்துக் கொண்டு பூர்ணசந்திரனே ஆகாயத்தினின்று உதித்து இறங்கி வருவதுபோல் ஓர் அழகான முகம் இறங்கி வரக்கண்டேன். அதைக் கண்ணுற்ற மாத்திரத்தில் என் புத்தியும் யுக்தியும் எங்கே யோ ஓடிவிட்டன. சற்று நேரத்துக்கெல்லாம் நான் ஸ்வயபுத்தியை அடைந்து மறுபடி பார்க்கும்பொழுது மோகினிகள் கழுத்தில் தூக் கப்பட்ட ஓர் கல்லிழைத்த ஸிம்ஹாஸனத்தின்மேல் தன் தலைமேல் ஒரு கல்லிழைத்த கிரீடமணிந்து வெகு அழகான உடுப்பு உடுத்து ஓர் பெண் உட்கார்ந்திருக்கக் கண்டேன். அவள் தன் கையில் ரத் தினத்தால் செய்யப்பட்ட ஓர் கிண்ணம் வைத்துக்கொண்டிருந் தாள். அதால் ஏதோ மதுக் குடித்துக்கொண்டிருந்தாள். மேற் கூரையின் நடுவிலிருந்து அச்சிங்காதனம் மெல்ல மெல்லக் கீழே யிறங்கிற்று. அப்பொழுது அத்தெய்வப் பெண் என்னைக் கூப் பிட்டு என்னை தனக்குச் சமீபத்தில் அச் சிங்காசனத்தில் உட்கார வைத்துக்கொண்டாள். வெகு அன்னியோன்யமாயும் அன்பாயும் பேசலானாள். என் உதட்டில் தன் உதட்டால் அவள் எனக்கு ஒரு முத்தம் கொடுத்து ஒரு கிண்ணம் மது என்னைக் குடிக்கும்படி செய்து "மானிட ஜாதியே நன்றியற்ற ஜாதி, அப்படியிருந்த போதிலும் என் மனம் உன்னிடம் மோகம் கொண்டது" என்றாள். ஒரு நொடியில் அவள் எவ்வளவோ அழகாயும் ஆசையாயும் பேசின ளாகையால் என் மனம் வெகு ஆனந்தமடைந்து பிராணன் எனக் குண்டான பிரயோஜனமவ்வளவையும் அன்று நான் முற்றிலு

மடைந்ததாகக் கருதினேன். அன்றுதான் எனது ஜன்மமும் சாபல்ய மானதாக என்னைப்பற்றி நானே நினைத்துக்கொண்டேன்.

அப்படி நான் எண்ணிக்கொண்டதின் லாபம் இதோ நானிருக் கின்றேனே இந்த ஸ்திதிதான். ஆனால் இவ்வுலகத்தில் என்னை யின்றி இன்னும் ஒருவன் அவ்வாறாக அத்யானந்தத்தை ஒரு பொழுதாவது அடைந்தே யிருக்கமாட்டான் என்பது திண்ணம். அடையவாவது அதைக்கேட்டுக்கூட இருக்கமாட்டான். இந்தக் குதூகலத்தில் நாங்களிருவரும் உள்ளங்குளிர வெகு ஆனந்தமாய் சொற்பநேரம் உட்கார்ந்திருந்தோம். அப்பொழுது திடீரென்று எங்கள் ஆனந்தத்தில் இடி விழுந்தது. அவ்வாறு எதிர்பார்க்காமல் இந்த தௌர்பாக்கியனுன என்னுடைய நிலைமையில் வந்த வித்தி யாசத்தைக் கேளுங்கள், சொல்கின்றேன்:—

அந்த நிமிஷத்தில் ஆகாயத்தினின்று நான்கு கந்தர்வர்கள் கீழே யிறங்கி அக்கட்டழகியின் காதில் ஏதோ ஓதினார்கள். அதைக் கேட்டதும் அவள் முகத்தின் நிறம் முற்றிலும் மாறிற்று. அவளும் என்னை நோக்கி, "எனது பிரியனே! நான் உன்னுடன் சொற்பகாலம் உட்கார்ந்து என் உள்ளத்தைக் குளிரச் செய்யவும், இவ்வாறு உன்னை அடிக்கடி இவ்விடம் வந்து பார்க்கவும், அல்லது உன்னை என்னுடன் கந்தர்வ லோகத்திற்கு அழைத்துப் போகவும் நினைத்திருந்தேன். ஆனால் நம்மைப் போன்ற இருவர் ஒரே இடத் தில் களிப்புடன் ஆனந்தத்திலிருக்க நமது விதி இடங்கொடாது போலிருக்கின்றது. ஆகையால் என் பிராணனே! நீ க்ஷேமமாக வாழ்வாயாக. ஜகதீசன் உன்னைக் காப்பாற்றுவாராக" என்றாள். இதை நான் கேட்டதும் என் புத்தியே என்னை விட்டோடிற்று. எனது அதிர்ஷ்டமும் என் கையைவிட்டு நழுவிற்று. நான் அவளை நோக்கி "என் உள்ளத்தின் ஆனந்தமே! இனி நாம் மறுபடியும் எப்பொழுது சந்திப்போம். இவ்வளவு கோபமாய் நீ பேசிய சொல் என்ன சொல். நீ சடிதியில் திரும்பிவந்தால்தான் நீ என்னை உயிருடன் பார்ப்பாய். இல்லாவிடில் நான் இறந்துவிட்டதாகக் கேட்டு நீ பச்சாதாபம் படவேண்டியதாக விருக்கும். இல்லை எனில் நீ உன்னுடைய இருப்பிடம், பெயர், அடையாளம் இவைகளை என

குச் சொல்லிப்போனால் நான் அவைகளைக்கொண்டு உன்னைத் தேடித் தேடி என்னையே உன்னிடம் சேர்த்துக்கொண்டுவந்து ஒப்புவிப்பேன்" என்றேன். இதைக்கேட்டதும் அவள் ஈசன் உன்னை ரக்ஷிப்பாராக. நீ சொன்னசொல் சனியின் (சைதானின்) காதில் விழாமலிருக்கட்டும். உனது பிராயம் நூற்றுக்குமேல் இருபது வருஷமா யிருக்கட்டும். நம்மிருவருக்கும் ஆயுள் கெட்டியா யிருக்குமாயின் மறுபடியும் சந்திப்போம். நான் கந்தர்வ ராஜனுடைய மகள். ஹாப் என்னும் மலையில் நான் வசிக்கின்றேன்" என்றாள். இப்படி அவள் சொல்லும்பொழுதே அவள் சிங்காதனம் ஆகாசத்தின் மேலேறிற்று. எவ்வண்ணம் அது ஆகாயத்தினின்று கீழே யிறங்கிற்றோ அவ்வண்ணமே அது மேலே ஏறி மறையலாயிற்று.

எதுவரையில் சிங்காதனம கண்ணுக்குத் தோன்றிற்றோ அது வரையில் எங்கள் இருவருடைய நான்கு கண்களும் ஒரே நோக்கமாய் இருந்தன. என் கண்களைவிட்டு சிங்காதனம் மறைந்துவிடவே எனது ஸ்திதி ஒரு பேய் பிடித்தவன் ஸ்திதிபோல் மாறிற்று. வெகு ஆச்சரியகரமான ஓர் உதாஸீனத்துவம் என் உள்ளத்தைக் கவர்ந்துகொண்டது. என் அறிவும் புத்தியும் என்னிடம் விடைபெற்றுக்கொண்டு எங்கேயோ போய்விட்டன. என் கண்கள் முன்பாக இவ்வுலகமே இருள் மூடியதுபோல் விளங்கிற்று. புத்தி தடுமாறி மனங்குழம்பி நான் கோவென்று கதறலானேன். என் தலையின்மேல் மண்ணை வாரி நானே இறைத்துக்கொண்டேன் என் துணிகளைக் கிழித்துக்கொண்டேன். உணவு, நீருருந்துதல் இவைகளை மறந்தேன். நன்மை தீமை இவைகளைத் துறந்தேன்.

இக்காமம் என்னும் நோயால் விளையும் துன்பங்கள் எவ்வளவோ கணக்கிடமுடியாது. மனத்திற்கோர் வெறுப்புந் துக்கமும் இலாபமும், என்று பாடலானேன்.

எனக்கு நேரிட்ட சங்கடத்தை எனது தாதியும் உபாத்தியாயரும் அறிந்து பயத்தால் மனம் நடுங்கினவர்களாய் என் தந்தையாகிய அரசன்முன் சென்று "வேந்தே! இவ்வுலகத்திற்கே ராஜகுமாரனாயிருக்கும் உமது குமாரனுக்கு எப்படித் துன்பம் நேரிட்ட

தோ விளங்கவில்லை. திடீரென்று ஏன் இப்படி ஆயிற்றோ அது ஈச னுக்குத்தான் தெரியும்; அவர் தூக்கம், ஆகாரம், பானம் எல்லாவற் றையும் துறந்துவிட்டார்" என்றார்கள். அப்பொழுது அரசரான வர் தனது மந்திரி, புத்திசாலிகளான பிரபுக்கள், பிரசித்த வைத்தி யர்கள், பெயர் பெற்ற ஜோசியர்கள், எல்லா மறிந்த முல்லாக்கள், உலகத்தையே துறந்த துறவிகள், ஈசனடியார்கள் இவர்களை எல் லாம் தன்னிடம் அழைத்துக்கொண்டு நான் இருந்த தோட்டத்தி னண்டை வந்தார். நான் இருந்த துக்கத்தையும் குழப்பத்தையும் கண்டு அவரும் தாளமுடியாத சங்கடத்தில் மூழ்கினார். வெகு அன்புடன் என்னைத் தன் மார்போடு கட்டி யணைத்துக்கொண்டு என் விஷயமாய் சிகிச்சைகள் செய்யவேண்டிய கட்டளைகளை விதித் தார். வைத்தியர்கள் என் மனதை தைரியப்படுத்தி என் மூளையை சீர்திருத்த மருந்துகளின் ஜாப்தாவை எழுதலானார்கள். முல்லாக் கள் சக்கரங்கள் எழுதி மந்திரங்கள் ஜபித்து என்மேல் மந்திரங் களுடன் காற்றை ஊதிக்கொண்டும் என் மேனியில் தாயித்துக் களைக் கட்ட கட்டளை யிட்டுக்கொண்டும் மந்திர மெழுதிய சீட்டு கள் கரைக்கப்பட்ட தீர்த்தத்தைக் குடிக்கச்செய்தும் எனக்குப் பலவாறு சிகிச்சை நடத்தினார்கள். ஜோஸ்யர்கள் நக்ஷத்திரங் களின் மாறுதலால் இவ்வித சங்கடங்கள் எனக்கு நேர்ந்தனவென் றும் சொல்லி பலவித தானங்கள் செய்ய உபதேசித்து வந்தார்கள். சுருக்கிச்சொல்ல ஒவ்வொருவனும் தனது சாஸ்திரம் இடங்கொடு த்தபடி உபதேசித்து வந்தான். ஆனால் என் உள்ளத்திலிருப்பது என் உள்ளம் ஒன்றுக்கன்றோ தெரியும். என் தலையிலெழுதி யிருந்த துரதிர்ஷ்டத்திற்கு மற்று யாருடைய ஒத்தாசையும் வைத் தியமும்தான் பலிக்கும்; நாளுக்கு நாள் என் பைத்தியம் அதிகரித் துக்கொண்டே வந்தது. அன்னமும் நீரும் நாளுக்கு நாள் குறையவே என் தேகம் மெலிவலாயிற்று. எனக்கு இரவும் பகலும் கதறுவதுமே, தலையை மோதிக்கொள்வதுமே வேலையா யிருந்தன. இதே அவஸ்தையில் மூன்று வருஷங்களை நான் ஒருவாறு கழித் தேன். நான்காவது வருஷத்தில் ஒரு வியாபாரி பரதேசங்களில் சஞ்சாரஞ்செய்து ஆங்காங்கு தான் சேகரித்த ஆச்சரியமும் விநோத மூமான சாமான்களை எடுத்துக்கொண்டு என் தந்தையாகிய வேந் தன் சமூகத்தில் வந்து சேர்ந்தான். அவனுக்கு என் தந்தை வெகு மரியாதையாகப் பேட்டி கொடுத்தார்.

வேந்தர், அவன் கொண்டுவந்த சரக்குகளை வெகு தாராளமாக் வாங்கி, அவன் தேக சௌக்கியம் முதலியவைகளை விசாரித்து அவனைநோக்கி "ஐயா! நீங்கள் பலதேசங்கள் பார்த்திருக்கின்றீர்கள். எங்கேயாவது உண்மையாய்த்தேர்ந்த வைத்தியனைக் கண்டதுண்டா? அல்லது அவ்வண்ணமான வைத்தியன் உண்டு என்று யாரிடமிருந்தாவது கேள்விப்பட்டதுண்டா?" என்று கேட்டார். அதற்கு அவ்வியாபாரி "புகழ்பெற்ற வேந்தே! உங்கள் அடிமையாகிய நான் வெகுதூரம் சஞ்சரித்திருக்கின்றேன். ஹிந்துஸ்தானத்தில் கங்கைநதியின் நடுவில் ஓர் மலை இருக்கின்றது. அவ்விடத்தில் ஜடாதாரியாக விருக்கும் ஒரு கோஸாயி, மகாதேவர்க்கோர் மந்தரம் கட்டிக்கொண்டு அத்தேவரெல்லாரும் உபாசிக்க அம்மந்திரத்தைச் சுற்றி ஓர் அழகான தோட்டம் விளங்க அவ்விடத்தில் குடியிருக்கின்றார். அவரிடத்தில் ஓர் வழக்கமிருக்கின்றது. வருஷத்திற்கு ஓர் தடவை சிவாராத்திரி தினம் தாம் வசிக்கும் மலையைவிட்டு அவர் கிளம்பி நதியில் நீந்திக்கொண்டு ஸ்நானம் செய்து ஆனந்த மனுபவிக்கின்றார். அவர் அவ்வாறு தனது ஸ்நானத்தை முடித்து வீடு திரும்பும்பொழுது அவர் வீட்டின் (ஆச்சிரமத்தின் வாயிலில்) பல தேசங்களிலிருந்தும், பல நாடுகளிலிருந்தும் அநேக வியாதிக்காரர்கள், வாயிலில் கூடுவது வழக்கம். அன்றைய தினம் வியாதிக்காரர்களின் ஏராளமான கூட்டத்தை நாம் அங்கு காணலாம்.

ஈசன் கருணைபெற்ற அக் * கோஸாயி, அவரை நாம் தன்வந்திரி என்றே சொல்ல வேண்டும். ஈசனருள் பெற்ற அக்கோஸாயி அக்கூட்டத்தின் நடுவில் புகுந்து ஒவ்வொருவன் கையை தாது பிடித்துப் பார்ப்பதும் சில பேர்களுடைய மூத்திரங்களைப் பரீக்ஷிப்பதும் ஒவ்வொருவனுடைய நோய்க்குத் தக்கவாறு ஒரு துண்டு கடிதத்தில் மருந்தெழுதிக்கொடுப்பதும் வழக்கம். ஈசன் அக்கோஸாயிக்கு எவ்வாறான கைராசி கொடுத்திருக்கிறார் என்றால் அவர் கொடுத்த சீட்டுப்படி மருந்தருந்தினால் அவரவருடைய வியாதி

---

* புஸ்தகத்தில் அஹ்லாதூன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அஹ்லாதூன் என்றால் கிரிக்தேசத்து ஞானியாகிய பிளேடோ என்று அர்த்தம். இஸ்லாம் மதத்தோர்களுக்குள் இவர் ஓர் பெரிய வைத்தியர் என்பது எண்ணம். நாம் நமது நாட்டு வழக்கப்படி அஹ்லாதூன் என்பதை தன்வந்திரி என்று மொழிபெயர்த்தோம்.

இருந்த இடமே தெரியாமல் ஓடிவிடுகின்றது. இவ்வற்புதத்தை நான் என் கண்ணாலேயே பார்த்திருக்கின்றேன். ஈசன் அவ்வாறு ஒருவனைப் படைத்திருப்பதற்காக அவரைத் துதித்திருக்கின்றேன். இவ்விடத்தில் உத்தரவானால் நான் ராஜகுமாரனை அவரிடம் அழைத்துப் போகின்றேன். அவரிடம் ஒரு தடவை காண்பிக்கின்றேன். காட்டின மாத்திரத்தில் இவ்வியாதி நீங்கி விடும் என்ற நம்பிக்கை எனக்கு முற்றிலும் உண்டு. அன்றியும் இவ்வித ஏற்பாட்டால் ராஜகுமாரன் தேகத்திற்கு நன்மையே விளையும். ஒவ்வொரு நாட்டின் காற்றும் ஒவ்வொரு தேசத்தின் போசனமும் பானமும் வியாதிக்காரன் தேகத்தை மாற்றுமன்றோ"! என்றான். இவ்வாறு அவ்வியாபாரி சொன்னது அரசனுடைய மனதிற்குப் பிடித்திருந்தது. உடனே அவர் வெகு சந்தோஷத்துடன் "மிக்க நன்று. மிக்க நன்று ஒருக்கால் ஈசனடியானுன அக்கோஸாயியின் கைராசியால் என் மகன் சௌக்கிய மடைவான். அவனுள்ளத்திலிருக்கும் துக்கம் நீங்கும்" என்றார். உடனே அரசன் தமக்கு வெகு நம்பிக்கையுள்ள ஓர் பிரபுவிடம் என்னை ஒப்பிவித்தார். அப்பிரபுவோ பல முறை அரசனால் பரிசோதிக்கப்பட்டு, பொறுக்கி எடுக்கப்பட்டவன். அன்றியும் அவன் பல தேசங்களில் ஸஞ்சாரம் செய்துவந்தவன். அவ்வியாபாரியையும் எங்களுடன் கூட வர நியமித்தார். எங்களுக்கு வேண்டிய எல்லா ஸாமான்களும் ஓர் கப்பலில் ஏற்றி எங்களைப், பிரயாணப்படுத்தி அனுப்பினார். நாங்கள் எங்கள் ஸாமான்களுடன் படகேறி கப்பலை நோக்கிப் போன பின்பு அவன் எங்களிடம் அன்புடன் விடைபெற்று திரும்பினார். நாங்கள் எவ்வளவோ மஜிலிகள் தாண்டி கடைசியாய் அக்கோஸாயி யிருந்தவிடம் வந்து சேர்ந்தோம். ஏதோ புது தேசங்களில் ஸஞ்சரித்தாலும் புது தேசங்களின் ஆகாரமும் தீர்த்தமும் உட்கொள்ளுவதால் என் தேகமும் சொற்பம் நன்றாக மாறலாயிற்று. ஆனால் என் மௌன விரதம் என்னைவிட்டு நீங்க வில்லை. எப்பொழுதும்நான் அழுதுகொண்டேயிருந்தேன். அக்கட்டழகியின் நினைவு ஒரு நிமிஷமாவது என் உள்ளத்தை விட்டு ஒழியவேயில்லை. நான் எப்பொழுதாவது வாய் திறந்தால் நான் பாடுவது ஒரே பாட்டுதான்:—

எந்த கந்தர்வப்பெண் என்னைப் பார்த்தாளோ அதை நான் அறியேன். அதுவரையில் என் மனம் கெடாமல் நன்றாகத்தானிருந்தது.

கடைசியாய் இரண்டு மூன்று மாதங்கள் கடந்த பின்பு சற்றேறக்குறைய நாலாயிரம் வியாதிக்காரர்கள் அம்மலையில் கூடலானார்கள். அவர்களுள் எல்லாரும் "ஈசனருளால் அக் கோஸாயி சடுதியில் தமது ஆச்சிரமத்தைவிட்டு வெளியே வருவார். நமக்கெல்லாம் சொல்லவேண்டியதைச் சொல்லி மருந்து கொடுப்பார். நமது நோய் ஸ்வஸ்தமாய்விடும்" என்று சொல்லிக்கொண் டிருந்தார்கள். அவ்வாறு அத்தினம் வந்தது; அக்கோஸாயி சூர்ய பகவான் உதயமாய்த் தோன்றுவதுபோல் எல்லோர் முன்னிலும் வந்து நிற்கலானார். அவர் கங்கையில் விழுந்து, நீந்தி ஸ்நானம் செய்து கரையேறித் திரும்பி வந்து, விபூதியின் பஸ்மம் தம் மேனி முழுவதும் பூசி, தீப்போல் மின்னும் தம் தேகத்தை அதனால் மறைத்து நீறு பூத்த நெருப்புப் போல் தோன்றினார். தமது நெற்றியில் சந்தனப் பொட்டிட்டார். லங்கோடியை இழுத்துக் கட்டி கழுத்தில் அங்கவஸ்திர மணிந்தார். தலைமே லிருந்த ஜடையின் கலாபத்தை தூக்கிக் கட்டி மீசையை முறுக்கிவிட்டு காலில் சோடு போட்டுக் கொண்டார். அவர் பார்த்த பார்வையில் என்ன விளங்கிற் றென்றால் இவ்வுலகத்தையே ஒரு திரணமாகப் பாவித்தவர்போல் தோன்றிற்று. வைரக்கல்லிழைத்த ஒரு மசிக்கூடும் சிறு மேஜையும் தன்னுடன் கூடவே எடுத்து வந்து ஒவ்வொரு வியாதிக்காரனையும் பார்த்து அவனவனுக்கு ஒரு மருந்து ஜாபிதா எழுதிக் கொண்டே வந்தார். என்னிடம் வந்ததும் என்னைக் கண்டு சற்று என்று நின்று சொற்பம் உற்றுப்பார்த்து "நீ என்னுடன் கூடவே வா" என்றார். நானும் அவர் உத்தரவுப்படியே அவரைத் தொடர்ந்து சென்றேன்.

எல்லாரையும் அவர் பார்த்து அனுப்பி விட்ட பின்பு என்னை அவர் அவருடைய தோட்டத்துக்குள் அழைத்துப் போய் அங்கு நான் கண்ட வெகு அழகும் சௌக்யமுமான ஒரு சிறு வீட்டில் என்னை யிருக்கும்படி கட்டளையிட்டார். அதன் பிறகு அவர் தமது ஆச்சிரமத்துக்குப் போய்விட்டார். ஒரு மண்டலம் 40-நாள் கழிந்தபின் அவர் திரும்பிவந்து நான் சொற்பம் வியாதி நீங்கி யிருந்ததைக் கண்டு புன்னகை நகைத்து "நீ இந்த தோட்டத்தில் உன் மனத்துக் கேற்றபடி உலாவிக்கொண்டிரு. உனக்கு எந்தப்பழம்

பிடிக்கின்றதோ அதை உன்னிஷ்டப்படிப் புசி" என்றார். அன்றி யும் அவர் மாஜனே என்ற அபின் நிரம்பிய ஒரு சிறு பாத்திரத்தை என்னிடம் கொடுத்து, "தினந்தோறும் வெறும் வயிற்றில் இதி லிருந்து ஆறு உளுந்து எடை எடுத்துப் புசித்துவா" என்றார். இவ்விதமாகத் திட்டஞ்செய்து அவர் தமது இருப்பிடஞ் சென் றார். நானும் அவர் சொன்னபடி ஸரியாய் நடந்துவந்தேன். நாளுக்கு நாள் என் தேகத்துக்கு பலமும் என் மனதுக்கு சாந்தி யும் திரும்பி வந்துகொண்டிருந்தன. ஆனால் காம ராஜன் இன் னும் என்னிடம் வெற்றிகொண்டிருந்தான். அக்கட்டழகியின் முகம் என் கண்கள் முன்பாக எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டே யிருந்தது.

ஒருநாள் நான் ஒரு சுவரின் பிறையில் ஒரு மூலையில் ஒரு புஸ் தகமிருக்கக் கண்டேன். அதை எடுத்து நான் பார்த்தபோது அதில் போன லோகம், இருக்கும் லோகம் ஆகிய எல்லா லோகங் களுடைய சாஸ்திரங்களும் எழுதியிருக்கக் கண்டேன். சமுத் திரத்தையே ஒரு கூஜாவில் அடைத்தது போலும் சொல்லலாம். நான் ஒவ்வொரு நிமிஷமும் அப் புத்தகத்தைப் படிக்கலானேன். வைத்திய விஷயத்திலும், பேய் பூதங்களை வசப்படுத்தும் விஷயங் களிலும், நான் வெகு ஸமர்த்தனானேன். இதற்குள் ஒரு வருஷம் கடந்தது. அந்த ஆனந்தத்தினமாகிய சிவராத்திரி வந்தது. அந்த யோகி தமது ஆஸனத்தைக் கலைத்து வெளியே வந்தார். அவரைக் கண்டதும் நான் அவருக்கு ஸலாம் செய்தேன். அவர் என்னிடம் எழுதும் கருவிகளைக் கொடுத்து "என்னுடன் கூடவா" என்று கட்டளையிட்டார். நானும் அவருடன் கூடவே சென்றேன். வாயிற்படியண்டை அவர் வந்ததும் எல்லாரும் ஒரே வாக்காய் அவரைத் துதிக்கலானார்கள். அந்த பிரபுவும் அவ்வியாபாரியும் அவருடன் என்னை மறுபடி கண்டதும் அக்கோஸாயியின் பாதங்க ளில் சேவித்து அவரை வாழ்த்தலானார்கள். "ஐயா! தங்கள் மகிமையால் எங்கள் ராஜகுமாரனுக்கு இவ்வளவாவது உடம்பு அநுகூலமாயிற்று" என்று புகழலானார்கள். அக்கோஸாயி தமது வழக்கப்படி ஜலத்தில் நீந்திக்கொண்டு ஸ்நாந கட்டம் சென்று வழக் கம்போல் ஜபதபங்களை முடித்துக்கொண்டு திரும்பிவந்து அங்கிரு ந்த ஒவ்வொரு வியாதிக்காரனையும் பரீக்ஷிக்கலானார்.

அக்கூட்டத்தில் வைத்தியக்காரர்கள் நடுவில் ஒரு சிறுவன் வெகு ஸௌந்தரமாய் சோபிக்கும் முகத்துடன் நின்றுகொண்டிருந்தான். அவன் தேகத்தில் நிறக்கூட பலமில்லை. அவனைக் கண்டதும் அக்கோஸாயி என்னைப் பார்த்து இவனை நீ உன்னுடன் அழைத்து வா என்று கட்டளையிட்டார். எல்லோருக்கும் மருந்துச் சீட்டுக் கொடுத்தனுப்பிவிட்டபின்பு அந்தக் கோஸாயி தமது சிறு அறைக்குத் திரும்பி வந்து அச்சிறுவன் மூளையை ஒரு பக்கத்தில் கத்தியாலறுத்து அங்கு ஒரு பூரான் பதுங்கி யிருக்கக்கண்டு அதை தொரட்டணத்தால் இழுக்கப்பார்த்தார். அப்பொழுது நான் என் உள்ளத்தில் ஏதோ தோன்ற அதை வெகு மரியாதையுடன் சொல்லத் தொடங்கினேன்:—குருவே தொரட்டணத்தை நெருப்பில் சொற்பம் காய்ச்சி அதை அப்பூரான் முதுகில் வைப்பது உத்தமம். அப்பொழுது அது தனக்குத்தானே அவ்விடத்தை விட்டு நகரும். அப்படி யில்லாமல் நாமிப்படி இழுப்பதாக விருந்தால் அது தனது பிடிப்பை விடாமல் மூளையின் தசையை இழுத்துக்கொண்டே வரும். ஒருக்கால் பிடிப்பை விடவேமாட்டாது. அப்பொழுது வியாதிக்காரனுக்கு சிரமம் உண்டாகும் என்றேன். இதைக் கேட்டதும் அக்கோஸாயி என்னை ஒரு தடவை பார்த்துவிட்டு சரேல் என்று எழுந்து அத்தோட்டத்தினுட் சென்றார். அங்கு ஓர் தாழ்ந்த மரத்தின் கிளையைப் பிடித்து தமது ஜடையை அதில் கட்டி அத்தால் சுருக்கும் போட்டுக்கொண்டு பிராணனை விட்டார். நான் ஓடி அவரைப் பார்க்கும் முன் அவர் மாண்டு விட்டார். இவ்வாச்சரியத்தைப் பார்த்து நான் மிகவும் வருத்தமுறலானேன். ஓர் வித உதவியுமில்லாத அந்த இடத்தில் நான் என்ன செய்வேன். அவரை, புதைப்பதைவிட வேறுவகை எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அம்மரத்திலிருந்து அவரை அவிழ்த்துக் கீழே நானிறக்கினபொழுது அவர் தலையிலிருந்து இரண்டு சாவிகள் விழுந்தன. நான் அவைகளை என்னிடம் வைத்துக்கொண்டு அந்த நிகரற்ற மாணிக்கத்தைப் பூமியிலடக்கஞ் செய்தேன். அவ்விரண்டு சாவிகளை நான் எடுத்துக்கொண்டு அங்கிருந்த எல்லாப் பூட்டுகளையும் அவைகளால் திறந்து பார்க்க முயன்றேன். அவைகள் இரண்டு அறைகளின்பூட்டுகளைத்தான் திறந்தன. அவ்வறைகளைநான் திறந்தபொழுது அவைகள் கீழ் முதல் கூரைவரையில் வைரக் கற்களும்

நிரம்பி யிருந்தன. ஒரு பக்கத்தில் மகமல் பட்டால் மூடப்பட்டு தங்கப்படி போடப்பட்டு ஓர் பெட்டி வைக்கப்பட்டிருந்தது. அதை நான் திறந்தபொழுது அதில் ஓர் அற்புதமான புஸ்தக மிருக்கக் கண்டேன். அதின்மேல் ஈசனுடைய கோரமான பெயர் எழுதப்பட்டிருந்தது. பேய், பூதம், இவைகள் வசப்படுத்தும் மந்திரங்கள், அவைகளுடன் ஸம்பாஷித்து அவைகளை யடக்கியாளும் உபாயங்கள், சூர்யனை வசமாக்கும் மோகனங்கள் அப்புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருந்தன.

இச்சம்பத்து எனக்குக் கிட்டினதும் எனக்குண்டான ஆனந்தத்திற்கு அளவேயில்லை. அம்மந்திரங்களை ஸாதித்துக் கொண்டு பிரயோகப்படுத்த முயன்றேன். நான் அத்தோட்டத்தின் கதவைத் திறந்து விட்டு என்னுடன் வந்த அந்தப் பிரபுவையும் இன்னும் மற்றவர்களையும் வரவழைத்து கப்பல்களைச் சித்தப்படுத்தச் சொல்லி அங்கிருந்த வைரக் கற்கள், புஸ்தகங்கள் முதலிய எல்லா சாமான்களையும் கப்பலேற்றச் சொன்னேன். நான் ஓர் தனிப் படகேறி மரக்கலம் சேர்ந்து என் நாட்டை நோக்கி பிரயாணமானேன். என் தேசத்துக்குச் சமீபமாக நான் வந்து கொண்டிருந்த ஸமாசாரம் என் தகப்பனுருக்குத் தெரிந்தது. அவர் குதிரை மீதேறி ஸவாரி செய்துகொண்டு என்னை எதிர் கொண்டழைக்க வந்தார். என்னைக் கண்டதும் வெகு அன்புடன் என்னைத் தமது மார்புடனணைத்துக் கொண்டார். நான் அவர் பாதங்களை வணங்கி பழைய தோட்டத்திலேயே நான் குடியிருக்கும்படி எனக்கு உத்தரவாக வேண்டும் என்று வேண்டிக்கொண்டேன். அதற்கு அவர் "அப்பா, என் கண்மணியே, அத்தோட்டம்நமக்கு துரதிர்ஷ்டத்தை விளைவித்த தோட்டம். அதை நான் சீராக வைக்க வில்லை. தற்காலத்தில் அது மனித வாஸத்துக்கே யோக்கியமில்லாமலிருக்கிறது. வேறு எவ்விடத்தில் உனக்கு வஸிக்க இஷ்டமோ அவ்விடத்தில் நீ வஸித்து வா, அல்லது இதே கோட்டைக்குள் என் கண்கள் முன்பாக உனக்கு வேண்டுமான இடத்தில் நீ வஸிக்கலாம். உன் னிஷ்டப்படி உனக்கு வேண்டிய தோட்டத்தை நீ உண்டு பண்ணிக் கொண்டு அதில் உலாவலாம்" என்றார். நான் எவ்வளவோ பிடிவாதமும் ஹடமும் பிடித்து அதே பழைய தோட்டத்தை அழகாகச் செய்வித்து இந்திரனுடைய நந்தனம் போல் செய்து அதில் குடி

பார்த்து வருகின்றீர்கள். நம்மிருவருக்கும் இப்பொழுது உண்டாய் விட்ட நட்பால் நான் ஒரு புத்திமதி சொல்லுகின்றேன். அது தங்களுடைய க்ஷேமத்துக்காகவே என்று கருதுங்கள்; நீங்கள் வைத்துக்கொண்டிருக்கும் மந்திர புஸ்தகத்தை வெகு ஜாக்கிரதை யாகப் பாதுகாக்க வேண்டும். சொற்பம் அஜாக்கிரதையாக மட்டும் நீங்களிருப்பீர்களே யானல் அதைக் கண்டு இக்கந்தவர்கள் அதை உங்களிடமிருந்து பிடுங்கிக் கொண்டு போய் விடுவார்கள்" என்றாள். அதற்கு நான் "சொற்பமேனும் அஞ்சாதே, அதை நான் என் பிராணனையே காப்பது போல் காப்பாற்றுவேன்" என்றேன்.

கடைசியாய் என்னை ஒருநாள் சனி பற்றிற்று. காமத்தால் கண் மூடப்பட்டவனாய் என்ன நடக்குமோ அது நடக்கட்டும். எத்தனை நாள் நான் ஸகிப்பேன் என்று சொல்லிக் கொண்டு அக்கட்டழகியின் கையைப் பற்றலானேன். உடனே ஆகாசத்திலிருந்து ஒரு சத்தம் "கொடுத்து விடு அப்புஸ்தகத்தை. ஈசனுருடைய கோர நாமம் அதில் எழுதப்பட்டிருக்கின்றது. இனி அப்புஸ்தகத்தை வைத்துக் கொள்ள உனக்கு யோக்யதை யில்லை" என்று உண்டாயிற்று. அச்சமயத்தில் என் புத்தி மயங்கி யிருந்த படியால் என் மார்புடன் கட்டிக் கொண்டிருந்த அப்புஸ்தகத்தை நான் எடுத்து யார் கையிலேயோ கொடுத்து விட்டேன். இன்னார் கையில் கொடுத்தேன் என்பதுகூட அத்திசையில் எனக்குத் தெரியாது. இவ்வாறு நான் காமத்தால் புத்தி மயங்கிச் செய்த காரியத்தை அக் கட்டழகி கண்டு "ஆகா! தன்னாசையையே பெரியதாகக் கொண்ட மானிட ஜென்மமே நீ செய்த சபதத்தை மறந்தாய், நான் சொன்ன புத்திமதியையும் மறந்தாய்" என்று என்னைக் கண்டித்து மூர்ச்சை போட்டு விழுந்தாள்.